


## பொருளடக்கம்

சுபகிருது, பங்குனி மீ 25உ ★ ஏப்ரல், 7உ 1963

# தீயினால் சுட்ட வடு மாறுது

புகைபிடிப்போருக்கு அழகு. பற்ற வைத்த சிகரெட்டை மேஜை போன்ற சாமான்கள் மீதோ, அலங்காரப் பொருள்களை ஒட்டியோ வைக்காமலிருத்தலே. சாம்பலைப் போக்குவதற்கு ஆஷ்ட்ரே இருக்க, வீணே மேஜை மீது தீய்ந்த வடுக்களையும், பளபளப்பான தளங்கள் மீது பழுப்பு நிறச் சுவடுகளையும் விளைவிப்பானேன்?

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

புகைபிடிக்கும் இங்கிதம்



Panama

20

CIGARETTES

இழுக்க
இழுக்க
இன்பம் —
இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 610 TAM — Greens' Advtg.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 36

# அசமஞ்சனுக்கு ஓர் அண்ணன்

ராமாயணத்தில் அசமஞ்சன் என்ற ஒரு ராஜகுமாரனைப் பற்றிய கதையுண்டு. அவன் ஊரிலுள்ள சின்னஞ்சிறு குழந்தைகளைப் பிடித்துக் கொண்டு போய்க் கிணற்றிலோ, குளத்திலோ, நட்டாற்றிலோ போடுவான் குழந்தைகள் மூச்சுத் திணறிச் சாவதைக் கண்டு பெரு மகிழ்ச்சியடைவான்.

இப்படிப்பட்ட சுபாவம் நமது நிதி மந்திரிக்கு ஏற்பட்டிருக்கிறது என்பது தெரிகிறது.

சில நாட்களுக்கு முன் தங்கக் கட்டுப்பாடு உத்தரவு பிறப்பித்துப் பாரத நாட்டில் லட்சக்கணக்கான பொற்கொல்லர்களைப் பசிக் கொடுமைக்கு உள்ளாக்கி நடுத்தெருவில் அலைய விட்டிருக்கிறார். அந்தப் பரிதாபச் செய்திகள் வந்தவண்ணம் இருக்கின்றன.

இதனிடையில் பட்ஜெட் பிரேரணைகளை வெளியிட்டு, தேசத்தையே திக்குமுக்காட வைத்திருக்கிறார். எக்ஸைஸ் வரிகளை அளவுக்கு மிஞ்சி உயர்த்தி, ஏழை மக்களின் அன்றாடத் தேவைக்கான மண்ணெண்ணெய் போன்ற பொருள்களின் விலைகளையெல்லாம் எட்டிப் பிடிக்க முடியாத அளவுக்கு உயர்த்தி விட்டார்.

அன்றாடத் தேவைக்கான சாமான்களின் விலைகள் இப்படி உயர்ந்தால் எப்படிக் குடித்தனம் நடத்தப் போகிறோம் என்று கவலைப்படுபவர்களுக்குக் 'கட்டாய சேமிப்பு' என்ற புதிய இடி தலையில் விழுந்திருக்கிறது.

செலவெல்லாம் போக மிஞ்சும் பணத்தைச் சேர்த்து வைப்பதற்குச் சேமிப்பு என்று பெயர். ஆனால் இப்போது மாதச் சம்பளம் வாங்குபவர்கள் முதலில் சேமிப்புக்கு அழுது விட்டு மிச்சத்தைக் கொண்டுதான் வீட்டு வாடகை, பால், மளிகை முதலிய செலவுகளைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். மிஞ்சும் சொற்பத் தொகையில் எப்படிச் செலவுகளைச் சமாளிப்பது என்ற கவலை அவர்களைப் பிடுங்கித் தின்று வருகிறது.

நமது நாட்டில் பெரும்பாலோர் நிலத்தை நம்பி வாழும் விவசாயப் பெருங்குடி மக்கள். சென்ற ஆண்டுகளில் சர்க்கார் நிலச் சீர்திருத்தம் என்ற பெயரில் செய்த குளறுபடிகள் காரணமாக, நிலத்தில் யாருக்கும் போதிய அக்கறை யில்லாது போனதினால் விளைவு சுருங்கி யிருக்கிறது. இதனால் வருவாய் சுருங்குகிறது.

இந்நிலையில் ராஜ்ய சர்க்கார் நிலத் தீர்வையை உயர்த்தி யிருக்கிறார்கள். இந்த நிலத்தீர்வையைப் பற்றிய கவலை ஓய்வதற்குள் சர்க்கார் பாங்குகளின் கெடுபிடி காரணமாக நெல் விலை வேறு ஏகத்தாறுகக் குறைந்து விவசாயப் பெருமக்கள் பெரும் கஷ்டங்களுக்கு உள்ளாகி யிருக்கிறார்கள். இந்நிலையில் மத்திய சர்க்காரின் கட்டாய சேமிப்புத் திட்டம் அவர்களுக்கு எப்படி யிருக்கும் என்பதைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை.

தொழிலதிபர்களைப் பார்ப்போம். அவர்கள் ஆறு சதவிகிதத்துக்கு மேல் அடையும் லாபத்தை வைத்து அதற்கு அசுர வரி விதிக்கப்பட்டிருக்கிறது. இந்த வரியின் காரணமாக எந்தத் தொழிலதிபருக்கும் ஊக்கமோ உற்சாகமோ இருக்கப் போவதில்லை. 'நாட்டில் தொழில்கள் பெருக வேண்டும்; உற்பத்தி பெருக வேண்டும்' என்று சொல்லிக் கொண்டே, அதற்கு நேர்மாறான விளைவை உண்டாக்கக்கூடிய அணுகுண்டாக இவ்வரியை நிதிமந்திரி போட்டிருக்கிறார். உற்பத்தி விருத்தியாவதற்குத் தடையாக லாபத்தை யெல்லாம் சர்க்கார் எடுத்துக் கொண்டால் தொழில் எவ்வாறு விருத்தி அடையும்?

இப்படி சமுதாயத்தின் அடிமட்டத்தில் வாழ்பவர், நடுத்தர வர்க்கத்தினர், மேல் வர்க்கத்தினர் எல்லோரும் நசித்துப் போகும் வழியில் நிதிமந்திரி வரி விதித்திருக்கிறார். இப்படிச் செய்துவிட்டு 'என்னைப் போல் வரி விதித்தவனே உலகில் இல்லை' என்று பெருமிதம் கொள்கிறார். பாரத மக்கள் அனைவரும் அழும்போது அவர் சிரிக்கிறார். அசமஞ்சனை விடப் பெரிய அசமஞ்சனாக விளங்குகிறார் மொரார்ஜி.

இந்த அசமஞ்ச மந்திரியையும் சர்க்காரையும் எதிர்த்து நாள்தோறும் கிளர்ச்சி செய்ய வேண்டும். நாலு பேர் கூடும் இடத்தில் பேச வேண்டும். கிராமந்தோறும் கூட்டங்கள் போட்டுக் கண்டனத் தீர்மானங்கள் நிறைவேற்ற வேண்டும். கேரளத்தில் வேண்டாத கம்யூனிஸ்ட் சர்க்காரை மக்கள் கிளர்ச்சி செய்து, விரட்டி ஓடச் செய்ததுபோல் இங்கும் செய்யலாம். சர்க்காரை விரட்ட வேண்டியதுகூட இல்லை. பாரத மக்கள் மனம் வைத்தால் வேண்டாத வரித் திட்டங்களை நிச்சயம் மாற்றிச் சுபிட்சத்துக்கு வழி வகுக்க முடியும்.

# என்ன சேதி ?

## உரப்பனூர் கலவரம்

உரப்பனூர் கலவர விஷயம் பொது மக்களிடையே பரபரப்பை உண்டாக்கியுள்ளது. சட்டசபையில் சுதந்திரக் கட்சி அங்கத்தினர்கள் இவ்விஷயத்தின் மீது 'வெளி நடப்பு' செய்ததிலிருந்து இவ்விஷயம் மக்களின் சிந்தையில் பாரமாகக் கனத்து வருகிறது. அப்பகுதியைச் சேர்ந்த திரு சசிவர்ணத் தேவர் அவர்களும், திரு மூக்கையாத் தேவர் அவர்களும் உரப்பனூர் கிராமத்தில் மக்கள் பீதியில் ஆழ்ந்திருப்பதாகவும், கிராமத்தில் மக்கள் குடியேறாமல், 'வெறிச்சோடி'க் கிடக்கிறது என்றும் அறிக்கை விட்டிருக்கிறார்கள். இந்நிலையில் சர்க்கார் ஒரு பகிரங்க நீதி விசாரணைக்கு இணங்கி அதற்கு ஏற்பாடு செய்வதே உசிதமான செயலாகும். இவ்விதம் செய்தால் மக்களிடையே எழுந்துள்ள சந்தேகங்கள் நிவர்த்தியாகும். சர்க்கார் அடையக் கூடிய நஷ்டமும் ஒன்றுமில்லை.

## தங்கமும் ஏற்றுமதியும்

மொரார்ஜி தேசாய்க்குப் புத்தி பேதலித்து விட்டதா என்ற சந்தேகம் உண்மையாகவே நமக்கு ஏற்படுகிறது. நமது நாட்டில் நகைகள் செய்து மேல் நாட்டுக்கு ஏற்றுமதி செய்து விற்கப்போகிறாராம். அங்கே விற்பனையாகுமா?

''மேனாட்டினருக்கு நகை ஆசை கிடையாது. அவர்களைப் போல் நீங்களும் நகை ஆசையற்றிருங்கள்; உங்கள் நகைகளையெல்லாம் கழற்றிக் கொடுங்கள்'' என்றெல்லாம் இந்தியப் பெண்களைப் பார்த்துக் கூறினார். இப்போது ஏற்றுமதி செய்து மேனாட்டுப் பெண்களுக்கு நகையாசை உண்டாக்கப் போகிறாரா, நிதி மந்திரி? அவர் காரியம் ஒன்றுமே புரியவில்லை.

உள் நாட்டு மார்க்கெட்டைக் கொன்று வெளி நாட்டில் இல்லாத மார்க்கெட்டைப் பிடிக்கப் பார்ப்பது என்ன வகை பொருளாதார யுக்தி என்பது புரியவில்லை. நமது நாட்டில் அதிகமாகத் தங்கம் இருந்தால் நல்லது. மக்களுக்குப் பாதுகாப்பாக இருக்கும்.

நிதி மந்திரி ஸ்ரீ மொரார்ஜி தேசாய் போகாத ஊருக்கு வழி தேடுகிறார். மட்டத் தங்கத்தை வைத்து நகைகள் செய்ய நம் மக்களுக்குக் கற்றுக் கொடுக்கப் போகிறார்களாம். இது என்ன பண்பாடு, என்ன நாகரிகம், இதில் என்ன லாபம்?

## நேருஜியின் உபசாரம்!




## கம்பர் விழா

வழக்கம் போல் இவ்வாண்டும் காரைக்குடியில் கம்பர் விழா

## தேர்தல் போட்டியும் தண்ணீர்ப் போட்டியும்







வைச் சிறப்பாக நடத்த ஏற்பாடுகள் செய்துள்ளனர் திரு சா. கணேசனும் அவருடைய நண்பர்களும். ஏப்ரல் 5-ந் தேதி தொடங்கி மூன்று நாட்கள் காரைக்குடியிலும் நான்காவது நாள் கம்பர் சமாதியுற்ற நாட்டரசன்கோட்டையிலும் விழா நடைபெறுகிறது. இவ்வாண்டு விழா, நீதிபதி பி. எஸ். கைலாசம் அவர்கள் தலைமையில் நடக்கிறது. டாக்டர் எஸ். கே. நாயர் தொடங்கி வைக்கிறார். பேராசிரியர் அ. சீநிவாச ராகவன், திரு கி. வா. ஜகந்நாதன், திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் முதலிய பெரும் புலவர்கள் பங்கு கொள்ளுகிறார்கள்.

கவிச் சக்கரவர்த்தியின் இவ்விழாவிலே கவியரசர் ரவீந்திரநாத் தாகூரின் நூற்றியிருபது பாடல்களை, பேராசிரியர் அ. சீநிவாச ராகவன் அவர்கள் தமிழ்ப் பாடல்களாக யாத்துள்ள ''கவியரசர் கவிதை'' என்ற நூலின் வெளியீட்டு வைபவமும் நடக்க விருக்கிறது. தமிழ் ரஸிகர்களுக்கு இது மற்றுமோர் இனிய விருந்தாக அமையும்.

கம்பன் பிறந்த ஊராகிய தேரழுந்தூரிலும் இவ்வாண்டு கம்பர் விழாவைச் சிறப்பாக நடத்த ஏற்பாடாகியிருக்கிறது. இவ் விழாவில் இரண்டு மந்திரிகள் கலந்து கொள்கிறார்கள் என்றாலே எவ்வளவு தர்பாருடன் நடக்கும் என்பதை ஊகித்துக்கொள்ளலாம்.

### ஆட்சிமொழியும் அநீதியும்

மேல் வகுப்பு உத்தியோகங்களுக்கென்று நடத்தப்படும் போட்டிப் பரீட்சைகளில் இந்தியிலாவது ஆங்கிலத்திலாவது அபேட்சகர்களின் இஷ்டப்படி எழுதலாம் என்று உத்தரவு போடப் போகிறார்களாம். பாரபட்சமற்ற சமமான பரீட்சைக்கு இடமே இருக்காது. இந்திப் பரிசோதகர்கள் அவர்கள் பாட்டுக்கு ''மார்க்'' கொடுப்பார்கள். பட்சபாதம் தலைவிரித்தாடும். இந்த அநியாயம் நடத்தப் போவதைத் தடுக்க வேண்டுமானால் நம்முடைய ஆட்சேபணைகளைத் தாராளமாகவும் தைரியமாகவும் வழ வழா வின்றி எடுத்துச் சொல்ல வேண்டும். நம்முடைய துரதிர்ஷ்டம் ஆங்கிலமே இருக்க வேண்டும் என்று வாதாடுகிறவர்களின் ஸ்தாயி கீழ் ஸ்வரமாகவே இருந்து வருகிறது.

பெரிய அநியாயத்தைத் தடுக்கவேண்டுமானால் தைரியமாக, நியாயத்தை எடுத்து வற்புறுத்த வேண்டும். நாட்டைப் பிரிக்க வேண்டும் என்று சிலர் சொல்லும் வாதத்துக்கும் இந்த மொழிப் பிரச்னைக்கும் ஒரு சம்பந்தமுமில்லை.

மொழிப் பிரச்னை நம்முடைய வாலிபர்களுக்கு அதாவது வருங்காலத்து மக்களுக்கு மிகவும் முக்கியமான விஷயம். அந்த விஷயத்தில் உதாசீனம் காட்டுவது நம்முடைய குழந்தைகளைக் கெடுப்பதாகும்.



# போகிற போக்கில்..

சிட்டுக்குருவி

திருப்பதியில் வதியும் ஏழுமலையானையும், திருச்செந்தூர் வேலவனையும் துணை கொண்டு தொழில் நடத்தும் முடி காணிக்கை மொத்த கண்டிராக்டரான முத்தண்ணா திரு மொரார்ஜி அவர்களுக்கு எழுதும் கடிதமாவது:

அன்புடையீர்,

நாகையில் ராஜாஜி அவர்கள் முடி, டாலர் சம்பாதிக்கும் எனக் கூறிய யோசனையைத் தாங்கள் தீவிரமாகக் கவனித்து வருகிறீர்கள் என ஊரிலே பேசிக் கொள்ளுகிறார்கள். சிறைக் காரனை விரட்ட முடியையும் தாங்கள் உபயோகப்படுத்தத் தயங்க மாட்டீர்களென அறிந்து சந்தோஷப்படுகிறேன். இந்தச் சந்தோஷத்திலேயே கீழ்வரும் எங்கள் ஒத்துழைப்பையும் தர விரும்புகிறேன்.

தென்னாட்டில் உள்ள திருக் கோயில்களுக்கெல்லாம் முடி சம்பந்தப்பட்ட கண்டிராக்டர் நான்தான். பரம்பரை பரம்பரையாக நாங்கள் இத்தொழிலில் ஈடுபட்டுப் பெரும் பிரக்யாதியும் பெற்றிருக்கிறோம். எங்களால் எடுக்கப்படுகிற முடியும், முடியப்படும் சவுரியும் ஜகப் பிரசித்தமானவை. நாங்கள் சாதா கம்பியிலிருந்து வெள்ளி, தங்கக் கம்பி வரை உபயோகித்து முடியை முடிந்து அற்புத சவுரிகளாக ஆக்கி அனுப்பி வைக்கிறோம். நாங்கள் போடுகிற முடி அவிழாது. அமெரிக்காவுக்கு இவற்றை அனுப்பலாம். அட்லாண்டிக் கடலில் அலசி எடுத்தாலும்கூடக் கம்பி கழலாது, முடியும் பிரிந்து விழாது என்று உத்தரவாதம் தருகிறோம். தங்களுக்குத் தேவையான அளவு சப்ளை செய்யக் காத்திருக்கிறோம்.

முத்தண்ணா.
முடி கண்டிராக்டர்.

(2)

முடி முத்தண்ணாவுக்கு,

தங்கள் கடிதத்துக்கு நன்றி. முடிகள் (கிரீடங்கள் அல்ல) விஷயத்தில் நாம் அக்கறை காட்டுவது உண்மையே.

சில விளக்கங்கள் தேவை. கம்பியால் முடியப்படும் உங்கள் சவுரியில் எத்தனை ரகம் உண்டு? ஒவ்வொரு ரகத்தின் விலை, உள்ளடக்க உருப்படிகள் எவ்வளவு? விவரங்கள் உடனே தேவை.

மொ. தேசாய்.

(3)

கனம் மந்திரிக்கு,

வணக்கம். மொத்தம் மூன்று ரகம்: விலைகள் ரூபாய் மூன்றரை, இரண்டரை, ஒன்றரை. உள்ளடக்கம் முறையே 2800, 2000, 1400. தங்கள் மேலான ஆர்டரை எதிர்பார்க்கும்

முத்தண்ணா

(4)

முடி மு. அண்ணாவுக்கு,

வணக்கம். அவசரம். பதில் தந்தியில் கோரப்படுகிறது. மூன்று ரகமில்லாது இரண்டு ரகமாக வைத்துக் கட்டினால் நாளொன்றுக்கு எவ்வளவு சப்ளை செய்யமுடியும்? மொரார்ஜி

(5)

கனம் மந்திரிக்கு,

வணக்கம். விசேஷ காலங்களில் தினமொன்றுக்கு ஒரு லட்சமும் சாதாரண நாட்களில் பத்தாயிரமும் சப்ளை செய்யப்படும். ஆனால் நிறைய ஆட்களை வைத்து வேலை வாங்குவதாலும், கம்பி விலைகள் பட்ஜட்டுக்குப் பிறகு அதிகரித்து விட்டதாலும் சற்று விலையும் ஏறியிருக்கும். முத்தண்ணா

(6)

முத்தண்ணாவுக்கு,

அதிக ஆட்களைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக மில்களில் செய்வது போல் யந்திரங்களைப் பயன்படுத்த முடியுமா? மொரார்ஜி

(7)

கனம் மந்திரிக்கு,

யந்திரங்களைப் பயன்படுத்த முடியாது. கையினால் செய்தால்தான் அழகு. முன்பு கூட.... சமஸ்தான ராணிக்குத் தங்கக் கம்பி உபயோகப்படுத்திக் கட்டிக் கொடுத்தேன். அவர்கள் அதன் அழகைக் கண்டு பாராட்டி முடிக்கு ரூ. நூறும், எனக்கு ஒரு தங்கத் தோடாவும் பரிசு கொடுத்தார்கள். ஆகவே கையே சிறந்தது. யந்திரம் சரிப்பட்டு வராது. முத்தண்ணா

(8)

முத்தண்ணாவுக்கு,

தங்கம் என்ற சொல்லே கூடாது. நீர் தங்கக் கம்பியை மறந்து விடும்.....ராணியார் கொடுத்த தங்கத் தோடா எத்தனை கிராம் எடை? எத்தனை காரட்? பதில் தரவும்.

மொரார்ஜி

(9)

கனம் மந்திரிக்கு,

மன்னிக்க வேண்டும். தங்கம் பற்றி இனி பேசவே இல்லை. வெளியூர் அனுப்புவதால் வெள்ளி உபயோகிக்கலாமா? சரியென்றால் ரூபாய் மூன்றரை என்பதை ரூபாய் ஐந்தாக உயர்த்த நேரிடும். முத்தண்ணா

(10)

முத்தண்ணாவுக்கு,

தங்கமும் கூடாது, வெள்ளியும் வேண்டாம். நீர் மறந்தும்கூட இனி இந்த வார்த்தைகளை வாயால் உச்சரிக்காதேயும். இரும்புக் கம்பியால் கட்டினாலே போதும். அப்படியானால் விலை என்ன? மொரார்ஜி

பி.கு.: உமது தோடா என்னாயிற்று?

(11)

கனம் மந்திரிக்கு,

இரும்புக் கம்பி போடலாம். ஆனால் தலையில் புண் வரும். தாங்கள் சொல்லியபடி இனி தங்கம், வெள்ளி என்ற பேச்சே பேச மாட்டேன். ஆனால் அதில் ஒரு சங்கடம். என் மூத்த மகள் பெயர் தங்கம். எப்படி அழைப்பதெனத் தெரியவில்லை. முத்தண்ணா

பி.கு.: தோடா காணாமற் போய்விட்டது.

(12)

முத்தண்ணாவுக்கு,

தலையிலே புண் வருவது பற்றிக் கவலை வேண்டாம். அமெரிக்கர் நல்ல களிம்பு வைத்திருப்பார்கள். உம் மகளை இனி 14 காரட் என்றழையும். இரும்புக் கம்பியை உபயோகப் படுத்தினால் விலை என்ன?

**மொரார்ஜி**

பி.கு.: தோடா களவு போனதற்கு போலீசில் புகார் செய்திருந்தால் நகலை அனுப்பும்.

(13)

கனம் மந்திரிக்கு,

இரும்புக் கம்பியோடு 3 ரூபாய்க்குத் தரலாம். 14 காரட் என்று மகளை அழைத்தேன். என் பெரிய பையன் ஒரு குறும்புக்காரன். காய்கறி மார்க்கெட்டிலிருந்து 14 காரட்டுகள் வாங்கி என் மகளிடம் அனுப்புகிறான். **முத்தண்ணா**

பி.கு.: தோடா பற்றிய புகார் நகலும் காணாமற் போய்விட்டது.

(14)

முத்தண்ணாவுக்கு,

உம் மூத்த பையன் சுதந்திரக் கட்சியைச் சேர்ந்தவனாய் இருப்பான் போலிருக்கிறது. அதை விசாரிக்க சி.ஐ.டி. போட்டிருக்கிறேன். நீர் டில்லியிலே வந்து இந்தத் தொழிலைச் செய்ய முடியுமா? உம் தலைமையிலேயே "சிண்டு முடியும் போர்டு" என ஒன்று ஏற்படுத்தி உம்மைப் பிரதம கமிஷனராகவும் நியமிக்கத் தயார். உடன் பதில். **மொரார்ஜி**

(15)

கனம் மந்திரிக்கு,

சுவாமி, நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். சி.ஐ.டி. வந்ததிலிருந்து என் பையனைக் காணவில்லை. என் மனைவி அவன் ஓடிப்போனதற்கு நான்தான் காரணமென்று திட்டுகிறாள். பெயரை மாற்றியதிலிருந்து என் மகளும் பேசவில்லை. தயவுசெய்து என்னை விடுவித்துவிடுங்கள். சிண்டு முடியும் போர்டுக்கு வேறு யாரையாகிலும் கமிஷனராகப் போடவும். **முத்தண்ணா**

(16)

முத்தண்ணாவுக்கு,

தேசப் பாதுகாப்புக்காக நாம் எந்தக் கஷ்டங்களையும் ஏற்றுத்தான் ஆகணும். உமக்கு ஆயிரம் ரூபாய் சம்பளம் என்று போட்டாகிவிட்டது. உடனே அங்குள்ள வேலைகளை விட்டு விட்டு டில்லி வரவும். நீர் வரும் தேதியைக் குறிப்பிட்டால் உம்மை மூன்று ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் வரவேற்க வருவார்கள். அவர்கள் உமது ஆலோசகர்கள். இன்னொருவரை அமெரிக்க மார்க்கெட்டை அறிந்துவர வாஷிங்டன் அனுப்பியிருக்கிறேன். **மொரார்ஜி**




(17)

கனம் மந்திரியாருக்கு,

நீங்கள் நினைக்கிறபடி நான் வருவதற்கில்லை. மன்னிக்கவும். **முத்தண்ணா**

(18)

முத்தண்ணாவுக்கு,

சுத்த நான்சென்ஸ்! சிண்டு முடிகிற போர்டுக்கு நீர் வந்துதான் தீரவேண்டும். உங்கள் பகுதியில் நடக்கவிருக்கும் உப-தேர்தல்களுக்காக நான் அங்கு 18-ம் தேதி வரப் போகிறேன். நீர் என்னைப் பார்க்கவும். **மொரார்ஜி**

(19)

கனம் மந்திரிக்கு,

நான் காந்தியவாதி. சட்டைகூட அணிவது கிடையாது. இந்த நிலையில் சமூகத்துக்கு எப்படி வர முடியும்? மேலும் வீட்டில் கோப தாபங்கள் உச்ச கட்டத்திலிருக்கிறது. தங்களைக் காணுகிற செய்தி எட்டினால் ஆபத்து!

**முத்தண்ணா**

(20)

திரு முத்தண்ணாவுக்கு,

நிதி இலாகா காரியதரிசி எழுதுவதாவது: 18-ம்தேதிஉம்மைக் கனம் மந்திரி முன் ஆஜர்ப்படுத்த மாவட்ட போலீஸ் சூப்ரண்டெண்டுக்கும் கலெக்டருக்கும் உத்தரவுகள் போய்விட்டன. நீங்கள் வரும்போது சாம்பின் சவுரிகளுடன் வரவும். ராணி கொடுத்த தங்கத் தோடாவும் வந்தாக வேண்டும்.

**காரியதரிசி**

ஃ ஃ ஃ

இந்தக் கடிதத்தைப் பார்த்த முத்தண்ணா மூர்ச்சை போட்டு அது பல நாள் ஆகியும் தெளியாததால் பதில் கடிதம் எதுவும் போடவில்லை என்று தெரிகிறது. ஸ்ரீமதி முத்தண்ணா 18-ந் தேதிவரை 'மொரார்ஜி கண்டம்' இருப்பதாகத் திடமாக நம்பி ஏழுமலையானுக்கு முடிப் பிரார்த்தனை பண்ணியிருப்பதாகவும் பிரஸ்தாபம்.

# அறிவுக் கனலே, அருட் புனலே!

**ரா. கணபதி**

குமார்புகூர் திரும்பிய க்ஷுதிராம் சந்திரா சொல்லாமலே ஓர் அற்புதத்தைக் கண்டார். அந்த அற்புதம் சந்திராவேதான். பூர்ணிமை நிலவு போன்ற ஒரு சீதளமான காந்தி சந்திராவுக்கு மெருகிட்டிருந்தது. பூர்ணிமை சந்திரனின் கனிவு போல அவளிடமும் தாய்மை கனிந்து கனத்துக் கிடந்தது. ஏதோ இந்த உலகத்துக்கெல்லாம் தான் தாய் என்பது போன்ற ஒரு கனிவுப் பெருமிதம் அவளிடம் பூத்திருப்பதைக் கண்டு க்ஷுதிராம் அதிசயப்பட்டார்.

அவருடைய பூஜைக்கு அவள் கைங்கரியம் செய்யும் போது இந்த அதிசயம் துல்லியமாகத் தெரிந்தது. 'கைங்கரியம்' என்ற பதத்தால் அவளுடைய செய்கைகளைக் குறிப்பிடுவதே தவறு போல க்ஷுதிராமுக்குத் தோன்றியது. அவர் பூஜிக்கும் ராமேசுவரனையும் ரகுவீரனையும் சீதளாதேவியையும் கூடச் சந்திரா தான் பெற்றுப் போட்ட குழந்தைகளைப் போல எண்ணிச் செல்லம் கொடுத்து உரிமை பாராட்டுவதாகவே அவருக்குத் தோன்றியது. 'இதென்ன விந்தை! பய-பக்தி என்று சேர்த்துச் சொல்வதற்கேற்ப, தெய்வங்களிடம் பக்தியோடு பயமும் கொண்டிருந்த சந்திரா அவர்களிடம் இவ்வளவு சகஜ மனப்பான்மை கொண்டது எப்படி?'

''நான் ஏன் இப்படி மாறியிருக்கிறேன் என்பது எனக்கே ஆச்சரியமாகத்தான் இருக்கிறது'' என்றாள் சந்திரா தன் பதிதேவரிடம். எதையும், யாரிடமும் கூறி விடும் கபடமற்ற சந்திரமணி, அதைத் தொடர்ந்து தன்னுடைய அற்புத அநுபவங்களையெல்லாம் தன் அன்புக்குரிய கணவரிடம் கூறலானாள்.

க்ஷுதிராம் கயைக்குச் சென்றிருந்தபோது ஒரு நாள் ஆலய வாசலில் நின்றபடி சந்திரமணி தன் அருமைத் தோழி தனி என்பவளிடம் பேசிக் கொண்டிருந்தாள். சட்டென்று ஏதோ ஓர் ஒளி அவளது திருஷ்டியை ஆலயத்துக்குள் இழுத்தது. அங்கே சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடத்திலிருந்து ஒரு ஜ்வாலை வீசுவதைக் கண்ட சந்திரா அதனைத் தனியிடம் கூற எண்ணிய போதே அவளுடைய வாய் தடைப்பட்டது. சமுத்திரத்தில் மூழ்கியவர்களால் பேச முடியுமா, என்ன? ஓர் ஒளிக் கடலில் தான் முழுகிக் கொண்டிருப்பதாக உணர்ந்தாள் சந்திரா. ஆலயத்துக்குள் கண்ட ஜோதிதான் தன்னைச் சுற்றிலும் அலைகளாக மோதுகிறது என்று புரிந்து கொண்டாள் அவள். இதோ, தன்னைச் சுற்றியிருந்த அந்த அலைகள் தனக்குள்ளேயே ஊறிச் செல்வதையும் உணர்ந்தாள். தன் உடலுக்குள் ஒரு தீபம் அடக்கமாவதை எண்ண மாட்டாமல், நினைவிழந்து கீழே சாய்ந்தாள் சந்திரா.

பிரக்ஞை வந்தபோது இந்த அற்புதத்தை அவள் தனி, பிரஸன்னா ஆகியவர்களிடம் சொன்னாள். சந்திரா 'ஒரு மாதிரி' என்ற தங்கள் பழைய அபிப்பிராயத்தை அவர்கள் இப்போது அவளிடமே சொன்னார்கள். ''வேறு யாரிடமும் இப்படியெல்லாம் சொல்லி வைக்காதே'' என்று அவளுக்குப் 'புத்தி' சொன்னார்கள்.

ஆனால் அவளால் எப்படித் தன் நாதரிடம் அதனை மறைத்து வைக்க முடியும்?

''நிஜமாகச் சொல்கிறேன் ஸ்வாமி! இப்போதுகூட என் வயிற்றில் அந்தத் தீபம் இருப்பதாகவே தோன்றுகிறது'' என்றாள் சந்திரா க்ஷுதிராமிடம்.

தனியும், பிரஸன்னாவும் எண்ணியது போல க்ஷுதிராமும் எண்ணிவிடுவாரா? கயையில் அவர் கண்ட கனவு அவரது உடம்பின் ஒவ்வோர் அணுவிலும் நனவாகப் பிரதித்வனியிட்டது.

''இந்த வீட்டில் ஒரு சிறிய குழந்தை விளையாடப் போகிறது சந்திரா! கயையில் கதாதரன் எனக்குத் தெரிவித்தான்'' என்று கூறத் தொடங்கிய அவர் சட்டெனப் பேச்சை மாற்றினார்: ''தனியும், பிரஸன்னாவும் சொன்னது சரிதான். நீ யாரிடமும் இதையெல்லாம் பற்றிப் பேசாதே'' என்றார்.

ஸ்ரீ பரமஹம்ஸ ராமகிருஷ்ணரின் நேர் சிஷ்யரான ஸ்வாமி சாரதா நந்தாஜி மஹராஜ் இயற்றியுள்ள ''ஸ்ரீ

ராமகிருஷ்ண லீலா பிரஸங்கம்'' என்ற கதையமுதில் இந்த நிகழ்ச்சிகள் யாவும் கூறப்படுகின்றன. குருதேவரே அவ்வப்போது கூறியவற்றிலிருந்தும், அவர் வாழ்ந்த இடங்களிலிருந்த முதியவர்கள் கூறியவற்றிலிருந்தும் வடித்தெடுத்த சாறு, சாரதாநந்த சுவாமி எழுதியுள்ள இந்த சத்திய சரிதம்.

இன்னும் பல அதிசயங்களை யெல்லாம் க்ஷுதிராமிடம் கூறினாள் சந்திரமணி. அவை எப்படியாயினும் அவற்றை விட அதிசயமான மாறுதல்கள் அவளிடம் தென்பட்டன.

நாலைந்து மாதங்களுக்குப் பிறகு, கமார்புகூர் பெண்கள் நாற்பத்தைந்து வயசுக்கப்புறம் சந்திரா கர்ப்பவதியாகி யிருப்பதைக் கண்டு அதிசயித்தார்கள். அவளுக்குப் பேரழகிட்டிருப்பதைக் கண்டு வியந்தார்கள். 'இவள் நல்லபடியாகப் பெற்றுப் பிழைக்க வேண்டுமே' என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

இப்போது, பார்த்தவிட மெல்லாம் தேவ தேவியரைக் கண்டாள் சந்திரா. அவர்களின் திவ்ய சரீரத்திலிருந்து பெருகி வீடு முழுவதையும் நிரப்பும் நறுமணங்களை மோந்தாள். இதுவரை அவள் மோந்திராத புதுப் புது மணங்களாக அவை இருந்தன. அவர்களின் சுந்தர கண்டங்களிலிருந்து பெருகும் மதுர நாதம் இல்லமெங்கிலும் எதிரொலிப்பதைக் கேட்டாள்; இதுகாறும் அவள் கேட்டிராத இனிமைகள் அதனில் நிறைந்திருப்பதை உணர்ந்தாள். இவற்றை விட விந்தையாக அவள் கண்களுக்குப் புலனாகும் தேவ தேவியரில் பலருமே அவள் இன்னார் என்று அறிந்திராதவர்களாக இருந்தார்கள்.

''நான் கேட்ட கதைகளில் இந்த மாதிரித் தேவதைகளைப் பற்றி வர்ணனை இருந்ததில்லை. நான் பார்த்த படங்களில் இதுபோன்ற தெய்வங்கள் இருந்ததேயில்லை. அப்படிப்பட்ட தெய்வங்களெல்லாம் எனக்கு இப்போது தெரிகின்றன ஸ்வாமி!'' என்று க்ஷுதிராமிடம் கூறினாள் சந்திரா.

''இப்படித்தான் இன்றைக்குக் காலை அன்னத்தின்மீது உட்கார்ந்து கொண்டு ஒரு தெய்வம் வந்தது. நல்ல வெய்யி



வில் அந்தத் தெய்வத்தின் முகம் கன்றிப் போயிருந்ததைப் பார்க்க எனக்கு ரொம்பப் பரிதாபமாக இருந்தது. பரிதாபத்தோடு ஒரே பரிவுமாகிவிட்டது. ''அன்னத்தின் மேலேறி வரும் சின்னஞ்சிறு தெய்வ மகனே! வெய்யிலில் கன்றிப் போயிருக்கிறாயே! நேற்றைய சாதத்தில் நீருற்றிய பழைய அமுது வைத்திருக்கிறேன், சாப்பிட ஓடி வா' என்று கூப்பிட்டேன். அந்த இளம் பிள்ளை இளம் சிரிப்பொன்று சிரித்தான். ஏதும் பேசாமலே எங்கோ எப்படியோ மறைந்து விட்டான். எனக்கு ஒன்றுமே புரிய மாட்டேனென்கிறது ஸ்வாமி! கோஸாயியினுடைய ஆவிதான் என்னைப் பிடித்துக் கொண்டிருக்கிறதோ என்னவோ?'' என்றாள் எளிமையின் உருவமான சந்திரமணி.

சுகலால் கோஸ்வாமி என்ற பெரியாரொருவர் கமார்புகூரில் வாழ்ந்து காலமாகியிருந்தார். அவருடைய ஆவி மகிழ மரமொன்றில் வசித்து வருவதாகக் கிராமவாசிகள் நினைத்து வந்தார்கள்.

சந்திராவின் கலக்கத்தைக் கண்ட க்ஷுதிராம் அதனைத் தீர்ப்பதற்காகத் தாம் கயையில் கண்ட கனவை சாங்கோபாங்கமாகக் கூறினார். 'இந்தக் குடிசையில் வைகுண்டராஜன் வந்து வசிக்கப் போகிறான் போலிருக்கிறது' என்று உள்ளம் கரைந்து கூறினார்.

சந்திராவின் உதரம் நிறைந்தது; இதயமும் நிறைந்தது. ரகுவீரன் பூஜைக்கு சாமக்கிரிகள் எடுத்து வைக்கும்போதே ஓர் இன்ப ஓய்ச்சல் கண்டது அவளுக்கு. பிறக்கப் போகும் புது முகத்தைக் காண ஆவல் கொண்டாள் அவள். பூஜை ஆயிற்று. அதன்பின் போஜனமாயிற்று. பகல்போது தூங்கப் போயிற்று. எல்லோரையும் தூங்க வைக்கும் இரவு வந்து விளையாடிற்று. இதையெல்லாம் ரம்மியமானதொரு அசக்தியுடன் ரசித்து வந்த சந்திரா இரவும் விடைபெறும் சமயத்தில் தனியைக் கூப்பிட்டாள்.

தனி அவளைத் தாங்கிச் சின்னஞ் சிறு அறை ஒன்றுக்கு இட்டுச் சென்றாள். அந்த வீட்டில் பூஜை அறை தவிர ஓலை வேய்ந்த இரண்டு அறைகளும் சமையலிடமும் உண்டு. ஒதுக்குப்புறத்தில் உள்ள ஒரு சிறிய அறையில் நெல் புழுக்கும் அடுப்பும் உரலும் போட்டிருக்கும். கண்ணன் அவதரித்த காராக்கிருகத்துக்கும் இயேசுநாதன் தோன்றிய தொழுவத்துக்கும் அது குறைந்துவிடவில்லைதான்.

சித்திரம் வரையும் முன் ஓவியர் தூரிகையால் தீற்றிப் பார்ப்பது போல் ஜகன்மாதா வானச் சீலையில் பிரபாத சித்திரத்துக்கு முன்பாக அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிவப்புக் கோடுகளைக் கீறிக் கொண்டிருந்தாள்.

பச்சைப் பசும் குழந்தையொன்றின் 'குவா குவா' ஒலி நிசப்தத்தைக் கீறிக்கொண்டு 'கண்டான் முண்டான்' அறையில் பரவியது. அதனை ஊருக்கு அறிவித்தது க்ஷுதிராம் வீட்டு வாசலில் எழுந்த சங்கொலி. பிள்ளை பிறந்தவுடன் சங்கநாதம் எழுப்புவது வங்காள நாட்டுப்புற வழக்கம். தூய வெண்சங்கின் கம்பீர ஒலியைக் கேட்ட ஆதவனும் கீழ்த்திசையில் தோன்றி விட்டான்— 'பொன் அகப்பட்டாலும் புதன் அகப்படாது' என்று சொல்வோமே அத்தகைய புதன்கிழமையைப் பிறப்பித்தபடி.



'நம் காலம் பயனின்றிக் கழிகின்றதே! பயனுள்ள ஒரு நாள் பிறவாதா?' என்று நாம் ஏங்குவது போல் காலமே ஏங்கிக் கொண்டிருந்தபோது அதைப் பயனுள்ளதாக்கப் பிறந்த நாள் 1836-ம் ஆண்டு மார்ச் மாதம் 17-ந் தேதி.

காலஸ்வரூபிணியானபடியால் தேவி காளி என்று அழைக்கப்படுகிறாள். அவளே காலகாலனின் சதியுமல்லவா? எனவே காலம் கடக்கும் நிலையைத் தனது அடியார்கள் மூலம் உலகுக்கு உபதேசிப்பவளும் அவளே. 'காலமாம் வனத்தில் அண்டக் கோலமா மரத்தின் மீது ரீங்காரமிட்டுலவும்' அந்தத் தேவி தன் அரும் பெரும் பக்தர் ஒருவரைக் காலச் சக்கரத்துக்கு அருளி விட்டாள்!

க்ஷுதிராம் நாராயணனைக் கனவில் கண்டார். சந்திரமணியோ சிவத்திலிருந்து எழுந்த செழுங் கொழுந்தைக் கண்டாள். ஹரியும் ஹரனும் ஒன்று என்று அறிந்தவர்கள் சொல்வார்கள். அறியாதவர்களுக்காக அவ்விருவரையும் ஓர் உறவு முறையில் இணைத்துக் காட்டுபவள் அன்னை. ஒருவனுக்குச் சோதரியாகவும் இன்னொருவனுக்குப் பத்தினியாகவும் இருப்பவள் அவள். பரமஹம்ஸர் யாருடைய அவதாரமாயினும் அம்பிகையின் பணியைச் செய்யவே பிறந்தவர் அல்லவா?

சந்திராவும் க்ஷுதிராமும் குழந்தையின் முகத்தைக் கண்டு மகிழ்ந்தது அதிகமா, மறந்தது அதிகமா என்று நாம் சொல்ல முடியாது. ஆம், தாங்கள் கண்ட சூசகங்களின் உட்பொருளை அவர்கள் மறந்திரா விட்டால் இந்தக் குழந்தையை எப்படிப் பிள்ளையாகப் பாவித்து வளர்த்தெடுக்கமுடியும்?

சுந்தர மலர்க் குவியலாக இருந்த குழந்தையைத் தங்கள் சம்பிரதாயப் படி வெளி உலகுக்குக் கொண்டுவந்தனர் பெற்றோர். குழந்தையின் ஜனன முகூர்த்தத்தை யொட்டி அதற்கு சம்பு சந்திரன் என்று நாமகரணமிட்டார் க்ஷுதிராம். என்றாலும் கயாபதியின் பெயரில் குழந்தையைக் கதாதரன் என்றே அழைக்க எண்ணினர்.

நன்னாத காலத்தில் சந்திரா பெற்ற அந்தப் பிள்ளை ஊருக்கெல்லாம் செல்லமாக வளர்ந்தது. பெண்டுகளின் கூட்டம் க்ஷுதிராமின் வீட்டில் அதிகரித்தது. ''நாங்கள் என்ன செய்வோம்? எங்கள் கால் இங்கே இழுக்கிறதே! வசியக்காரனாக இருக்கிறான் இவன்'' என்று கூறிக் குழந்தையைஅவர்கள் கொஞ்சுவார்கள்.

குழந்தை பிறந்த பின் சந்திரா தெய்வங்களிடம் கொண்டிருந்த தாயுணர்ச்சி தன்னால் மறைந்து விட்டது. பழைய பயபக்தியை விட அதிக பயத்தைக் கலந்து அவள் பக்தி செய்யலானாள். கதாதரனுக்கு என்ன தீங்கு நேர்ந்து விடுமோ என்று ஓயாமல் பயந்து, பிரார்த்தித்து வந்தாள் அவள்.

அவனும் நல்லபடியாக ஐந்தாண்டுகளைக் கடத்தி விட்டான்.

அதற்குள் அவன் தன் வயோதிகத் தந்தையின் மடியில் உட்கார்ந்து கொண்டு எவ்வளவோ கற்றுக்கொண்டு விட்டான் — ஸ்தோத்திரங்கள், தெய்விகக் கதைகள், இப்படி. கற்றதை நீண்ட நாளானாலும் மறக்காமல் நினைவில் வைத்திருக்கும் ஆற்றல் அவனுக்கு இருந்தது. அதே சமயத்தில் சில விஷயங்களைக் கற்கவே மறுக்கும் பிடிவாதமும் இருந்தது. க்ஷுதிராமுக்கு அந்திய காலத்தில் பிறந்த மகனைக் கண்டிக்க மனசில்லை. கதாதரன் ஐந்தாவது வயசில் பள்ளிக்குச் செல்லத் தொடங்கினான். கமார்புகூரில் தர்மதாஸ் லாஹா என்ற தனவந்தரின் வீட்டு வாசலில் அவர்கள் வீட்டுக் குழந்தைகளுடன் வேறு சில சிறுவர்களும் சேர்ந்து படித்து வந்தார்கள். இருந்தது ஒரே ஆசிரியர்தான். என்றாலும் பெரிய பிள்ளைகள் சிறிய பிள்ளைகளுக்குக் கற்பிக்கும் வழக்கம் அங்கு இருந்ததால் பள்ளி நல்ல முறையில் நடைபெற்று வந்தது.

அந்த நல்ல முறையை மாற்றி விட்டான் விஷமக் கொடுக்காக இருந்த கதாதரன். அவனுக்குப் பள்ளிப் படிப்புப் பிடிப்பதே கிடையாது. தன் தோழர்களையும் அழைத்துக் கொண்டு கிராமத்துக்கு வெளியே போய் விளையாடத்தான் அவனுக்குப் பிடித்திருந்தது. இதற்காக அவனைக் கண்டித்தால் நிச்சயமாகப் பலன் இராது என்பது க்ஷுதிராமுக்கு நன்றாகத் தெரியும். ஏனெனில் எதையாவது செய்யாதே என்று ஒருவர் சொன்னால் அதை முன்னிலும் தீவிரமாகச் செய்வது கதாதரனின் பழக்கம்.



எப்படியோ பெரிய மனசு பண்ணி வங்காள அரிச்சுவடியில் கொஞ்சம் கவனம் செலுத்தினான் கதாதரன். கொஞ்சம் கவனம் செலுத்தினாலேதான் அவனுக்குப் போதுமே! மொழிப் பாடத்தில் தேர்ச்சி பெற்றான். ஆனால் எழுத்தோடு இன்னொரு கண்ணாகச் சொல்லப்படும் எண் என்பதைப் பற்றி எண்ணமிடவே அவனுக்கு வேம்பாக இருந்தது. இருப்பதெல்லாம் ஒன்றுதான் என்று வருங் காலத்தில் சொல்லப் போவதால்தானோ என்னவோ இரண்டு, மூன்று என்று கூட்டுவதும் கழிப்பதும் பெருக்குவதும் அவனுக்கு எரிச்சலாக இருந்தது.

கதாதரனுக்குப் பிறரைப் போலவே பேசி விகடம் செய்யும் திறன் பிள்ளைப் பருவத்திலேயே இருந்தது. ஊரில் ராமாயண, பாரத, புராணப் பிரவசனம் செய்பவர்களைப் போலெல்லாம் அப்படியே நடித்துக் காட்டுவான் அந்தத் துடுக்குப் பிள்ளை. அதே சமயம் ராமாயணத்திலும் பாரதத்திலும் புராணங்களிலும் நடிப்புக் கலவாத உண்

மையான பக்தியைப் பெற்ருன். தந்தையும் தாயும் மனங் குவிந்து பூஜிப்பதைக் கண்டு தானும் பூஜையில் ஆர்வத்தோடு கலந்து கொள்வான்.

மண் பொம்மை செய்பவர்களையும் சித்திரம் எழுதுபவர்களையும் அணுகி, அவர்களின் தொழிலை நுணுகிக் கவனிப்பான் குழந்தை கதாதரன். வீட்டுக்கு வந்தால் அமளி துமளிதான். தரையெல்லாம் சித்திர மயமாகிவிடும். தோட்டத்து மண்ணெல்லாம் அவன் கை வாகவத்தில் தேவ தேவியராக வீட்டுக்குள் வந்து விடுவார்கள்.

அச்சம் என்ருல் இன்னதென்றே அவனுக்குத் தெரியாது. அவர்கள் இல்லத்துக்கு வந்திருந்த க்ஷுதிராமின் சகோதரி ராம்சிலாவுக்குசீதளாதேவியின் ஆவேசம் வருவதுண்டு. அப்போது வீட்டில் உள்ளவர்கள் எல்லாம் பயந்து நடுங்குவார்கள். கதாதரனே என்ருல், ''அத்தைக்கு வரும் ஆவேசம் எனக்கு வந்தால் எவ்வளவு குஷியாக இருக்கும்!'' என்பான்.

இப்படியெல்லாம் இருக்கும் ஒரு அருதுருப்பையிடம் பெண்களுக்கு ஒரு தனிக் கவர்ச்சி இருக்கத் தானே செய்யும்? கமார்புகூரில் எந்த வீட்டில் என்ன பட்சணம் தயாராஞலும் சரி, அது ஆண்டவனுக்கு நிவேதனமாகுமோ, ஆகாதோ ஆஞல் கதாதரனுக்குப் போகாமலிருக்காது. எல்லாவற்றையும் வக்கணை சொல்லிச் சாப்பிட்டுத் தளதளவென்று புஷ்டியாக வளர்ந்து வந்தான் கதாதரன்.

மக்களிடமெல்லாம் ஒட்டிப் பழகி வந்த கதாதரன் மக்களையெல்லாம் விட்டுவிட்டு இயற்கையோடு இழைந்தும் பொழுதைக் கழிப்பான். குழலனைய குரலில் இசை பெருக்கிக்கொண்டு, தனது புரளும் கருங் குழலுடன் அந்தக் குழந்தை வயல்களிலும், ஓடைகளிலும், தோப்புத் துரவுகளிலும் வளைய வருவான். மண்ணில் நிலையாக நிற்கும் பயிர்களை வாயு தேவன் அன்புடன் கோதிவிட்டு அவைகளை அழகு அலைகளாக்கிச் செல்வதையும், அலைகள் அடித்துச் செல்லும்போதும் ஓடை நீர் நிலையான சாந்தி குலையாமலிருப்பதையும் உள்ள மொன்றிப் பார்த்துக் கொண்டேயிருப்பான் கதாதரன்.

எல்லாவற்றையும் விட வானத்தைப் பார்ப்பதென்ருல்தான் அவனுக்குப் பரம உற்சாகம். எங்கெங்கிருந்தெல்லாமோ அங்கு மேகங்கள் வந்து கூடுவதையும் அவை நிமிஷத்துக்கு நிமிஷம் மிகமிக நயமாக உரு மாறி வருகிற விசித்திரத்தையும் பார்த்துக் களித்துக் குதிப்பான் கதாதரன்.

கமார்புகூரில் இளம் பிள்ளைகளுக்கு அவல் பொரியை ஆகாரமாகக் கையில் கட்டிக் கொடுத்து அனுப்புவதுண்டு. 'சிறிய கூடைகளில் வைத்தோ அல்லது துணியில் முடிந்தோ அவலை நாங்கள் எடுத்துச் சென்று உண்போம்' என்று குரு மஹராஜ் கூறியிருக்கிருர். ஆடி மாதத்தில் ஒரு நாள் இவ்வாறு அவல் பொரியுடன் குழந்தைகள் வயலின் வரப்பு மீதாகச் சென்று கொண்டிருந்தார்கள். கதாதரன் தனது சிறு கூடையிலிருந்து பிடிப் பிடியாக அவலை எடுத்து வாயில் இனித்துச் சுவைத் தபடி இயற்கை எழிலையும் சுவைத்துக் கொண்டிருந்தான். அவனுடைய கண்கள் உள்ளத்தை ஈர்க்கும் வான மண்டலத்தைத் துழாவிக் கொண்டிருந்தன. துழாவியது வீண் போகவில்லை. மழைச் சூலுற்று அடர்ந்திருந்த கருமுகிலொன்று அவன் கண்களில் குளிமை கட்டிற்று. கருப்பு வண்ணத்தை ரசிக்கத் தெரிந்த பக்குவக் குழந்தை அவன். காளி மாதாவின் வண்ணமும் கருமையே அல்லவா? வெளி (space) காலம் (time) இரண்டுக்கும் உட்பட்டதுதான் பிரபஞ்சம். வெளியெனும் ஆகாயம் கறுத்ததாகத் தானே காண்கிறது? எனவே, காலமும் காலரூபிணியான தேவியும் கருமையாகக் கருதப்படுவதில் ஒரு விஞ்ஞான உண்மைகூட இருக்கிறதல்லவா?



கதாதரன் கண்ட குஞ்சுக் கருமேகம் எழும்பி எழும்பிப் பரவி ஆகாசச் சேலையின் அழகிய கரையை விஸ்தரித்துக் கொண்டேயிருந்தது. பிறகு கரை — சேலை என்ற பேதமின்றி, வான முழுவதும் கருமை படர்ந்து விட்டது. சில்லென்ற ஒரு காற்று கதாதரனின் உடலைச் சிலிர்க்க வைத்தது. அதே சமயத்தில் புவித்தாயே தன் மெய்யைச் சிலிர்த்துக் கொள்ள அதிலிருந்து வெண் பூந்துகள் தெறித்தாற்போல நூறு நூறு

நாரைகள் — பாலாடை போன்ற நிறமும், முறுகலும் கூடிய இறகு கொண்ட நூறு நூறு நாரைகள் — ஒரே வயகதியில் ஜிவ்வென்று வானில் பறந்தன. தமஸைக் கிழிப்பதற்காகச் செல்லும் ஸத்துவம் போல் கருவானத்தை நோக்கி அவை காற்று வெளியில் நீந்திக்கொண்டிருந்தன. காளி மாதாவின் கழுத்தில் சாத்திய கபால மாலை நெளிவது போலத் தத்திக் கொண்டிருந்தன. சிவ பெருமான் தமது சடாமுடியில் 'கொக்கிறகு சூடி நின்ற கொண்டாட்டக்' காட்சியாகவும் அதனை வர்ணித்து மகிழலாம்.

அந்தக் காட்சியிலேயே கதாதரனின் கண்கள் குத்திட்டன. பூதக் கண்ணால் மட்டும் பருக முடியாத எழிலாக அது இருந்தது. கண் எதனால் பார்வை பெற்றிருக்கிறதோ அந்த ஆத்மாவினாலேயே அதைக் காணும் உன்னத நிலை ஆறு வயசுப் பையனுக்குக் கைகூடிற்று. ஆத்மாவினால் காணும்போது காட்சி, காண்பவன் என்ற பேதமே கிடையாது. இரண்டும் லயமாவதைத்தான் மொழியில் சொல்லப் புகும்போது 'காண்பது' என்று உபசாரமாகச் சொல்கிறோம். கதாதரனின் உள்ளமும் அந்த நாரைகளைப் போல மேலே மேலே சென்று அந்த நாரைகளால் ஒருகாலும் பிடிக்க முடியாத முகில்களையும் தொட்டு அதற்கும் அப்பாலுள்ள வெளியில் கரைந்து விட்டது. அப்பாலுக் கப்பாலுள்ள அந்த வெளி இப்பாலுக்கு இப்பாலுள்ள இதயத்துள்ளேயே இருப்பதுதானே!

கையிலிருந்த அவல் பொரி வயலில் சிதறத் தடாலென்று கீழே விழுந்து விட்டான் கதாதரன். அவனைத் தூக்கிக் கொண்டு போய் வீட்டில் சேர்த்தனர் உடன் வந்தோர்.

சந்திராவும் க்ஷுதிராமும் பயந்து போய் தோஷம், திருஷ்டி என்றெல்லாம் கூறினர். பிரக்ஞை அடைந்த குழந்தை கதாதரனோ "ஏன் இப்படிப் பயப்படுகிறீர்கள்? எனக்குப் பயமாக இல்லையே! அப்படி மூர்ச்சித்து விழுந்தது ரொம்ப சந்தோஷமாகத்தானிருந்தது" என்று திரும்பத் திரும்பச் சொன்னான்.

பரவச நிலையை அதற்கு மேல் எப்படிப் பாலனால் விளக்க முடியும்?

விவேகாநந்தர் பதினாறும் வயசில் ராய்ப்பூர் செல்லும் வழியில் பெற்ற அநுபவம் ஆறும் பிராயத்திலேயே குருவுக்குக் கிடைத்து விட்டது. (தொடரும்)



மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் உருவப் படத்தைத் திறந்து வைக்கிறார்.

# அறம் காக்கும் வள்ளல்

தர்ம ரக்ஷாமணி கே. பாலசுப்பிரமண்ய அய்யர் அவர்களின் 71வது பிறந்த நாள் வைபவம் சென்னை மயிலாப்பூர் சீனிவாச சாஸ்திரி ஹாலில் சென்ற மாதம் 25-ந் தேதி மாலை ராஜாஜி தலைமையில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. மந்திரிகள் பக்தவத்ஸலம், வெங்கடராமன், சென்னை பல்கலைக் கழகத் துணைவேந்தர் ஏ. லட்சுமணசுவாமி முதலியார், டாக்டர் மு. வ., டாக்டர் வே. ராகவன், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான், செட்டிநாட்டு அரசர் முத்தையா செட்டியார், டாக்டர் செரியன் முதலிய பலர் பாராட்டுரை வழங்கினார்கள். காஞ்சி காமகோடி பெரியவர்கள் ஸ்ரீ பாலசுப்பிரமணிய அய்யருக்குச் சால்வையும், மந்திராக்ஷதையும் அனுப்பி ஆசிபுரிந்தார்கள்.

திரு சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் பொதுமக்கள் சார்பில் தமிழில் வாழ்த்துரை வாசித்தார். பம்பாயிலிருந்து பேராசிரியர் ஸ்ரீ சங்கர நாராயணய்யர் அனுப்பியிருந்த வாழ்த்தில் ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் வாழ்க்கையில் ஒரு ருசிகரமான சம்பவத்தை நினைவூட்டியிருந்தார்.

பாலசுப்பிரமணிய அய்யரின் தந்தையான மகான் வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள் காலமாவதற்குச் சில நாட்களுக்கு முன் மாளவியாஜிக்குப் பதினாயிரம் ரூபாய் அளிப்பதாக வாக்களித்திருந்தார். ஸ்ரீமான் கே. பாலசுப்பிரமணிய அய்யர் தந்தையின் ஈமக்கடன்களை முடித்தவுடன் தந்தை அளித்த வாக்கை நிறைவேற்றி வைப்பது நமது கடமை என்று முதற் பணியாக மாளவியாஜிக்குப் பதினாயிரம் ரூபாய் அனுப்பி வைத்தாராம். மாளவியாஜி கூட நினைவுபடுத்திக் கேட்காதபோது தாமே முன் வந்து அனுப்பியதை நினைவுகூர்ந்த போது சபையில் பலத்த கரகோஷம் எழுந்தது. இப்படிப் பல வாழ்த்துச் செய்திகள்.

ஸ்ரீ பாலசுப்பிரமணிய அய்யர் அவர்களின் தந்தையார் ஏற்படுத்திய சில அற நிலையங்களை, சம்ஸ்கிருதக் கல்லூரி, வெங்கடரமண வைத்தியசாலை போன்ற ஸ்தாபனங்களை, வெகு சிறப்பாகப் போற்றிப் பாதுகாத்து வரும் பெருமை ஸ்ரீ அய்யர் அவர்களைச் சாரும். "செய்நன்றியில் பெரியர் சிதையாதவர்" என்ற மணிவாக்கை நினைவுகூர்ந்து பலர் பாராட்டினார்கள்.

தலைமை வகித்த ராஜாஜி அவர்கள், எல்லா வகுப்பு மக்களிடையேயும் இனிமையாகவும், விட்டுக்கொடுத்தும் பழகும் அவரது பண்பைப் பெரிதும் பாராட்டிப் பேசினார்.

ஸ்ரீ பாலசுப்பிரமணிய அய்யர் அவர்கள் நன்றியுரை கூறியபோது தாம் எழுபத்தியோரு வயது வாழ்ந்தது வீணாகப் போகவில்லை என்பதை அறிந்து மகிழ்வதாகக் கூறினார்.

ஸ்ரீமான் பஞ்சாபகேசய்யர் நன்றி கூறினார். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி இரண்டு சுலோகங்களை இசைத்தபின் தேசிய கீதத்துடன் வைபவம் இனிது முடிந்தது.



தமிழ், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகியவற்றில் வாசிக்கப்பட்ட வாழ்த்துரைகள் அடங்கிய பேழையை ராஜாஜி ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யருக்கு அளிக்கிறார்.

எல்லைப்புற நாடுகள்



# திபெத்



பதின்மூன்றாவது தலாய் லாமாவின் காலம் முடிந்து விட்டது. ஆனால் அவர் இறந்துவிட்டதாகக் கூறலாமா? புத்த பகவானின் புனித ஆன்மா அந்தப் பூத உடலை விட்டுப் பிரிந்து சென்றது; அவ்வளவுதான். வேறு ஓர் இடத்தில் சின்னஞ் சிறு பாலகனாகப் பகவான் மீண்டும் அவதரிக்கத்தான் போகிறார். அந்தத் தெய்வீகப் பேரொளி எந்த இல்லத்தைச் சென்றடைந்து எந்தக் குழந்தையின் திருமேனியில் குடிகொள்ளப் போகிறதோ? இறைவனைப் பெற்றெடுக்கப் போகின்ற அந்தப் பாக்கியவதி யாரோ? இவையெல்லாம் யாருக்குத் தெரியும்? எப்படி ஊகித்துச் சொல்ல முடியும்? காலம் வரும்போது ஆண்டவன் தானாகவே தன் இருப்பிடத்தை அறிவிப்பான். அதுவரை, புதிய பதினான்காவது தலாய் லாமாவைக் கண்டு பிடித்து அவர் கல்வி கேள்விகளில் சிறந்த இளைஞனாக வளரும் வரை அவர் சார்பிலே ராஜ்யத்தை ஆள ஒருவரை நியமிக்க வேண்டியது தான். பின்னர் தலாய் லாமாவின் பிறப்பிடம் பற்றிய அறிகுறிகள் ஏதேனும் தென்படுகின்றனவா என்று விழிப்புடன் இருந்து கவனித்து வர வேண்டும்.

திபெத்திய தலைநகரான லாஸாவில் அறிவாற்றலில் சிறந்த மத குருமார்களான லாமாக்கள் அதிக நாட்கள்

இடது பக்கம்: (மேலே) தலாய் லாமா. கீழே: பாவங்களைச் செய்யும் மக்கள் அடுத்த உலகில் எத்தகைய பைசாசங்களைச் சந்திக்க நேரிடும் என்பதைத் திபெத்திய லாமாக்கள் இவ்வாறு வேஷமணிந்து நடன நாடகங்கள் நடித்துக் காண்பிப்பார்கள். இந்த நடனங்களுக்குத் தாளம் போடுகிற வேறு சில லாமாக்களை இந்தப் பக்கத்தில் மேலே காண்கிறீர்கள். வலப்புறம்: அமைதியான வாழ்க்கையைத் திபெத்தியர் விரும்பியபோதிலும் வீரர்களும் உண்டு. நடுவில்: மத குருமார்களே அரசியல் தலைவர்களாகவும் விளங்குவார்கள். டாஷி லாமாவும் அவரது காரியதரிசியும். கீழே: கன்னி மாடங்களில் இறைவனைத் தியானிப் பதிலேயே வாழ்நாளைக் கழிக்கிற பெண்கள் தலையை மொட்டை அடித்துக்கொண்டு பின் செயற்கைக் கேசத்தை அணிந்துகொள்வர்.

காத்திருக்கும்படி நேரவில்லை. வட கிழக்குத் திசையில் நூதனமான வகையில் மேகங்களின் அமைப்பைக் கண்டார்கள். அரண்மனையில் வடகிழக்குப் பக்கத்தில் ஒரு தூணில் நட்சத்திர வடிவில் திடுமென ஒரு காளான் பூத்திருப்பதையும் கவனித்தார்கள். எந்தத் திக்கில் சென்று புதிய தலாய் லாமாவைத் தேட வேண்டும் என்பதற்குத் தடையங்கள் கிடைத்துவிட்டன அவர்களுக்கு.

இதுமட்டுமா? தாற்காலிகமாக ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டவர் லஹமோய் லாட்ஸோ என்ற புண்ணிய தீர்த்தத்தின் பக்கலில் அமர்ந்து பிரார்த்தனைகளை நடத்தினார். அப்போது அந்தத் தெளிந்த ஏரி நீர்ப் பரப்பில் தீட்டிய ஓவியம்போல் ஒரு கோவிலையும் வீட்டையும் பார்த்துவிட்டு வர்ணித்தார். சுற்றிலுமிருந்த லாமாக்கள் அவர் கூறியவற்றைக் குறித்துக் கொண்டனர்.

பின்னர் அவர்கள் பல நாட்கள் பிரயாணம் செய்து கும்பம் என்னுமிடத்தில் தாங்கள் எழுதி வைத்துக் கொண்டிருப்பது போன்ற தோற்றமுடைய கோவிலையும் அருகே ஒரு கிராமத்தில் தாங்கள் தேடி வந்த வீட்டையும் கண்டு குதூகலித்தனர். ஆயினும் தாங்கள் ஏமாந்துவிடக் கூடாது, எச்சரிக்கையுடன் இருக்க வேண்டுமெனக் கருதி மாறுவேஷமணிந்து இல்லத்துள் புகுந்தனர். அங்கே வெளிப் பார்வைக்கு அவர்கள் எவ்வாறு தென்பட்டார்களோ அதற்கேற்ப மரியாதை நடந்தது. வேலையாள் வேஷத்திலிருந்த தலைமை லாமா பணியாளர்களின் இருப்பிடத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார். ஆனபோதிலும் என்ன? அந்தக் குடும்பத்தில் இரண்டு வருஷங்களுக்கு முன்னர் தான் உதித்திருந்த சிறுவன் அவரிடம் வந்துவிட்டான், பசுவைக் கன்று சென்றடைவது போல. அவர் மடியில் ஏறி அமர்ந்து கொண்டான். பதின்மூன்றாவது தலாய் லாமாவின் ஜபமாலையை அவர் தமது கழுத்தில் அணிந்திருப்பதைப் பார்த்துவிட்டு, அதைத் தனக்குத் தருமாறு கேட்டான் சிறுவன். மறுநாள் காலை அவர் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டபோது சிறுவன் தானும் உடன் வருவதாகப் பிடிவாதம் செய்தான். இரண்டு கைத்தடிகளைக் காண்பித்து அவற்றில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கச் சொன்னார்கள். சிறுவன் தனக்கு முன்னால் அரசாண்ட தலாய் லாமாவின் ஊன்றுகோலையே எடுத்துக் கொண்டான். இது போல் இன்னும் பல சோதனைகளிலும் தேறியதும் புதிய தலாய் லாமாவைத் தலைநகரமான லாஸாவுக்கு அழைத்துப் போனார்கள். அரண்மனையாகவும் அதே சமயத்தில் மத குருமார்கள் ஆண்டவனைத் தொழுதபடியே வாழ்ந்து வர ஏற்ற மடாலயமாகவும் அமைந்த பிரும்மாண்டமான போடாலாவுக்குச் சென்றார்கள். இங்கே அயல் நாட்டுப் பிரதிநிதிகளும் அறிவிற் சிறந்த லாமாக்களும், உயர்ந்த உத்தியோகஸ்தர்களும், உற்றாரும் சுற்றாரும் சூழ்ந்திருக்கச் சிறுவனைச் சிம்மாசனத்தில் அமரச் செய்தார்கள். மந்திரங்கள் ஜபிக்கப்பட்டன; பிரார்த்தனைகள் செலுத்தப்பட்டன. நாலரை வயதேயான பதினான்காவது தலாய் லாமா அனைவருக்கும் தமது ஆசியை அளித்தார். நாடெங்கும் குதூகலம், கொண்டாட்டம். திபெத்திய மக்களுக்கு வருங்காலம் பொன்னொளி பரப்பும் காலைக் கதிரவனைப் போல் பிரகாசமானதாய்த் தென்பட்டது — இருபத்துமூன்று வருஷங்களுக்கு முன்பு.

❀ ❀ ❀

**பா**ரத நாட்டில் அடைக்கலம் புகுந்து பஞ்சாபின் வடக்குப் பகுதியில் தர்மசாலா என்னுமிடத்தில் இன்று எளிய வாழ்க்கை நடத்தி வரும் இருபத்தேழு வயது நிரம்பிய பதினான்காவது தலாய் லாமாவைப் போன்று பரிதாபத்துக்குரிய வேறு ஒரு மனிதரை நாம் பார்க்க முடியாது; அவரைப் போன்ற வீரரையும் காண முடியாது. வீடிழந்து, நாட்டைத் துறந்து, தம்மைத் தெய்வமென மதித்துப் போற்றிய மக்களை விட்டுப் பிரிந்து அவர் தப்பி ஓடிவர நேர்ந்தது. ஆயினும் அவர் தைரியம் இழக்கவில்லை, நம்பிக்கை குன்றவில்லை. மத சம்பந்தமான ஆழ்ந்த படிப்புக்குச் செலவிடும் நேரம் போக எஞ்சியிருக்கும் சமயங்களில், அவர் விடாப்பிடியாகத் திபெத்தின் விடுதலைக்காகப் போராடி வருகிறார். சீன அரக்கர்களிடமிருந்து இந்நாட்டுக்குத் தப்பி ஓடிவந்த எழுபத்தையாயிரம் அகதிகளுக்காகப் பாடுபட்டு வருகிறார். அவர்களிடையே உள்ள ஐயாயிரம் குழந்தைகளைப் பராமரிப்பதில் முக்கியமாக அவர்களுக்குக் கல்வி புகட்டுவதில் — மிகவும் சிரத்தை கொண்டு உழைத்து வருகிறார்.

சகலத்தையும் பறிகொடுத்துவிட்டு வேற்று நாட்டுக்கு ஓடிவந்து தஞ்சம் புகுந்த நிலையிலும் **'என் நாடும் என் மக்களும்'** என்று தமது நூலுக்கு அவர் பெருமிதத்துடன் தலைப்புக் கொடுத்திருப்பதே நம் நெஞ்சை நெகிழச் செய்கிறது. அவரது துணிவைக் கண்டு அதிசயிக்க வைக்கிறது.

சில தினங்களுக்கு முன்னர் தலாய் லாமா திபெத்துக்குப் புதியதொரு அரசியல் நிர்ணயச் சட்டம் கூட வகுத்துக் கொடுத்திருக்கும் செய்தி வெளியானபோது தோல்வியை ஒப்புக் கொள்ளாத அந்தத் தீரருக்கு நம்மையுமறியாமல் தலை வணங்கினோம்.

தலாய் லாமா எப்படிப்பட்ட வீரராய் இருந்தென்ன? பனிப் போரில் ஆழ்ந்திருக்கும் உலகம் அவரைக் கைவிட்டு விட்டது. நடுநிலைமை வகிக்கும் நம் பாரத அரசினரும் அவரைக் கைவிட்டு விட்டனர். இங்குமங்குமாய்த் தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்கும் விதத்தில் குரல் எழுப்பியதுடன் சில நாடுகள் திருப்தி யடைந்தனவே தவிர திபெத்தியப் படுகொலைகளைத் தடுக்க முன்வரவில்லை. சொல்லொணா அக்கிரமங்களைப் புரிந்த சீனக் கொடுங்கோலர்களை வார்த்தைகளால்கூட விரட்டத் துணியவில்லை. தப்பி ஓடிவந்த அகதிகளுக்கும் அவர்களின் தெய்விகத் தலைவருக்கும் நாம் அடைக்கலம் அளித்தோம். ஆனால் அது போதுமா? உலக நாடுகளுள் எதனிடம் துரதிர்ஷ்டம் பிடித்த திபெத்துக்கும் துயரில் ஆழ்ந்திருக்கும் அதன் மக்களுக்கும் ஆதரவு கோரிப் பெறலாம் என்று யோசிக்கும் தலாய் லாமாவுக்கு ஊக்கம் அளிப்பதற்குப் பதிலாக, அவ்வாறு அவர் மனம் விட்டுப் பேசுவதைத் தான் விரும்பவில்லை என்பதாக

நமது அரசாங்கம் சந்தேகத்துக்கிடமின்றிக் காட்டிக் கொண்டிருக்கிறது.

1950ல் சீனக் கம்யூனிஸ்ட் படைகள் பெருவாரியாகத் திபெத்துக்குள் புகுந்த போது, 'காட்டுமிராண்டித்தனமான நடவடிக்கைகளால் எங்கள் தேசம் நாசமாவதை அனுமதிக்கலாகாது' என ஐ. நா. சபைக்குத் தலாய் லாமா விடுத்த உருக்கமான வேண்டுகோள் புறக்கணிக்கப்பட்டது, இந்தியப் பிரதிநிதியின் முயற்சியால்தான். அப்போது இரு தரப்பினரும் ஒன்றுகூடிப் பேசி ஓர் உடன்படிக்கைக்கு வர வாய்ப்பளிக்க வேண்டும் என்று நமது பிரதிநிதி வாதாடினார். இதன் பிறகு இரண்டு முறை 1959லும் 1961லும் இப் பிரச்னை உலக சபைக்குக் கொண்டு வரப்பட்டது. அப்போதெல்லாம் மனச்சாட்சியைக் கொன்றுவிட்டும், இந்தி — சீனி பாய்பாய் என்ற கோஷத்தையும் பஞ்ச சீலத்தையும் நினைவில் கொண்டும், செஞ்சீனாவைச் சங்கடத்துக்குள்ளாக்காத விதத்தில் இந்திய சர்க்காரின் ஐ. நா. பிரதிநிதிகள் நடந்து கொண்டதற்காகச் சீனா நமக்களித்த பரிசு வடக்கெல்லைப் படையெடுப்பு.

திபெத்தில் கம்யூனிஸ்ட் சீனா நன்கு காலூன்றிக் கொள்ள அனுமதித்து நாம் வாளாவிருந்ததனால்தான் இன்று நமக்கு மட்டுமல்ல, பர்மாவுக்கும் பாகிஸ்தானுக்கும் தென்கிழக்கு ஆசிய நாடுகள் பலவற்றுக்கும் ஆபத்தான சூழ்நிலை உருவாகியிருக்கிறது. எல்லைப்புற நாடான திபெத்தில் சீன கம்யூனிஸ்டுகள் கொண்டு வந்து குவித்திருக்கும் பட்டாளங்களுக்கும் போர்க் கருவிகளுக்கும் கணக்குச் சொல்வது சாத்தியமே இல்லை. மலைப் பிரதேசங்களிலும் சுலபமான போக்குவரத்துக்கு வசதியான ஏராளமான புதிய சாலைகளைச் சமைத்திருக்கிறார்கள். நவீன விமானக் கூடங்கள் மட்டும் பதினெட்டு அமைத்திருக்கிறார்கள் என்றால் அபாயத்தின் அளவினை எளிதில் ஊகிக்கலாம்.

செஞ்சீனப் படைகள் திபெத்திய மக்களை அடிமைப்படுத்தியதுடன் நில்லாமல் அழிக்கவும் செய்தபோது நமது அரசாங்கம் போதுமான அளவுக்குத் தன் எதிர்ப்பையும் வெறுப்பையும் காண்பித்துக் கொள்ளாதது ஏன்? ஒருவேளை நீதியும் நேர்மையும் நியாயமும் திபெத்தின் பக்கம் இல்லையோ? உண்மையை அறியத் திபெத்தின் வரலாற்று ஏடுகளைப் புரட்ட வேண்டும்.



ருஷ்யப் பிரமுகர் ஒருவரை வரவேற்கச் சீனப் பிரமுகர் பீகிங் விமான நிலயத்துக்குப் போனார். ருஷ்யர் விமானத்தை விட்டு இறங்கியதும் தமது பூட்ஸின் நூல் அவிழ்ந்துவிட்டிருப்பதை உணர்ந்து அதனைச் சரி செய்யக் குனிந்தார். அப்போது அவர் கால் சட்டையின் பிற்பகுதி கிழிந்து விட்டது. இதனைக் கவனித்த சீனர் அவசரமாக அவரை விமான நிலயத்தின் பிரமுகர்கள் தங்கும் அறைக்கு அழைத்துப் போனார். அங்கே சீனச் சிப்பந்தி ஒருவன் ருஷ்யருக்கு ஏற்ற புதிய பாண்டுடன் தயாராகக் காத்திருந்தான். ருஷ்யப் பிரமுகர் மகிழ்ச்சியும் ஆச்சரியமும் அடைந்து, "எனக்கு ஒரு 'பாண்ட்' தேவைப்படும் என்று உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டார். "சற்று முன்னால்தான் பி. பி. ஸி. ரேடியோ நிலயம் தங்கள் கால் சட்டை கிழிந்த விவரத்தை அறிவித்தது; அதைக் கேட்டுக் கொண்டிருந்தேன்" என்றான் சீனச் சிப்பந்தி.

சரித்திர காலத்துக்கும் முற்பட்ட நாட்களில் சீனாவையும் தென் இந்தியாவையும் பிரித்துவைத்தது ஒரு மகா சமுத்திரம். பின்னர் பெரிய பூகம்பம் போன்ற பேரதிர்ச்சியின் விளைவாகப் பூமியின் மேற்பரப்பில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. மூன்று முதல் ஐந்து மைல் வரை உயரமுள்ள இமயமலைத் தொடர் தோன்றியது. இதற்குத் தெற்கே நிலப்பரப்பு திடுமெனச் சரிந்து இந்தியச் சமவெளிப் பிரதேசமாகியது. ஆனால் வடக்கே நில மட்டம் அந்த அளவுக்குத் தாழவில்லை. உயரமான பீடபூமியாகவே அமைந்தது. நீண்ட காலத்துக்கு இங்கே மனித நடமாட்டமே இருக்கவில்லை. பின்னர் இங்குமங்குமாய்ச் சில நாடோடிக் கூட்டத்தினர் வந்தார்கள். அவர்களுக்கு ஆங்காங்கே பல தலைவர்களும் இருந்தார்கள். இந்தக் கூட்டத்தினரையெல்லாம் திபெத்திய தேசத்தவர் என ஒன்றாக்கியவன் நய-ட்ரி-ஸென்போ என்ற அரசன். இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே — புத்தபிரான் பூத உடலை நீத்த சமயத்தில் — திபெத்திய தேசம் எனத் தனியாக ஒன்று இருந்திருக்கிறது. இந்த அரசனுக்குப் பின்னர் நாற்பது தலைமுறையினர் திபெத்தை ஆண்டனர். இவர்களுள் இருபத்தெட்டாவது அரசனிடம் புத்த பிரானின் போதனைகள், உபதேசங்கள் அடங்கிய நூற் தொகுதி கிடைத்திருக்கிறது. அன்று முதலே புத்த மதம் திபெத்தில் வேரூன்றத் தொடங்கி விட்டது. இதற்கு முன்னால் திபெத்தில் 'பான்' என்று ஒரு மதம் நிலவி வந்தது. இம் மதத்தினர் பேய் பிசாசுகள், துர் நோக்கம் கொண்ட ஆவி வடிவங்கள் இவற்றில் நம்பிக்கை வைத்திருந்தனர். இம் மதத்தின் சில கோட்பாடுகள் புதிதாகப் புகுந்த புத்த மதத்துடன் கொஞ்சம் கலந்து போனாலும் இன்றைய 'லாமா மதம்' புத்த மதத்தின் முக்கியமான அம்சங்களை அடிப்படையாகக் கொண்டதே.

திபெத்திய அரசர்களுக்கும் சீன மன்னர்களுக்கும் இடையில் பல தடவைகளில் யுத்தம் நடந்திருக்கிறது; சமாதானமும் ஏற்பட்டிருக்கிறது. எல்லைக் கோடுகள் நிர்ணயித்து உடன்படிக்கைகளும் கல்தூண்களில் செதுக்கப்பட்டன. (அடுத்த இதழில முடியும்)

# தனி ஒருவனுக்கு உணவில்லை எனில்



வளமான பூமியானலும் வறண்டு கிடக்கும் வடகிழக்கு பிரேஸிலில் எப்.ஏ.ஓ. அளிக்கும் ஊக்கத்துடன் பாடுபடுகின்ற ஒரு விவசாயி.



ஆப்பிரிக்க நாடான டோகோவில் எப். ஏ. ஓ. வின் ஆதரவில் ஒரு கனடிய நிபுணர் நீர்வளம் நிலவளம் பற்றிய ஆராய்ச்சிகள் நடத்தி வருகிறார். கீழே: நைஜீரியாவில் எண்பது சத விகித மக்கள் விவசாயிகள். அங்கே எப். ஏ. ஓ. நிபுணர்களின் உதவியுடன் உருவான நவீனமானதும் வசதி மிகுந்ததுமான ஒரு கோழிப் பண்ணையின் சுத்தமான தோற்றம்.





பிலிப்பைன்ஸ் தீவுகளில் தோல் பதனிடும் தொழிலில் எப்.ஏ.ஓ.வினால் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. வாழ்வு மலர்ந்த தாயும் சேயும்.

ஹாங்காங்கின் ஒரு தோற்றம். இங்கு செஞ் சீனாவிலிருந்து வந்த இருபது லட்சம் அகதி களுக்கு எப். ஏ. ஓ. வாழ்வு அளிக்கிறது.







கராச்சிவாழ் மீனவர்களுக்கு அத்தொழிலில் நவீன முறைகளைப் பின்பற்றுமாறு எப். ஏ. ஓ. அளித்த பயிற்சியினால் அவர்களுடைய வருமானம் நானூறு சத வீதம் அதிகரித்திருக்கிறது. மீனவர்களுக்கான தனிப்பட்ட துறைமுகமும் அமைக்கப்பட்டுள்ளது. இயந்திரப் படகுகளும் மார்க்கெட் வசதிகளும் அளிக்கப்பட்டுள்ளன. மீன்களை ரகவாரியாக ஐஸ் பெட்டிகளில் வைத்து ஏற்றுமதி செய்கின்றனர்.

ஹாங்காங்கில் எப். ஏ. ஓ. குளங்களை அமைத்து அவற்றில் மீன் வளம் செழிக்கச் செய்து மீன்பிடிக்கும் தொழிலில், தப்பி வந்த சீன அகதிகளை ஈடுபட வைத்துள்ளது.



கத்தினை அழித்திடுவோம் என்றார் பாரதியார், ஒருவனுக்கு உணவு கிடைக்காமல் போகுமேயானால். அத்தனை கோபம் அவருக்கு. இன்று பேச்சு சுதந்திரம், வோட்டு சுதந்திரம் எனப் பேசினாலும் பசியிலிருந்து சுதந்திரம் பெறவில்லை. உலகில் பல்வேறு பாகங்களி லிருக்கும் மக்கள் முந்நூறு கோடி பேர் போதுமான உணவின்றி அவதிப் படுகிறார்கள். வருஷத்தில் இரண்டரைக்கோடி மக்கள் பட்டினியால் மடிகிறார்கள். இதனை உணர்ந்து ஐ. நா. வைச் சேர்ந்த உணவு விவசாய அலுவலகம் (F.A.O.) செய்துவரும் சில நற்பணிகளை இப்பக்கங்களில் காணலாம். சமீபத்தில் நம் நாட்டில் எப்.ஏ.ஓ. ஆதரவில் 'பசியிலிருந்து விடுதலை வாரம்' கொண்டாடப்பட்டது. ஜனாதிபதி விழாவை ஆரம்பித்து வைத்தது நினைவிருக்கலாம்.



ஹாங்காங்கில் அமைக்கப்படும் குளங்களின் மொத்தப் பரப்பளவு கடந்த இரண்டுவருஷங்களில் இருமடங்காகியிருக்கிறது. குளத்துக்குக் கரை கட்டும் வேலை நடைபெறுகிறது. கீழே: மெக்ஸிகோ நாட்டில் டொலுகா என்ற ஊரில் உழவு நடைபெறுகிறது. நவீன சாதனங்கள் இல்லாத விவசாயிகளுக்கும் எப். ஏ. ஓ. உற்பத்தி பெருக வழி காட்டுகிறது.





பம்பாய் ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி அய்யர் அவர்களின் குமாரி சௌ. புஷ்பாவுக்கும் பம்பாய் ஸ்ரீ எம். ஆர். கிருஷ்ண அய்யர் அவர்களின் குமாரர் சிரஞ்சீவி எம். கே. விஜயராகவன் அவர்களுக்கும் சமீபத்தில் பம்பாய் தமிழ்ச்சங்கம் ஹாலில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!




'தொண்டை மண்டலத்தில் தேவி காமாக்ஷி பொன்மாரி பொழிந்து வருகிறாள்' என்று ஸ்ரீமூக கவி பாடுகிறார். இப்படிப் பொன்மாரி பொழிந்த தேவி தொண்டை மண்டலத்தின் தலைநகராகிய காஞ்சீபுரியில் கற்சிலையாக மட்டும் இன்றிப் பொற்சிலையாகவும் எழுந்தருளியிருந்தாள்.

சுமார் இருநூறாண்டுகளுக்கு முன்பு ஆர்க்காட்டு நவாபுகளின் ஆதிக்கம் மேலோங்கி வரும் போது, காஞ்சீபுரத்தில் ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்தாபித்திருந்த திருமடம் தொண்டை மண்டலத்திலிருந்து சோழ மண்டலத்துக்குப் பெயர்ந்தது. இந்தத் திரு மடமும் ஸ்ரீ காமாக்ஷியின் ஆலயமும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை. மடத்தை ஸ்தாபித்த பகவத்பாத சங்கரரே தான் அன்னை காமாக்ஷியின் திருமுன்பு ஸ்ரீ சக்ர பிரதிஷ்டை செய்தவருமாவார். காமகோடி என்பது பீடத்துக்கும், தேவிக்கும் பொதுப்பெயராகும். எனவே விக்ரக நிக்கிரகர்களான அந்நியர் ஆட்சி பரவிய போது காமகோடி பீடாதிபராக இருந்தவர் மடத்தின் தலைநகரை மாற்ற நினைந்து காஞ்சிபுரியிலிருந்து புறப்பட்ட போது கச்சியம்பதியில் கோயில் கொண்டிருந்த காமாக்ஷியின் ஸ்வர்ண விக்கிரகத்தையும் உடன் எடுத்துச் சென்றார்.

தொண்டை மண்டலத்தின் நஷ்டம் சோழ மண்டலத்தின் பாக்கியமாயிற்று. சிறிது காலம் உடையார் பாளையம் ஜமீனில் அருள்பாலித்து வந்த ஆசாரியரும், அன்னையும் பிறகு, தஞ்சையில் ஆண்டு வந்த மகாராஷ்டிர மன்னர் பிரதாப சிம்மரின் அழைப்பைப் பெற்று அங்கு எழுந்தருளினர்.

தஞ்சை மேல வீதியில் மன்னர் ஓர் ஆலயம் எடுப்பிக்க, பொற் காமாக்ஷி அங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டாள். பிறகு ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகளின் திருமடம் கும்பகோணத்துக்கு மாறிற்று: ஆனால் தேவி காமாக்ஷி தஞ்சை ஆலயத்திலேயே நிரந்தரமாக உறைந்து விட்டாள். பல்லவர்களின் தலைநகரில் காமாக்ஷியும் பாண்டியத் தலைநகரில் மீனாக்ஷியும் உறைந்து வாழுவது போலச் சோழத் தலைநகருக்கும் ஒரு காமாக்ஷி கிடைத்துவிட்டாள். பொன்னான இதயமும் பொன்னான உருவமும் படைத்துத் தஞ்சையில் அடியாருக்குத் தஞ்சமளித்து வந்த அன்னை, சுந்தரத் தெலுங்கில் 'பங்காரு காமாக்ஷி' என்ற திவ்விய நாமமும் பெற்றாள். இந்த அன்னையை அர்ச்சிக்கும் பேறு பெற்ற அந்தணக் குடியைச் சேர்ந்தவர்தாம் காமாக்ஷி தாஸரும், சங்கீத திரிமூர்த்திகளில் ஒருவருமான ஸ்ரீ சியாம சாஸ்திரிகள்.

இரு நூறாண்டுகளுக்கு முன் எழுப்பப்பட்ட ஸ்ரீ பங்காரு காமாக்ஷி ஆலயத்தைப் புதுப்பிக்க வேண்டிய அவசியம் சமீபத்தில் ஏற்பட்டது. கலை வளர்த்துப் பெயரெடுத்த தஞ்சைபுரி மக்கள் மிகவும் நல்ல முறையில் கோயிலைப் புதுப்பித்திருக்கின்றனர். இப்போது இக்கோயில் ஜீர்ணோத்தாரணம் செய்யப் பெற்று, புதுப் பொலிவும், வனப்பும் பெற்றிருக்கிறது.

காமாக்ஷியாகவே பக்தர்களுக்கு அநுக்கிரகம் புரிந்து வரும் நம்முடைய காமகோடி பீடத்துப் பரமாசாரியர்களின் திரு உள்ளப்படி இம்மாதம் ஏழாம் தேதியன்று பங்காரு காமாக்ஷி ஆலயத்தில் கும்பாபிஷேகம் நடக்கிறது. இந்தக் கும்பாபிஷேக வைபவத்தின் தனிச் சிறப்பாக ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் இதனில் கலந்து கொள்கிறார்கள்.

எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்பு பல்லவத் தலைநகரை ஸ்ரீ சக்ர வடிவமாக மாற்றி நிர்மாணிக்கச்செய்து ஸ்ரீ ஆதிசங்கரர் நகரப் பிரவேசம் செய்து காமாக்ஷியின் சந்நிதியை அடைந்தார். அந்தக் கோலாகலத்தின் நினைவை இன்று சோழர் தலைநகரம் காணப் போகிறது: கும்பாபிஷேகத்தில் கலந்து கொள்ளும் பாக்கியசாலிகளெல்லாம் காணப் போகிறார்கள்.

# யார் துணை?

எஸ். ரங்கநாயகி

மீனு சில நாட்களாகவே கவனித்துக் கொண்டுதான் வருகிறாள். குமார் முன்னைப் போல் இல்லை. அவளோடு ஒட்டி ஒட்டி நொடிக்கு ஆயிரம் மீனு அக்கா என்று கூப்பிட்டுப் பேசிக் கொண்டிருந்தவன் இப்போது ஒதுங்கி நிற்க முயலுகிறான் என்றும் சொல்லி விட முடியாது.... ஏதோ சொல்ல வருபவன் தயங்கி நிற்பது போல் தெரிந்தது.

தயக்கம் என்றும் சொல்லிவிட முடியுமா?

''குமார், என்னடா, இது! இப்போதெல்லாம் ஆபீஸில் புதிதாக ஒன்றும் நடப்பதில்லையா?'' என்று கேட்டாள் மீனு.

குமார் அவளை ஏறிட்டு நோக்கினான். அவள் வேண்டுமென்றே பேச்சுக்கு இழுப்பதைப் புரிந்து கொண்டான். மீண்டும் கண்களைப் பத்திரிகையில் செலுத்தினான். ''எல்லாம் பழைய கதைதான் மீனு!'' என்று முணுமுணுத்து விட்டான்.

மீனுவும் அதற்கு மேல் பேச வில்லை. இரு பக்கங்களிலும் கரையிருந்தால் அல்லவா தண்ணீர் நடுவே சலசலத்து ஓடும்! கலகலப்பான பேச்சுக்கு வழியேயில்லாமல் நின்று விட்டது. மனமில்லாமலே அவள் கைகள் ஒரு புத்தகத்தை எடுத்தன.

சற்றுப் பொறுத்துக் குமார் எழுந்து வெளியில் சென்று விட்டான். சாதாரணமாக வெளியே போகும் போது குறிப்பிட்ட இடத்துக்குப் போவதாகச் சொல்லி விட்டுச் செல்பவனின் அந்த வழக்கமும் இப்போது நின்று விட்டது. 'எங்கேடா?' என்று கவா தீனமாகக் குரல் எடுத்துக் கேட்கக் கூடியவள், கேட்டுக் கொண்டிருந்தவள், இன்று மௌனமாகவே இருந்து விட்டாள். உள்ளுக்குள் மட்டும் வேதனை; கைநழுவிச் சென்று விடும் ஏக்கம்.

''மீனு!'' அழைப்புக் குரல் கேட்டது. மீனு திடுக்கிட்டு நிமிர்ந்தாள். எதிரே முகுந்தன் நின்று கொண்டிருந்தான்.

''ஓ, நீங்களா? வாருங்கள்!'' அருகிலிருந்த நாற்காலியைச் சுட்டிக்காட்டினாள்.

''குமார் இல்லையா?'' முகுந்தன் கேட்டான்.

அவன் சாதாரணமாகத்தான் கேட்டான். ஆனால் வேதனையைத் தூண்டி விடுவதுபோல் மீனுவுக்கு இருந்தது.

''இல்லை. வெளியே போயிருக்கிறான்'' என்று சுருக்கமாக விடை பகர்ந்தாள்.

''இன்னும் திரும்ப வில்லையாக்கும். லலிதாவுடன் புடவைக் கடையில் நுழைவதைப் பார்த்தேன். அவன் திரும்பியிருப்பான் என்ற எண்ணத்துடன்தான் வந்தேன்....''

மீனு திடுக்கிட்டாள். லலிதா! யார் அவள்? ஆபீஸில் யாரோ புதுப் பெண் ஸ்டெனோ டைப்பிஸ்ட் என்று சொன்னானே! அவளாக இருக்குமோ....?

''அப்படியானால் நான் வரட்டுமா?'' என்று முகுந்தன் எழுந்திருக்க முயற்சி செய்தான்.

மீனு அவனை நோக்கினாள். முகுந்தன் அங்கு அதிகம் வருவதையே நிறுத்திக்கொண்டு விட்டான். அப்படி எப்போதாவது வந்தாலும் குமார் இருக்கும் நேரமாகப் பார்த்துத் தான் வருவான். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போய் விடுவான்.

''குமார் இல்லா விட்டாலும் நீங்கள் என்னோடு சாதாரணமாகப் பேசிக் கொண்டிருப்பதை நான் தவறாக நினைக்க மாட்டேன், முகுந்தன்!'' என்று மீனு கூறினாள்.

இதே முகுந்தனோடு மணிக்கணக்காக அவள் எத்தனை நாட்கள் பேசியிருக்கிறாள்! இளமை பூத்த பூங்காவில், வசந்தத்தின் நறுமண நிழலில் எத்தனையோ காதல் கனிந்த இன்பப் பேச்சுக்கள். இருவருக்காகவுமே உலகம் என்று மகிழ்ச்சி பெருக்கிய நாட்கள்....எல்லாம் அவளுடைய விதவைத் தாயார் இருக்கும் வரைக்கும்தான். அவ்விருவரின் ஆனந்தம் மணப் பந்தலில் கூடப் போகும் நாளில் அவள் தாயார் இறந்துவிட, மீனு இப்படியொரு நிலையில் இறங்கி விடுவாள் என்று முகுந்தன் எதிர் பார்த்திருக்க வில்லை. தனது மண வாழ்வு தனது ஒரே தம்பி குமாரின் பாதுகாப்பைப் பாதித்து விடும் என்பது மீனுவின் அச்சம். இனி தன் ஒரே தம்பி குமாருக்காக வாழ்வு என்று சங்கல்பம் செய்து கொண்டு விட்டாள்.

முகுந்தன் மீண்டும் நன்றாக உட்கார்ந்தான். பொதுவாக எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசினான். மீனு நறுமணத்துடன் தேநீர் தயாரித்துக் கொண்டு வந்தாள். சுவைத்துப் பருகினான். கடையில் விடை பெற்றுச் சென்று விட்டான்.

முகுந்தன் சென்றதைப் பார்த்தபடியே நின்று கிடந்தாள் மீனு. அவன் வரும் நாட்களிலெல்லாமே ஏதோ ஏக்கம் சூழ்ந்து விட்டது போன்ற உணர்ச்சி தோன்றும். உதறித் தள்ளி விட்டு முகுந்தனோடு பேச உட்கார்ந்து விடுவாள். இன்றோ மனத்தில் மேலும் ஏதோ பாரம் அழுத்துவது போல் இருந்தது.

வேதனைப் படலமாக மனம் கனத்தது. ஆனால் அதை விரட்டியடிக்க அவள் விரும்பவேயில்லை.

இரவுதான் குமார் வீடு திரும்பினான். உற்சாகத்துடன் தான் காணப்பட்டான்.

''மீனு, நீ இன்னும் சாப்பிடவில்லையா?'' என்று குமார் கேட்டான்.

''எப்போதுமே உன்னோடு சேர்ந்துதானே சாப்பிடுவது வழக்கம்..''

''ஓ! ஆமா.....ம்..''

இருவரும் சாப்பிட்டனர்.

''மீனு....!''

''என்ன குமார்?''

''வந்து .... ஒன்றுமில்லை...'' சொல்ல முடியாத தவிப்பு.

மீனுவுக்கு அவன் தவிப்பில் ஏதோ நிம்மதி காட்டிய உணர்ச்சி. குமார் இன்னமும் அவளிடம் ஒட்டுதல் வைத்திருக்கிறான். அதனால்தான் அவளுக்கு விருப்பமில்லாத ஏதோ ஒரு விஷயத்தைக் கூறத் தவிக்கிறான்.

''மீனு! என் நல் வாழ்வில் நீ சுகம் காண்பதால்... அதாவது நான் சந்தோஷமாக இருப்பதையே நீ விரும்புவதால்....'' என்று கூறி நிறுத்தினான் குமார்.

மீனுவுக்கு அவன் சொல்லப்போவதுபுரிந்து விட்டது போல் இருந்தது. முகுந்தன் முன்னோடி காட்டி விட்டுச் சென்று விட்டான்.

குமாரே மீண்டும் பேச்செடுத்தான். ''மீனு! என் ஆனந்தத்திலேயே நீ முழு நாட்டமுள்ளவள் என்பதை அறிந்துதான் நான்... உன்னைக் கேளாமலே வாக்குக் கொடுத்து விட்டேன்.... என் ஆபீசில் லலிதா என்ற பெண் வேலைக்கு அமர்ந்திருப்பதாகச் சொன்னேனல்லவா? அவளும் நானும் விவாகம் செய்து கொள்ளப் போகிறோம். அவளுடைய பெற்றோர்கள் பம்பாயில் இருக்கிறார்கள். அவள் மட்டும் தனித்து ஒரு அறையில் இருக்கிறாள். எனக்கு ஆடம்பரமெல்லாம் பிடிக்காதென்று உனக்குத்தான் தெரியுமே! அதனால் நாங்கள் இருவரும் ரிஜிஸ்தர் விவாகம் செய்து கொள்ளப் போகிறோம். அவள் பெற்றோர்களும் வரப் போவதில்லை. என் நண்பன் ஒருவனை மட்டும் அழைத்துப் போகப் போகிறேன்.''



முதலில் தயங்கித் தயங்கிக் கூறியவன் பிறகு படபடவென்று கூறிவிட்டுக் கைகழுவ எழுந்துவிட்டான். கைகழுவி விட்டும் அவள் இருக்கும் இடத்துக்கு அவன் திரும்ப வரவில்லை. நேராகச் சென்று நாற்காலியில் அமர்ந்து கையில் பத்திரிகையைப் பிரித்து விட்டான்.

இரவு முழுதும் பொழுதைத் தள்ளுவது தான் அவளுக்குப் பெரும்பாடாக இருந்தது. தனிமையில் எங்கோ நிரிந்து திக்குத் தெரியாமல் மனம் கொந்தளிப்பது போலிருந்தது.

**ம**று நாள் காலை. குமார் அழகாக உடுத்திக் கொண்டான். கலியாணப்பிள்ளையாகக்கிளம்பி விட்டான். அவளிடம் ஆசிகள் பெற வேண்டும் என்ற நினைப்புக் கூட அவனுக்கு இல்லை.

''மீனு! நான் சாப்பிடத் திரும்புவது சந்தேகந்தான். அதனால் எனக்காகக் காத்திருக்காதே'' என்று கூறியபடி இறங்கிச் சென்று விட்டான் குமார்.

குத்துச் சிலையாக நின்று விட்டாள் மீனு. காரியாலயத்தில் தன் பணியைக் கூடச் சரியாகச் செய்ய முடியவில்லை.

இரவு வெகு நேரம் கழித்துத்தான் குமார் வீடு திரும்பினான், தனியாகத்தான். முகத்தின் மலர்ச்சி வாழ்வில் கண்டு விட்ட ஆனந்தத்தைத் தெரிவித்தது.

''குமார்.....!''

''என்ன அக்கா! அவளையும் ஏன் அழைத்து வரவில்லை என்று கேட்கிறாயா? அவளுக்கு ரொம்பக் களைப்பாக இருந்தது. அதனால் அழைத்து வரவில்லை.''

பதில் கூறாமலே வேதனையுடன் முகத்தை நிமிர்த்தினாள் மீனு.

டெலிபோன் ஆபீஸில் நேரம் சொல்லுகிற வேலைக்கு மனுப் போடப் போவதாய் என் தங்கை கூறியதும் என் மனத்திரையில் ஓடிய காட்சி:

''இப்போது நேரம் பத்து நாற்பத்தைந்து.''

''டயம் கேட்கலேடி! அவர் ஆபீஸுக்குப் போயிட்டார். பொழுது போகலே. உனக்குப் போன் பண்ணினேன். விஷயம் தெரியுமா? வத்சலா பதினாறு காரட்டிலே ஒரு வளையல் போட்டிருக்கா. சகிக்கலே....''



''கொஞ்சம் இரு. எவளோ டயம் கேட்டு அனுத்துக்கறான். இப்போது நேரம் பதினொன்று முப்பத்திரண்டு. ஆமாம், பாருவுக்கு இது எத்தனாவது மாசமாம் கேட்டியா? ஆண் குழந்தைதான் பிறக்கணும் இந்த மாசம். சற்று இரு... இப்போது நேரம் நாலு நாற்பத்தி எட்டு.... ரொம்ப டயப்படி காரியம் செய்து கிழிக்கிற மாதிரிதான் எல்லாரும் உனக்கு இரண்டு நிமிஷத்துக்கு ஒரு தடவை போன் செய்கிறார்கள்... ஆமாம், சிக்கிம் ராஜகுமாரனைக் கல்யாணம் பண்ணிண்டாளே ஒரு அமெரிக்கப் பெண் அவ போட்டோ பார்த்தியா மீனுக்கும் தனுக்கும்....''

''இப்போது நேரம் ஐந்து முப்பத்தைந்து கோமளா! எனக்கு 'டியூடி' முடிஞ்சு போச்சு. ஒரு நாள் சாவகாசமாப் பேசணும். வீட்டுக்கு வருகிறேன்!''

''மீனு, இங்கு ஒரே அறைதான் இருக்கிறது. உனக்கு அசௌகர்யமாக இருக்கும். அதனால் இரவு வேளையில் அவள் அறையிலேயே தங்கிவிடுவது எனத் தீர்மானித்து விட்டேன்...'' குமார் கூறினான்.

மீனு திடுக்கிட்டுத் தலையைத் தூக்கினாள். துளியும் சலனமில்லாமல் கூறிவிட்டானே அவன்! இதற்குள்ளாகவா இந்தப் பிரிவு ஏற்பாடு. அவளுக்குக் குமுறிக் குமுறி அழ வேண்டும் போல் இருந்தது.

நாட்கள் கழிந்து மாதமும் கழிந்தது. குமார் காலையும் மாலையும் வந்தான். இரவு மட்டும் தங்கவில்லை. பேச்செல்லாம் சகோதரியோடு ஒட்டின பேச்சாகவே இல்லை. வேதனையும், துயரமும் மீனுவின் உள்ளத்தை வாட்டி எடுத்தன.

அன்று மாலை லலிதா குமாருடன் வந்தாள். 'வா'வெனத் தலையை மட்டும் அசைத்தாள் மீனு. குமாரோ லலிதாவுக்கு விழுந்து விழுந்து உபசாரம் செய்தான். மூவரும் ஒன்றாகப் பேசிக் கொண்டிருந்த போதும், குமாரும் லலிதாவும் பல உள்ளர்த்தம் வைத்துப் பேசுவதாக மீனு கண்டாள். ஒவ்வொரு பேச்சிலும் செயலிலும் காதல் உணர்ச்சி வெளிப்பட்டது.

லலிதா கிளம்பிய போது குமார் மீனுவிடம் கூறினான். ''மீனு! இருவரும் சினிமாவுக்குப் போகப் போகிறோம். நேராக இங்கு வந்தால் நேரமாகி விடும். காலையில் வருகிறேன்'' என்று அவளிடம் விடைபெற்றுச் சென்று விட்டானே அவன்!

அவர்கள் சென்றதும் மீனு விக்கி விக்கி அழுது விட்டாள். தனிமை! யாருக்காகத் தன் ஆசாபாசங்களை அடக்கி, உலகில் தாய்ப் பறவை சிறகை மூடிக் காப்பது போல் காத்து அதிலேயே அமைதி காண விரும்பினாளோ, அவன் இன்று சிறகினை ஒடித்துக் கிழித்துப் போட்டு விட்டு ஓடி விட்டானே! குழந்தைப் பருவத்திலிருந்து அவனிடம் ஒட்டிக் கொண்டிருந்தவள், நேற்று கண்ட வடிவில் இன்பம் காண்கிறான். இதுதான் இயற்கையின் நியதியோ! அவனுக்காக மனத்தைக் கட்டுப்படுத்தியிருந்தவள், தனிமையைத் தாங்க முடியாது 'ஓ'வென்று அலறிக் கிடந்தாள்.

முகுந்தன் வந்தான். மீனு கண்களைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்தாள்.

''வாருங்கள்....!''

''மீனு, என்ன இது? ஏன் இப்படிக் கிடக்கிறாய்?'' — முகுந்தன் துடித்து விட்டான்.

''இல்லே....ஒன்றும் இல்லே...'' அவளால் பேசவே முடியவில்லை.

''மீனு! கண்களைத் துடைத்துக் கொள். நான் பிறகு வருகிறேன். என் உதவி உனக்கு என்றும் கிடைக்கும்....''

முகுந்தன் கிளம்பி விட்டான். ஓடிச் சென்று அவனைத் தடுக்க விரும்பினாள் மீனு.

''மீனு! நான் இப்போதே குமாரைத் தேடிப் பிடித்து வீட்டுக்கு அனுப்புகிறேன். உன் இந்த நிலையைக் கூறினால் அவன் ஓடி வந்து விடுவான்....''

மீனு எழுந்து வந்து தடுப்பதற்குள் முகுந்தன் இவ்விதம் கூறியபடியே படியிறங்கிச் சென்று விட்டான். ''வேண்டாம், வேண்டாம் முகுந்தன்!'' மீனு கூறியது அவன் காதில் விழுந்ததாகவே தெரியவில்லை.

மறு நாள் காலைதான் குமார் வந்தான். ''மீனு! முகுந்தன் எப்படியோ என்னைத் தேடிப் பிடித்து விஷயத்தைச் சொன்னான். நாங்கள் சென்றிருந்த படம் லலிதாவுக்கு ரொம்பவும் பிடித்தம். அதனால் பாதியில் எப்படி விட்டு விட்டு வர முடியும்? வீடு திரும்பிய போது வெகுநேரமாகி விட்டது. அதனால் இங்கு வரமுடிய வில்லை. உனக்குத் தலைவலியாக இருந்திருந்தால் டாக்டரிடம் காட்டியிருக்கலாமே!''

அவ்வளவுதான் அவன் கூறியது. 'இப்போது எப்படி இருக்கிறது?' என்ற கேள்வி கூடக் கிடையாது. அங்கேயே சாப்பிட்டு விட்டுக் காரியாலயத்துக்குச் சென்று விட்டான். அவன் சென்றதும் உண்மையிலேயே மீனுவுக்கு உடலெல்லாம் ஜுரம் போல் கனத்தது. காரியாலயத்துக்குப் போகாமலே படுத்துக் கிடந்தாள்.

"மீ....னு....!"

பரிவுடன் கூடிய அழைப்பை அவன் செவி மடுத்ததும் உள்ளத்தில் திடீரென்று ஆறுதல் கண்ட களிப்பாக இருந்தது. காத்துக் கிடந்து கிடைத்தது போன்ற மகிழ்ச்சி.

"வாருங்கள்!"

"மீனு.... இப்போது...." முருகன் நாற்காலியில் அமர்ந்தான். "உன் வேதனையினால் எனக்கு ஆபீசில் வேலை ஓடவில்லை. லீவ் போட்டு விட்டேன். இப்போதாவது கூற முடியுமா?"

"முருகன்! நான் தவறு செய்து விட்டதை இப்போதுதான் உணர்கிறேன். தனிமையை என்னால் தாங்க முடியவில்லை. உண்மையான அன்பின் உறைவிடம் பெண்களுக்கு எங்கு கிடைக்கும் என்பதை நான் புரிந்து கொண்டு விட்டேன். முருகன்! நீங்களும் என்னைக் கைவிட்டு விடாதீர்கள்."

முருகன் அவள் அன்பை ஏற்றுக் கொண்டு அவள் தலையை வருடினான். மீனுவின் உள்ளம் நிம்மதிப் பாதையில் திரும்பியது.

**ம**று நாள்.

"குமார்! நாளையே நானும் முருகனும் திருநீர்மலையில் விவாகத்தை முடித்துக்கொள்ளப் போகிறோம். தனிமையில் இல்லை.... நீயும் லலிதாவும் வந்து விடுங்கள்." மீனு குமாரை இடித்துக் கூறிய வார்த்தைகளுடன் கூறினாள். மகிழ்ச்சியுடன் குமார் நின்ற நிலையில் நின்று விட்டான்.

"ரொம்ப சந்தோஷம். கண்டிப்பாக வந்து விடுகிறேன்" என்று மகிழ்ச்சித் திளைப்பில் கூறினான்.

திருநீர்மலையில் விவாகம் இனிது முடிந்தது. குமார் மெள்ள முருகன் அருகில் வந்தான்.

"மீனு! இந்தத் தினத்தை நான் வெகு ஆவலோடு எதிர்பார்த்தேன். இப்போது எனக்கு உள்ளமெல்லாம் ஆனந்தம்....ஒரு சிறு வேண்டுகோள். நீங்கள் இருவரும் பெரியவர்களாக முன்னின்று என் விவாகத்தையும் நடத்தி வைக்க வேண்டும். விவாகமானவன் போல் போலி வாழ்க்கையை நான் எவ்வளவு நாட்கள்தாம் நீடிக்க முடியும்.....!"

மீனு திகைப்பும் ஆச்சரியமும் அடைந்து விட்டாள். "என்ன சொல்கிறாய் குமார்? நீ ரிஜிஸ்தர்....."

"இல்லை, மீனு! எல்லாம் உன்னை விவாக பந்தத்தில் ஈடுபடுத்துவதற்காகச் சொன்ன வார்த்தைகள்.... அக்கா! என் காரணமாக, நீயும் முருகனும் உள்ளத்தில் அன்பு இருந்தும் பிரிந்து வாழ்வதை என்னால் காணச் சகிக்கவில்லை. பல முறை நான் விட்ட வேண்டுகோளையும் நீ புரிந்து கொள்ளவில்லை. மீனு! உலகில் படைக்கப்படும் ஒவ்வொரு சிருஷ்டிக்கும் பிரமன், உயிரினங்களின் உதவியை நாடுகிறான். அதனால்தான் ஆசா பாசங்களை நிரப்புகிறான். செடி கொடி முதலிய எல்லா உயிர்ப் பொருள்களும் இயற்கை நியதிக்குக் கட்டுப்பட்டவை. இதை அறிந்தும் உன்னையே நீ ஏமாற்றிக் கொள்வதிலிருந்து தடுத்து, உன் நல்வாழ்வுக்கு வழி கோலவே, உன்னிடமிருந்து பிரிந்து நான் உனக்குத் துன்பத்தைக் கொடுத்து விட்டேன். லலிதாவும் எனக்கு ஓரளவு ஒத்துழைத்தாள். மீனு, நானும் லலிதாவும் ஒருவரையொருவர் உண்மையில் காதலிக்கிறோம். எங்கள் நல்வாழ்வுக்கும்...."

"குமார், அப்படியானால் இரவு...."

"ஒரு தனி அறை எடுத்துக் காரியாலயப் பரீட்சைக்குப் படித்தேன். மீனு, உங்கள் விவாக மகிழ்ச்சியுடன் காரியாலயத்தில் என் வேலையும் உயர்ந்துவிட்ட மகிழ்ச்சி. இவற்றுடன் என்னை லலிதாவுடன் சேர்த்து வைத்து நீங்கள் மேலும் மகிழ்ச்சி தந்தால்...."

"குமார்!" உணர்ச்சி பொங்கச் சகோதரனை அணைத்துக் கொண்டு விட்டாள் மீனு.

லலிதா வெட்கத்துடன் முகமெல்லாம் சிவக்க உதட்டில் புன்னகை பூக்க அருகே வந்து நின்றாள்.

---

சனிக்கிழமை மாலை காரியாலய வாயிலில் சீனு சோகமே உருவாகக் காட்சி தருகிறான். "ஏன்டா இப்படி?" என்கிறான் வேணு. "நாளைக்கு ஞாயிற்றுக் கிழமை ஆயிற்றே!" என்று அலுத்துக் கொள்கிறான் சீனு. வேணுவுக்கு ஒன்றும் புரியவில்லை. விடுமுறை என்று யாராவது துக்கப் படுவார்களா?

சீனு ஞாயிறு காலையில் எழுந்ததும் வீட்டை ஒட்டடை அடிக்கிறான். பிறகு தோட்டத்தைக் கொத்திவிட்டு எருப் போட்டுத் தண்ணீர் ஊற்றுகிறான். பின்னர் குளித்துச் சாப்பிட்டு விட்டு மனைவியின் கட்டளையைச் சிரமேல் தாங்கிக் குழந்தையைத் தூங்கச்செய்கிறான். ஈசிசேரில் 'அப்பாடா' என்று சாயப் போகும் சமயம்,அது உடைந்திருப்பது ஞாபகம் வரவே அதை ரிப்பேர் செய்கிறான். அப்புறம் 'கேட்'டுக்குப் பெயிண்ட் அடித்து விட்டு



மாலையில் மனைவியையும் தங்கையையும் தாயாரையும் அழைத்துக் கொண்டு ஒரு பாடாவதிப் படத்துக்குப் போய்ப் பத்து ரூபாய் செலவழிக்கிறான். திங்கட்கிழமை காலை ஆபீசுக்கு வரும்போது அவன் முகம் மலர்ந்திருக்கிறது. 'இன்னும் ஆறு நாளைக்கு ஹாய்யாக இருக்கலாம்' என்கிறான் வேணுவிடம். வேணு தலையைச் சொறிகிறான். சீனுவின் நிலை வேணுவுக்குப் புரியாவிட்டால் என்ன? நமக்குப் புரிகிறதே!

# நாகை மகாநாடு

[நமது விசேஷ நிருபர்]

கீழ் வானத்தில் சூரியன் 'தகதக'வென வெளிப்பட்டான். அதேபோல் 24-ம் தேதி ஞாயிறு காலை 9-30 மணிக்கு சுதந்திரக் கட்சி மகாநாடும் திருவாரூர் எஸ். நடராஜன், டி. எஸ். மகாலிங்கம் ஆகியோர் சங்கநாதம் முழங்க 'ஜாம் ஜாம்' என்று தொடங்கியது.

நெல்லை மாவட்டத்திலிருந்து நீலகிரியை அடுத்துள்ள கோவை மாவட்டம் வரையிலுள்ள ஜில்லாக்களிலிருந்தெல்லாம் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். தஞ்சை மாவட்டத்தில் ஒவ்வொரு தாலூகாவிலிருந்தும் ஏராளமான பிரதிநிதிகள். காலை நிகழ்ச்சிக்குப் பந்தலுக்குள் இருந்தோர் தொகை பதினையாயிரம் பேர். மாலையில் ராஜாஜி பேசும்போது உள்ளே எள் விழுந்தால் விழ இடமில்லை என இருபதாயிரத்துக்கு மேற்பட்டவர்கள் இருந்தார்கள். இரவில் பொதுக்கூட்டம் நடக்கும் போது மக்கள் எண்ணிக்கை அரை லட்சத்துக்குத் தாண்டியது.

வரவேற்புக் கமிட்டித் தலைவர் திரு வி. எஸ். ராமசாமி அய்யங்கார், கருத்து மிகுந்த தம் உரையை நிகழ்த்தி வந்திருந்தோரை வரவேற்றார். கம்பீரமாய் அமைந்திருந்த அந்த அழகு மேடையில் அனுபவத்தில் திளைத்த திரு வி. எஸ். ஆர். நின்று பேசுவது மிகப் பொருத்தமாக இருந்தது. சுய ஆட்சிக்கு இலக்கணம் விடுத்த காந்தியடிகள் என்ன கூறியிருக்கிறாரெனத் தொடங்கி இன்று சோஷலிஸப் பாதையில் போகும் காங்கிரஸ் ஆட்சியின் தடுமாற்றங்களையெல்லாம் தெளிவுறக் காட்டிச் சீன ஆபத்தைக் கொண்டு வந்து விட்டிருக்கும் காங்கிரஸ் ஆளுனர்களுக்குத் திரு வி. எஸ். ஆர். கீழ்வரும் புத்திமதியை ஒரு சவாலாகக் கூறிச் சபையினரின் ஆரவாரம் மிகுந்த கரகோஷத்தைப் பெற்றார்.

''ஒரு காரியம் செய்தால் இந்த வரிச் சுமைகளும் இருக்காது. புதிய வரிகளும் தேவையில்லை. சீன ஆக்கிரமிப்பும் ஓடிவிடும். நீங்கள் பல வருடங்களாகச் செய்யாததை, செய்ய முடியாததையெல்லாம் செய்து காட்டவும் முடியும். அப்பேர்ப்பட்ட காரியம் என்னவென்றால், உங்களால் முடியாத ஆட்சிப் பொறுப்பை எங்களிடம் தருவது தான்...'' என்று திரு வி. எஸ். ஆர். கூறிய போது சபை மெய்மறந்தது.

கொடியேற்று விழாவை நடத்தி வைத்த திரு எஸ். எஸ். மாரிசாமி சுதந்திரக் கட்சி மகாநாடு போன்ற காரியங்களை எவராலும் தடுக்க முடியாது என்று பேச்சைத் தொடங்கி, நேருவின் சமீப தாக்குதலுக்குப் பதில் கூறினார்.

''சுதந்திரக் கட்சியின் பாதை தவறானது. தேசத்தை முன்னேற்றாது என்று பிரதமர் கூறுகிறார். ரொம்ப சரி. இவர்கள் பதினைந்து ஆண்டுகளாகக் காட்டி வருகிற பாதை எங்கே கொண்டுபோய் விட்டிருக்கிறது? வெள்ளையன் ஆட்சியில் ஒரு ஈ, எறும்புகூட இந்திய எல்லையைத் தாண்டவில்லை. இவர்கள் ஆட்சியிலோ...?'' என்று கேட்டார் திரு மாரிசாமி.

அடுத்து திரு ஜி.கே. சுந்தரம் மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார். அதோடு மகாநாட்டினர் பிரசுரித்திருந்த 'கொள்கை விளக்க மலரை'யும் வெளியிட்டுப் பேசினார்.

''ஆட்சியாளர்களின் கோணலான ஆட்சியை மக்கள் உணர்ந்து விட்டனர். இவ்வளவு பெரும் திரளாக நீங்கள் கூடியிருப்பதே இதற்கு அத்தாட்சி. வரிகள் வந்திருக்கிற விதத்தைப் பார்த்தால் இனி இந்த நாடு முன்னேறுவதற்கு முடியாது. முன்னேற்றம் வேண்டுமானால் நாடு, வேறு கட்சியை ஆட்சியில் வைக்க வேண்டும்'' என்று கூறிய திரு ஜி. கே. சுந்தரம் வரிகளின் அர்த்தமற்ற தன்மையை விரிவாக விளக்கிப் பேசினார்.

''பிரிட்டனும் அமெரிக்காவும் தங்கள் வருமானத்தில் 92 சத விகிதம் பாதுகாப்புக்குச் செலவழித்தன. அதுவும் பல காலமாக, யுத்தம் வருவதற்கு முன்பாக. இங்கு அப்படி நடந்ததா? முன்னர் கொடுத்த பணமெல்லாம் ஊதாரித்தனமாகச் செலவாகியது. இப்போது செலவாகப் போகிற ரூபாய் எண்ணூறு கோடி, வந்திருக்கும் சீனனை விரட்டப் போதுமா? போதாது. இதற்குத்தான் வெளி உதவி தேவை என்கிறோம்...'' என்று பாதுகாப்பு விஷயத்தில் நேரு அரசாங்கம் குட்டையைக் குழப்பியிருப்பதை விவரித்தார்.

அடுத்துத் தலைமை வகித்துப் பேசிய திரு சா. கணேசன் காந்திய நெறிக்கு மாறாக நடக்கும் ஆட்சியாளர்களுக்குப் பல சவால்களை விடுத்தார். தங்கக் கட்டுப்பாடு உத்தரவு மக்களை கெட்டழியச் செய்திருக்கும் விவரங்களை எடுத்துரைத்தார்.

மகாநாட்டுப் பந்தலில் பல்லாயிரக்கணக்கான மக்கள் குழுமியிருந்த காட்சி



''இந்த மகாநாடு நடைபெறக்கூடாதென கம்யூனிஸ்டுகள் பல உத்திகளைக் கடைப்பிடித்து, குழம்பிய குட்டையில் மீன் பிடிக்க வந்தார்கள். இது நடைபெறாது போய்விட்டது. அந்தக் கம்யூனிஸ்டுகளின் திருகுதாளங்களை நான் பல காலமாக அறிவேன். இவர்களுக்கு என்றுமே உண்மை இருந்ததில்லை. சூழ்ச்சிகளும் ரகசியங்களும் கொண்டவர்கள். அநாகரிகக்காரர்களான இவர்களை நம்புவது போன்ற காரியங்களை எந்தத் தேசபக்தனும் புத்திசாலியும் செய்ய மாட்டான்'' எனக் கூறி, காரைக்குடியில் இவர்கள் நடந்துகொண்ட விதங்களைக் கூறினார்.

இவருக்கு அடுத்தபடியாக உசிலம்பட்டித் தொகுதி சட்ட மன்ற உறுப்பினரான திரு மூக்கையாத் தேவர் உரப்பனூர் துப்பாக்கிப் பிரயோகத்தைப் பற்றி விவரித்தபோது சபையோர் உள்ளம் உருகியது. ''தஞ்சை மாவட்ட மக்கள் தைரியமாக முன்வந்து இந்த அக்கிரம வரிகளை எதிர்க்க வேண்டும். விவசாயம் அழிந்தால் தேசியம் அழிந்தது'' என்று அவர் கூறியபோது சபையில் சூடு பிறந்தது. இச் சூட்டைக் கண்ட வருண பகவான் சிறிது தூறல்களை அனுப்பவும் முற்பகல் நிகழ்ச்சிகள் முடியவும் சரியாக இருந்தது.

பிற்பகல் நிகழ்ச்சி தொடங்கியபோது பல தீர்மானங்கள் நிறைவேறின. திரு ராஜன் பாபு, தஞ்சை மாவட்ட முன்னாள் தலைவர் திரு சாமித்துரைத் தேவர் ஆகிய இருவர் மறைவு குறித்து அனுதாபத் தீர்மானங்கள் நிறைவேறின. திரு தேவரவர்களின் உருவப்படம் ஒன்றும் திரு ஜி. கே. சுந்தரம் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இத் தீர்மானங்களையெல்லாம் திருவாளர்கள் சந்திரசேகரபுரம் துரைசாமி அய்யர், அம்மாபேட்டை ராதாகிருஷ்ணன், மாரூரம் அங்கப்பன், குடந்தை அப்துல் சத்தார், சீர்காழி கிருஷ்ணமூர்த்தி, காரைக்குடி நடராஜன் (விசுவ கர்ம சங்கத் தலைவர்) முதலியோர் ஆதரித்துப் பேசினார்கள். இதற்கு முன்பு விவசாயிகள் இன்றைய ஆட்சியில் படும் துயரத்தைக் கோவை திரு ஆர். கிருஷ்ணசாமி கவுண்டர் விளக்கினார். கடைசியாக ராஜாஜி அவர்கள் பேசினார்கள்.

''மழை திடீரென்று வந்தது. திடீரெனப் போயும்விட்டது. சீனாக்காரன் வந்து போனது போல'' என்ற ராஜாஜியின் முதல் வாக்கியமே சபையின் கரகோஷத்தைப் பெற்றது.

''கம்யூனிஸ்டுகளுக்கு என்மீது கோபம். இது வெகுநாளையக் கோபம். 1952-ல் இவர்கள் இந்த ஜில்லாவில் நிறைய வெற்றிகளைப் பெற்று ஆட்சியைக் கைப்பற்ற இருந்தார்கள். அப்போது திரு காமராஜ் போன்றவர்களெல்லாம் என்னிடம் வந்து மந்திரி சிம்மாசனத்தில் என்னை உட்கார வைத்தார்கள். நான் கம்யூனிஸ்டுகளைச் செல்வாக்கு இழக்கச் செய்தேன். இது முதல் கோபம். இப்போது சீனாக்காரன் வந்தான். வந்த சீனனை எப்படி விரட்டுவது என்று கூறுகிறேன். இது இரண்டாவது கோபம்.

''சீனாக்காரனை வரவேற்கிறவர்கள் கம்யூனிஸ்டுகள். காங்கிரஸ் அவர்களுடன் தேர்தல் கூட்டுச் சேருகிறது. இதைப் பகிரங்கமாக நான் சொல்லுகிறேன். அதனால் காங்கிரஸாருக்குக்கூட என்மீது கோபம். இப்படியெல்லாம் 'குட்டை' உடைக்கிறாரே இந்த ராஜாஜி என்று....'' சிரித்துச் சிரித்துச் சபையினருக்கு வயிற்றுவலியே கண்டிருக்கும்.

தங்கக் கட்டுப்பாட்டை அலசிக் காட்டி 'இது ஒரு மூளை கெட்ட வேலை' என்று ராஜாஜி கூறினார்.

''வெளிநாட்டுச் செலாவணி சம்பாதிக்கவே இந்தத் தங்கக் கட்டுப்பாடு என்றால், இந்தச் செலாவணியைச் சம்பாதிக்க ஒரு புதுத் திட்டம் சொல்லுகிறேன். அதுவும் காங்கிரஸார் பேசிவருவதை ஒட்டியே சொல்லுகிறேன். ஏனெனில் ஒவ்வொரு மந்திரியும் இப்போது மேல் நாடு பற்றியும் அதன் நாகரிகம் பற்றியும் பேசாத நாளே இல்லை. அந்த அடிப்படையில் இதையும் கேளுங்கள்.

''மேல் நாட்டில் பெண்கள் கூந்தல் வளர்ப்பதில்லை. நம்மைப் போல 22 காரட் தங்க நகைகள் போடாது, 14, 12 காரட்டில் நகை போடுகிறார்கள். அதுபோல் நம் பெண்களும் தலை முடியை நீள வளர்க்காது குறுக்கி வெட்டி 14, 12 காரட் முடி எனச் செய்தால் எப்படி இருக்கும்? 14, 12 காரட் முடி வைத்துக்கொள்ளச் சட்டம் போடலாமே..... (சிரிப்பு).

''பணக் கஷ்டம் அதிகரிக்க அதிகரிக்க இந்த முடியையும் 8 காரட், 7 காரட் எனக் குறைத்துக்கொண்டே போகலாம். (மேலும் சிரிப்பு)

''சர்க்காருக்கு இதில் லாபம் கூட. உதாரணமாக நம் நாட்டில் 8 கோடிப் பெண்கள் இருக்கிறார்கள் என வைத்துக்கொள்வோம். ஒவ்வொருவரது முடியையும் வெட்டி அமெரிக்காவுக்கு அனுப்பினால் 8 கோடி டாலர் கிடைக்கும். (தொடர்ந்த சிரிப்பு).

**வரவேற்புக் குழுத் தலைவர் திரு வி. எஸ். ராமஸ்வாமி அய்யங்கார், திரு மூக்கையாத் தேவர் எம். எல். ஏ., திரு ஜி. கே. சுந்தரம், முதலியோர் நின்று கொண்டிருப்பதையும், மேடையில் ராஜாஜியும் திரு சா. கணேசன் எம். எல். ஏ. அவர்களும் வீற்றிருப்பதையும் காணலாம்.**





முதலாளி (வேலைக்கு வந்தவரிடம்) : நீங்கள் ஷார்ட் ஹாண்ட் எழுதுவீங்களா?

வேலைக்கு வந்தவர் : ஓ, எழுதுவேன் ! ஆனால் எனக்கு ரொம்ப நேரமாகும் !

''முதல் இல்லாத வியாபாரம். இதில் நஷ்டமே இல்லை! வெட்ட வெட்ட வளரும்! சர்க்காருக்கும் ஏராளமாக டாலர் கிடைக்கும்!'' (சிரிப்பு ஓயப் பல விநாடிகள்)

ராஜாஜியின் பேச்சு அத்தனை பேரையும் சிரிப்புக் கடலில் ஆழ்த்தியது.

மாலையில் நடந்த பொதுக் கூட்டத்தில் ராஜாஜி இதர விஷயங்களைப் பற்றிப் பேசினார். ஐம்பதாயிரம் பேருக்கு மேல் கூடியிருந்த பொதுக் கூட்டத்தில் ராஜாஜி நேருவுக்கும் தமக்கும் உள்ள கொள்கை வேறுபாடு எப்படி இருக்கிறது என்று விவரித்தார்:

''ரஸம் வைக்க வேண்டும். அதற்கு உப்பு, மிளகு பாத்திரம் எல்லாமே இருக்கின்றன. ஆனால் புளி மட்டும் போதவில்லை. நான் சொல்லுகிறேன், அடுத்த வீட்டில் கொஞ்சம் வாங்கிக்கொள்ளலாம் என்று. அவர்களும் தருவதாகக் கூறுகிறார்கள். நேரு சொல்லுகிறார்: 'கூடாது. அப்படி வாங்குவது அவமானம். நான் புளியங் கொட்டையை ஊன்றி வைத்திருக்கிறேன். அது சீக்கிரத்தில் முளைவிட்டு, செடியாகி, மரமாக வளர்ந்து, புளியங்காய் காய்க்கும்' என்று. இதுதான் நான் சொல்வதற்கும் அவர் சொல்வதற்கும் உள்ள வித்தியாசம்.

''உடம்பிலே ரத்தமில்லை. டாக்டர் ரத்தம் செலுத்த வேண்டுமென்கிறார். காங்கிரஸார் சொல்லுகிறார்கள்: நோயாளியின் ரத்தத்தையே எடுத்து அதையே திரும்ப அவனுக்குச் செலுத்த வேண்டும் என்று. டாக்டர் சொல்கிறார் புது ரத்தம், கெடாத ரத்தம் செலுத்த வேண்டுமென்று. இதைத்தான் நானும் சொல்லுகிறேன். காங்கிரஸாருக்கு இது ஏறவில்லை.

'' 'என்னைத் திரும்பிப் போ' என்று கம்யூனிஸ்டுகள் சொல்லுகிறார்களாம். சீனாக்காரன் வந்தபோது கம்யூனிஸ்டுகள் அவர்களைத் திரும்பிப் போகச் சொன்னார்களா? அப்படிச் சொல்லாத இவர்களோடு காங்கிரஸார் சேரலாமா? கறுப்புக் கொடியும் தூக்கலாமா?

''நானும் அவர்களோடு சேர்ந்து சீனாக்காரனை வரவேற்றிருந்தால் எனக்கு இவர்கள் மாலை போட்டிருப்பார்கள்.

''இன்று இவர்களுக்கெல்லாம் என்மீதும் சுதந்திரக் கட்சி மீதும்தான் கோபம். இருபத்திநான்கு மணி நேரமும் எங்களைத் திட்டுகிறார்கள். ஏன்? வரியை எதிர்க்கிறேன்; சீனாக்காரனைக் காட்டிக் கட்சிக்காகக் காரியம் சாதிப்பதைக் கண்டிக்கிறேன்; அவனை எதிர்த்து விரட்டச் சரியாகக் காரியங்களைச் செய்யவில்லையெனக் கூறுகிறேன்; அதற்காக இப்படியெல்லாம் செய்கிறார்கள்.

''சீனாக்காரன் மறுபடியும் இடைவெளப் பாயப்போகிறான், துருப்புக்களைச் சேர்த்து எல்லையில் வைக்கிறான் என்றெல்லாம் சொல்கிறார்கள். இப்போது திரும்பத் திரும்பக் கூறுவதைப் பார்த்தால் உப-தேர்தல்களில் காங்கிரஸ் ஜெயிக்க வேண்டும் என்பதற்காக இந்தப் பூச்சாண்டியை..... (சிரிப்பு).

''அவனை விரட்ட வேண்டியது அவசியம். ஆனால் அதற்குப் புளியங் கொட்டையை நடுவது போலக் காரியங்களைச் செய்யக் கூடாது'' என்றார் ராஜாஜி.

ஞாயிறு காலை ராஜாஜி அவர்கள் நாகை வந்து சேர்ந்தார்கள். ரயிலடியில் தஞ்சை மாவட்டத் தலைவர் திரு நம்பியார் அவர்களும் காரியதரிசி திரு வீரன் இளஞ்சிங்கம் அவர்களும் மாவட்ட முழுவதிலுமிருந்து வந்த மற்றப் பிரமுகர்களும் ரோட்டரி சங்கம், வக்கீல் சங்கம் ஆகியவற்றின் பிரதிநிதிகளும் மாலை அணிவித்து வரவேற்றார்கள். ரோட்டரி சங்கத்தில் 'உலக ஒற்றுமை' என்னும் பொருள் பற்றிக் காலையில் ராஜாஜி அவர்கள் பேசினார்கள். அமெரிக்க – ருஷ்ய மோதலைக் குறிப்பிட்டு இன்று சமரசச் சூழ்நிலை நிலவி வருவதை விவரித்து உலக ஒற்றுமைக்கு ஆங்கில அறிவு அவசியம் என்பதை உணர்த்தினார்கள்.

நாகை வக்கீல்கள் சங்கத்தினர் ராஜாஜியை வரவேற்று உபசரித்தனர். அங்கு ராஜன் பாபு அவர்களின் திருஉருவப் படத்தை ராஜாஜி திறந்து வைத்துப் பேசுகையில், தமக்கும் ராஜன் பாபுவுக்கும் நாற்பதாண்டுகளாக அன்னியோன்யமான சிநேகம் இருந்தது என்று கூறினார். அவர் தம்மிடம் என்றும் மாறுபட்டதில்லை என்றும் அவருடன் வேலை செய்வதில் ஒரு கஷ்டமும் இருந்ததில்லையென்றும் கூறினார். ''அவர் ஜனாதிபதியாக இருந்தபோது அவர் இன்னும் கொஞ்சம் தம் கருத்துக்களை வன்மையாக வற்புறுத்தியிருக்கலாம் என்று கருதுகிறார்கள். ஆனால் நாம் ஜனாதிபதியை, பிரிட்டிஷ் ராணியைப் போன்ற அந்தஸ்துக் கொடுத்து வைத்திருப்பதால் அவர் அரசியல் நிர்ணயச் சட்டத்துக்கு மதிப்பும் மரியாதையும் அளித்து நடந்துகொண்டார்!'' என்றார்.

மாலையில் நடந்த பொதுக்கூட்டத்துக்கு ஏராளமான பெண்கள் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. இக்கூட்டத்துக்குத் திரு வீரன் இளஞ்சிங்கம் தலைமை வகித்தார். கூட்டத்தில் குளித்தலை ராமநாதன் பாரதியும், திரு சுப்பையா செட்டியார் எம். எல். ஸி.யும் நல்ல முறையில் பேசினார்கள்.

மகாநாடு ஒரு நாள் மகாநாடு என்றாலும் மாகாணப் பிராபல்யம் அடைந்த மகாநாடாக அமைந்துவிட்டது. திரு அய்யங்கார் அவர்களும், நாகை கணபதித் தேவர் அவர்களும், திரு நம்பியார், இளம் வழக்கறிஞர்களான திரு சங்கரன், திரு முருகையன் போன்றோரும் எடுத்துக்கொண்ட முயற்சிகளும், பட்ட அரும் பாடும் பாராட்டுக் குரியவை.

# கால்கேட்டின்மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழிவு பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் ரசித்திருக்கும் அதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.**

SC-8-83-TAM.



# சக்தி வளர்க்கும் கோபுரங்கள்

கான்கிரீட் அடிப்படையில் அமைந்து வருகிறது பாரதநாடு... குறிப்பிட்ட நீரையே மீண்டும் மீண்டும் மின்சக்தி உற்பத்தி நிலையங்கள் உபயோகிக்க உதவும், வானளாவி நிற்கும் குளிர்விக்கும் ஸ்தூபிகள் உணவு உற்பத்தியைப் பெருக்க வழிசெய்யும் மாபெரும் அணைகள்... உரத்தயாரிப்பு ஆலைகள்... ஜீவாதாரப் போக்குவரத்துக்கு அனுகூலமாய் அமைந்த பாலங்கள், பெரு வழிகள்... ஆலைத் தொழில்களுக்கு ஆக்க சக்தி அளிக்கும் மின்சார நிலையங்கள்... நோயாளிகளுக்கான ஆஸ்பத்திரிகள்..., ஆடவரும், மகளிரும் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும் புனிதப் பணியாற்றும் கலாசாலைகள், கல்லூரிகள்...

ஒப்புவமையற்ற இந்த நிர்மாணப் பணியில் ஏஸிஸி மற்றும் இந்தியா ஸிமெண்ட்ஸ் தரச் சிறப்புள்ள ஸிமெண்ட் விநியோகிப்பதன் மூலம் பெரும் பங்கு கொள்கிறார்கள்.






தி ஸிமெண்ட் மார்க்கெடிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.,
தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி இந்தியா ஸிமெண்ட்ஸ் லிமிடெட்.

உழைத்து, சேமித்து, தேசியப் பாதுகாப்புப் பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்.

mas. ACC. 1962 8 TAM

# மங்கலாயிருப்பதை பளபளப்பாக்க
# கார்டினல் பாலிஷ்

உங்கள் வீட்டுத் தரைகள் மங்கலாக வும் அசுத்தமாகவும் இருக்கின்ற னவா? அவற்றிற்கு ரெட் கார்டினல் பாலிஷ் மூலம் உயிர் கொடுத்து ஒளி பெறச் செய்யுங்கள். ரெட் கார்டினல் பாலிஷ் உடனே தரைகளுக்கு செந் நிற ஒளி கொடுத்து பிரகாசிக்கச் செய் கிறது. சாதார[illegible] கல் தரையிலும் சிமிட்டித் தரையிலும் பரீட்சை செய்து பாருங்கள். ரெட் கார்டினல் பாலிஷ் சீக்கிரத்திலேயே மங்கலான தரைகளைப் புதியதோர் செந்நிற ஒளியுடன் பிரகாசிக்கும் படியாகச் செய்துவிடும்.

உங்கள் வீட்டுத் தரைகள் உயி ருடன் கூடிய ஒளிபெற இன்றே ரெட் கார்டினல் பாலிஷை உபயோகி யுங்கள்.

அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டது)




CP 1

IWTCP 5087A



# பொன் விலங்கு

## பதின்மூன்றாவது அத்தியாயம்

அவ்வளவு பெரிய அவையில் சிறிதும் இடைவெளியின்றிக் கூடியிருந்த கூட்டத்தினர் மோகினியின் நாட்டியத்தில் முழுமையாக ஈடுபட்டு இலயித்திருந்த வேளையில் இடையே புகுந்து வழி உண்டாக்கிக் கொண்டு வருவதால் எத்தனை கோப தாபங்களைச் சந்திக்க நேருமோ அத்தனை கோபதாபங்களுக்கும் ஆளாகிய பின்பே அந்தச் சிறுவன் சத்தியமூர்த்திக்கு அருகே வந்திருந்தான்.

''முடிந்ததும் பேசாமல் எழுந்து போயிடாதீங்க.... அக்கா உங்களைப் பார்க்கணும்னு சொன்னாங்க'' என்று அந்தச் சிறுவன் தன் காதருகே முணுமுணுத்த போது முதலில் அவன் மேல் அடக்க முடியாத கோபமும் பின் அவன் வந்திருக்கிற சூழ்நிலையை உணர்ந்து அநுதாபமும் உண்டாயின சத்தியமூர்த்திக்கு. அமைதியான அவையில் மிகவும் அமைதியாயிருந்த முன் வரிசையில் தன்னிடம் அந்தச் சிறுவன் வந்து பேசிய பேச்சுக் குரலே சுற்றிலுமிருந்த சிலர் தன் பக்கம் பார்த்து முகத்தைச் சுளிக்கக் காரணமாயிருப்பதைச் சத்தியமூர்த்தி புரிந்து கொண்டான். ''நாட்

மணிவண்ணன்

டியம் முடிந்ததும் உன் அக்காவை அவசியம் பார்த்து விட்டுப் போகிறேன்! கூட்டத்தில் இப்படி அடிக்கடி நடுவே வந்து பேசாதே தம்பீ....'' என்று சொல்லி அந்தச் சிறுவனை அனுப்பி வைத்தான். அவன் அந்தச் சிறுவனோடு பேசிக் கொண்டிருந்த போதுகூட அரங்கிலிருந்து ஒலிக்கும் இனிய குரலும் மாறி மாறி ஒலிக்கும் சலங்கை ஒலியும் வந்து செவிகளை நிறைத்துக் கொண்டு தான் இருந்தன. வளைகளும், சலங்கைகளும் ஓசையிட அவள் கொடி போல் துவண்டு நயமாக ஆடிய நாட்டியம் அவன் இதயத்தைக் கவர்ந்தது. அந்த நாட்டிய நிகழ்ச்சியின் முதற்பகுதியாகவும் முக்கியமான பகுதியாகவும் இருந்தது ஆண்டாள் நடனம்தான். அதன் பின் பாம்பாட்டி நடனம், மார்வாரி நடனம் என்று வேறு சில நிகழ்ச்சிகளும் தொடர்ந்தன. அவை யெல்லாம் அவளுடைய ஆண்டாள் நடனத்தைப்போல் சத்தியமூர்த்தியின் மனத்தைத் தொட்டு உருகச் செய்ய வில்லையாயினும், கலைத்திறனையும் அவள் அழகின் பல நிலைகளையும் அவன் புரிந்து கொள்ளத் துணை செய்தன. இயற்கையாகவே அவளுடைய கலைத்திறன் அவ்வளவு சிறப்புடையதா அல்லது தன்னைப் போல் அவளுடைய அந்தரங்கத்தில் இடம் பெற்றிருக்கிற ஓர் இரசிகன் எதிரே வந்து உட்கார்ந்ததனால் தனக்காகவே அவ்வளவு சிறப்பாக அது அமைந்ததா என்று நுணுக்கமாக எண்ணிப் பார்த்தான் சத்தியமூர்த்தி. ஒவ்வொன்றாக ஞாபகம் வந்து அவளைப் பற்றிய கவர்ச்சியையும் மயக்கத்தையும் அவன் மனத்தில் அதிகமாக்கின. அவளுடைய கைகள் சேர்ந்தும், பிரிந்தும் முத்திரை பயின்ற போதெல்லாம் நிலவின் கதிர்களிலிருந்து கொய்த தளிர்களைப் போல் இலங்கிய விரல்களின் எழிலை நினைப்பதா? எதை நடித்துக் கொண்டிருந்தாளோ அதனுடைய பாவனைகளை அப்படியே மாற்றமின்றிப் பேசும் அவள் கண்களை நினைப்பதா? பாதசரங்களின் காட்சியழகும் சலங்கைகளின் ஓசை அழகுமாக அவளுடைய கால்கள் மான் துள்ளியது போல் துள்ளிய வேளைகளில் கூடியிருந்தவர்களின் மனங்களை யெல்லாம் அவள் துள்ள வைத்த விந்தையை நினைப்பதா? எதை நினைப்பது? எதை நினைக்காமல் விடுவது? பரதநாட்டியம் பார்ப்பதற்காக ஓரிடத்தில் இரண்டு மணி நேரம் சேர்ந்து உட்கார்ந்தது என்பது சத்தியமூர்த்தியின் வாழ்க்கையிலும் இதுவே முதல் தடவை: இன்று இந்தக் கலை அவனை வசியம் செய்து கட்டுப்படுத்தி விட்டது. குமரப்பனுக்கு நாட்டியத்தைப் பற்றி நிறையத் தெரியும். வர்ணம், தில்லானா, ஜாவளி, ஜதிஸ்வரம், சப்தம், அலாரிப்பு என்று அவன் ஏதாவது நாட்டியம் பார்க்கப் போய் விட்டு வந்த மறு நாள் வாய் ஓயாமல் அரற்றிக் கொண்டிருப்பான். அப்போதெல்லாம் அந்த அரற்றலைப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருப்பதைத் தவிரச் சத்தியமூர்த்தி அதற்குத் தன் மனத்தில் எந்த விதமான முக்கியத்துவத்தையும் அளித்ததில்லை. இன்றோ 'வார்த்தைகளால் இவ்வளவு நேரத்தில் இப்படிப் பேசி முடித்து விடலாம்' என்று பேசி முடிக்க இயலாத அத்தனை அழகுகளும் இரகசியங்களும், வெளிப்படையாகவும், அந்தரங்கமாகவும் அந்தக் கலையில் நிரம்பி யிருப்பதை மோகினி அவனுக்குப் புரிய வைத்து விட்டாள். இரண்டு மணி நேரத்துக்கு மேல் அந்த நாட்டிய நிகழ்ச்சியைப் பார்த்து முடித்து விட்டு எழுந்திருந்தபோது மோகினியின் மேல் இனம் புரியாததொரு மதிப்பு உருவாகிய மனத்துடன் எழுந்திருந்தான் சத்தியமூர்த்தி. இவ்வளவு அருமையான கலைத்திறனும், தொழில் நுணுக்கமும் தெரிந்த பெண்தான் அன்று இரயிலிருந்து கீழே குதித்துத் தற்கொலை செய்து கொள்ள முயன்றாள் என்பதையும், அப்படி முயன்றபோது, 'என்னைப் போன்றவர்கள் வாழ்வதும், வாழ நினைப்பதும் தான் அசட்டுக் காரியம். சாவுதான் எனக்குப் புகலிடம்' என்று தன்னைத் தானே வெறுத்துக் கொள்ளும் விரக்தியோடு கூறினாள் என்பதையும் நினைத்துப் பார்க்கவே முடியாமல் இருந்தது. நாட்டியம் முடிந்து எழுந்தபோது குமரப்பன் ஏதோ சொல்லத் தொடங்கினான்:

''பரத சாஸ்திரத்தை எழுதிய பரத முனிவர் மேலும் அபிநயதர்ப்பணத்தை எழுதிய நந்திகேசுவரர் மேலும் எனக்கு இப்போது சொல்ல முடியாத கோபம் வருகிறதடா சத்யம்! பெண்கள் இயல்பாகவே அழகும் கவர்ச்சியும் மிகுந்தவர்கள். பரத நாட்டியம் என்ற ஒன்றைக் கண்டுபிடித்து அதற்கு இலக்கணமும் வகுத்து வைத்தபின் பெண்களின் அழகை அவர்களே நிச்சயமாக நிரூபித்துக் கொள்ள வழி செய்து கொடுத்து விட்டார் பரத முனிவர். இந்தப் பரத முனிவர் இருக்கிறாரே; இவர் கண்டுபிடித்த கலை ஒரு பெண் தன்னிடம் நிரம்பியிருக்கும் அழகுகளை எவ்வளவு நாகரிகமாகப் புரிய வைக்கும் கருவியாயிருக்கிறது பார்த்தாயா?'' என்று அவன் கூறிய சொற்களிலிருந்து மோகினியின் நாட்டியம் அவனையும் வியப்பில் ஆழ்த்தியிருப்பது சத்தியமூர்த்திக்குப் புரிந்தது. கூட்டம் கலைந்து கொண்டிருந்தது. மறு



பம்பாய் ஸ்டேட் பார்க் ஆப் இந்தியாவின் சென்ட்ரல் ஆபீஸ் ஸ்ரீ கே. நடராஜன் அவர்களின் குமாரி சௌபாக்கியவதி சாரதாவுக்கும் ஸ்ரீ எஸ். சந்தானம் அவர்களுக்கும், மதுரை ஜில்லா திருமங்கலத்தில் திருமணம் சமீபத்தில் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள் !

படியும் அரங்கின் உட்புறத்திலிருந்து பக்கத்துப் படிகளின் வழியே அந்தச் சிறுவன் தன்னைத் தேடி வந்து கொண்டிருப்பதைச் சத்தியமூர்த்தி கவனித்தான்.

"இந்தப் பையன் யார்? நாட்டியம் நிகழ்ந்து கொண்டிருந்தபோதும் இவன் உன்னைத் தேடிக் கொண்டு வந்தானே? இப்போதும் உன்னைத்தான் தேடி வருகிறான் போலிருக்கிறது!" என்று குமரப்பன் கேட்ட போது, சத்தியமூர்த்தி, "எனக்குத் தெரிந்த பையன்! நான் போய்ப் பார்த்துப் பேசி விட்டு வருகிறேன். நான் திரும்பி வந்ததும் நாம் புறப்படலாம். அது வரை இங்கேயே இரு!" என்று குமரப்பனிடம் கூறி விட்டுத் தானே எதிர்கொண்டு புறப்பட்டு விட்டான். மேடையிலிருந்து பின் பக்கத்தில் கிரீன் ரூமிலிருந்தவாறே வெளியே புறப்பட்டுப் போய் விடுவதற்கு வசதியாக வேறொரு சாலையும் வாயிலும் இருந்தன. மேடையின் பின் பகுதிக்கும் அங்கிருந்தே மைதானத்தை விட்டு வெளியேறுவதற்கான வாயிலுக்கும் நடுவேயுள்ள பிரதேசத்தில் ஒரு பூங்கா இருந்தது. அந்தப் பூங்காவுக்குள் சத்தியமூர்த்தியை அழைத்துக் கொண்டு போனான் சிறுவன். கிரீன்ரூமில் மோகினியின் தாய் நாட்டிய உடைகளையும் அலங்காரப் பொருள்களையும் சரி பார்த்து மடித்து அடுக்கிக் கொண்டிருந்ததைப் போகும் போது சத்தியமூர்த்தி கவனித்தான். கிரீன் ரூமுக்கும் மேடை அரங்கத்துக்கும் நடுவில் இருந்த சிறிய கூடத்தில் நட்டுவனார் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார். பின் புறத்துப் படிகளில் இறங்கியவுடனே எதிரே ஆகாயம் முழுவதையும் நிறைத்துக் கொண்டாற் போல் முழு நிலா எழுந்து வந்திருப்பது தெரிந்தது. படிகளின் அருகே பூமியில் விளைந்த பச்சை விசிறியாக இருபுறமும் பக்கவாட்டில் இலைகளைச் சிலிர்த்துக் கொண்டு ஒரு விசிறி வாழை இருந்தது. அந்த விசிறி வாழையின் அருகே மோகினியும் அவனை எதிர்பார்த்துக் கொண்டு நின்றாள். மிக அருகே எங்கோ மாம்பூப் பூத்து அந்த வாசனையைக் காற்று அள்ளிக் கொணர்ந்து பரப்பிக் கொண்டிருந்தது. அந்த நிலா — அதைத் தொங்க விட்டுத் தாங்கிக் கவிந்து கொண்டிருப்பது போன்ற நீல வானம் — அதன் கீழே விசிறி வாழையருகே தனியாய் நின்று தன்னை வரவேற்றுப் புன்னகை பூக்கும் மோகினி, மாம்பூ மணக்கும் சித்திரை மாதத்து இளங் காற்று, எல்லாமாகச் சேர்ந்து சத்தியமூர்த்தியைப் பரவசப்படுத்தி யிருந்தன. அவன் மனம் மிக உற்சாகம் உற்றிருந்தது.

"வாருங்கள்! உங்களை எதிர்பார்த்துத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்று கைகூப்பினாள் மோகினி. அவளை எப்படி யெப்படி யெல்லாமோ புகழ்ந்து தன் பாராட்டுதல்களைத் தெரிவிக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்த சத்தியமூர்த்தி, "உங்களுக்கு என் பாராட்டுதல்கள். மிகவும் நன்றாக



# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும் சில தயாரிப்புகள்தான்
சிறந்த குணமும், பல வருடங்களாக நம்
பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம்
பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன்
மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில்
எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75
வருடங்களுக்கு மேலாக சிபார்சு
செய்யப்பட்ட உலகமறிந்த
தயாரிப்பும் ஆகும்.

அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள்:
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

ஆடினீர்கள். 'கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள் என்னும் இப்பேறு எனக்கு அருளு கண்டாய்' என்று இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பக் கதறு கிறாற்போல் பாடிக் கொண்டே நீங்கள் ஆடிய போது எனக்குக் கண் கலங்கி விட்டது....'' என்று சுருக்கமாக ஏதோ சொன்னான். அவனுடைய பாராட்டுத லைக் கேட்டு அவள் முறுவல் செய்தாள். நாட்டியக் கோலத்தில் இருந்த ஆடை யலங்காரங்களைக் கழித்து விட்டு ரோஸ் பவுடர் பற்றியிருந்த நிறம் போயும் போகாமலும் சோப்பினால் அவசரம் அவ சரமாக முகம் கழுவிய பின்பு அதிகக் கவர்ச்சியில்லாத ஏதோ ஒரு துணிப் புடவையைக் கட்டிக் கொண்டு வந்து நின்ற தோற்றத்திலும் அவள் அழகாகத் தான் இருந்தாள்.

''நான் நன்றாக ஆடியதற்குக் கார ணமே நீங்கள் என்னைப் பார்க்க வந் திருக்கிறீர்கள் என்ற பலத்தினால்தான். எதிரே அவையில் உட்கார்ந்து கொண் டிருந்த அத்தனை ஆயிரம் பேருக்காக வும் நான் ஆட வில்லை. உங்களுக்காகத் தான் ஆடினேன். நீங்கள் என்னைக் காப்பாற்றிய தெய்வம். இன்றைக்கு நீங்கள் வராமல் என்னை ஏமாற்றி விடு வீர்களோ என்ற பயம் மேடைக்கு வந்து நிற்கிற வரை எனக்கு இருந்தது. நீங்கள் வந்திருக்கிறீர்களா என்று அறிவதற் காக அந்தப் பையனை இரண்டு மூன்று முறை கீழே போய்ப் பார்த்து வரச் சொல்லித் துரத்தினேன். நீங்கள் வந்து உட்கார்ந்திருக்கிறீர்கள் என்று அறிந்த பின்புதான் எனக்கு நம்பிக்கையே வந் தது........''

''நான் ஒன்றும் அவ்வளவு பெரிய கலா இரசிகன் இல்லை. நான் பார்க்கிற முதல் நாட்டியமே இதுதான்.''

''நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். நான் உங் களை நினைத்து உங்களைப் பார்த்துப் பெற்ற உற்சாகத்தினால்தான் அப்படி ஆட முடிந்தது. நீங்கள் நன்றாயிருக் கிறது என்று சொல்வதைவிட வேறு எந்தப் பாக்கியத்தை நான் எதிர்பார்க்க முடியும்?''.... பேசும் போதே அவள் கண்களில் நீர் மல்கிற்று.

சத்தியமூர்த்தி பதில் ஒன்றும் சொல் லத் தோன்றாமல் பார்வையால் பேசும் அந்தக் கண்களையும் பதங்களால் பேசும் அந்த மயக்கும் இதழ்களையும் பார்த்துக் கொண்டே நின்றான். கிரீன் ரூமிலிருந்த அவளுடைய தாய் அவளைக் கூப்பிடும் குரல் கேட்டது. கண்ணாயிரம் வேறு நட்டுவனாரோடு பேசிக் கொண்டே பின் பக்கமாகப் படியிறங்கிப் பூங்காவுக்குள் வந்து கொண்டிருந்தார். தான் அங் கிருந்து புறப்பட வேண்டிய நேரம் வந்து விட்டதென்பது அவனுக்குப் புரிந்தது.

''நான் வருகிறேன். வெளியே நண் பன் ஒருவன் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறான். நீங்களும் ஆடிக் களைத்திருக்கிறீர்கள். வீட்டுக்குப் புறப் பட்டுக் கொண்டிருக்கிறீர்கள் போல் இருக்கிறது. உங்கள் அம்மாவின் குரல் வேறு உள்ளே யிருந்து மிரட்டுகிறது. கண்ணாயிரம் வேறு வந்து கொண்டிருக் கிறார். நாம் மறுபடி சந்திக்கலாம்....'' என்று அவளிடம் விடை பெற்றுக் கொண்டு அவன் கிளம்ப முயன்றபோது பதில் சொல்ல நாஎழாமல் கலங்கிய கண்களுடனேயே கை கூப்பி விடை கொடுத்தாள் அவள். அந்தச் சந்திப்பை அப்படி அரைகுறையாக முடித்துக் கொண்டு விடை பெறுவது அவனுக்கும் என்னவோ போல் இருந்தது. ஆயினும் குமரப்பன் வெளியே காத்திருப்பான் என்ற ஞாபகமும், கண்ணாயிரத்தின் திடீர் வரவும் அவனை அங்கிருந்து புறப் படச் செய்தன. படி யேறும்போது கண்ணாயிரமும் அவனும் நேருக்கு நேர் சந்தித்துக் கொள்ள நேர்ந்தது.

''என்னப்பா இது? உனக்கு ஒரு வேலை பார்த்துத் தரச் சொல்லி உன் தந்தை என்னை நச்சரித்துக் கொண்டிருக் கிறார். நீயானால் நாட்டியக் கச்சேரி மேடையைச் சுற்றி வந்து கொண்டிருக்கி றாய்?'' என்று கண்ணாயிரம் தம்முடைய கீழ்த்தரமான வம்பை ஆரம்பித்தார்.

''எனக்காக நீங்கள் வேலை எதுவும் தேடித் தர வேண்டாம் சார்! நாம் அப்புறம் பார்க்கலாம்....'' என்று கூறி விட்டு அவரைச் சந்திக்க நேர்ந்ததையே வெறுப்பவன் போல விறுவிறு வென்று மேலே நடந்து வெளியே வந்தான் சத்திய மூர்த்தி. வருகிற வழியில் கிரீன்ரூமுக்கு அருகே நின்று கொண்டிருந்த மோகினி யின் தாய் வேறு அவனைப் பார்த்து முகத்தைச் சுளித்தாள்.

''என்னப்பா இது? ஐந்து நிமிஷத் தில் வருகிறேன் என்று போனவன் அரை மணி நேரத்துக்கு மேல் ஆக்கி விட்டாய்?'' என்று கேட்டு விட்டுச் சிறிது மௌனத்துக்குப் பின் தணிந்த குரலில், ''மோகினியைத் தெரியுமா உனக்கு?'' என்று மேலும் சத்திய மூர்த்தியை வினவினான் குமரப்பன்.

''தெரியும்! அவளை நான் சந்தித் தது ஒரு விநோதமான சம்பவம்!''

''எனக்குத் தெரியக் கூடாத சம்பவ மானால் சொல்ல வேண்டாம். நான் உன்னைக் கேட்டதற்காக மன்னித்துவிடு, சத்யம்!....''

''அப்படி ஒன்றும் இல்லை. நானே சொல்கிறேன்.''—நேரம் அதிகமாகி விட்

டதனால் அவர்கள் இருவரும் பொருட்காட்சி மைதானத்திலிருந்த ஓர் உணவு விடுதியில் நுழைந்து இரவுச் சாப்பாட்டை முடித்தார்கள். மைதானத்திலிருந்து கிழக்கே திரும்பிப் பார்த்தால் சாலையின் கிழக்குக் கோடியில் சித்திரை மாதத்து முழு நிலாவின் கீழ் காந்தி மண்டபம் இருபுறமும் அணிவகுத்து நிற்கும் நெட்டிலிங்க மரங்களினிடையே தாஜ்மகாலைப் போல் அற்புதமாகத் தோன்றிக் கொண்டிருந்தது. தெற்கே மரக் கூட்டங்களுக்குள்ளே அமெரிக்கன் கல்லூரிக்-கட்டிடங்கள் உறங்கின. சாலைகளில் எல்லாம் சித்திரைத் திருவிழாக் கூட்டம் நிறைந்திருந்தது. திரும்பிப் போகும் போது கல் பாலத்தில் போகாமல் இன்னும் மேற்கே தள்ளிப் போய் வையையில் குறுக்கே இறங்கி நடந்தார்கள் குமரப்பனும் சத்தியமூர்த்தியும். சித்திரைத் திருவிழாவின் பரபரப்பும், கலகலப்பும் பாலத்துக்குக் கிழக்கேதான் அதிகமாயிருந்தன. பாலத்தின் மேற்குப் பக்கம் வையை மணற் பரப்பு அமைதியா யிருந்தது. ஓர் ஓடுகாலின் கரையில் குவித்திருந்த மணல் மேட்டில் நண்பர்கள் இருவரும் உட்கார்ந்து மனம் விட்டுப் பேசத் தொடங்கினர். ஓடுகால் நீர்ப் பரப்பில் நிலவு பிரதிபலித்து மிதந்து கொண்டிருந்தது. மல்லிகைப் பந்தல் கல்லூரியின் இண்டர்வ்யூவுக்குப் போய் விட்டுத் திரும்பும்போது இரயிலில் மோகினியைச் சந்திக்க நேர்ந்ததையும் அதன் பின் நிகழ்ந்தவற்றையும் நண்பனிடம் மனம் விட்டுக் கூறினான் சத்தியமூர்த்தி. எல்லாவற்றையும் கேட்டுவிட்டுக் குமரப்பன் பெருமூச்சு விட்டான். பின்பு கூறலானான்:

''இந்த உலகத்தில் கருவேல மரத்து முள்ளைப் போல் ரோஜா முள் பெரிதாகத் தெரிவதில்லை சத்யம்! அதனால் ரோஜாவில் முள்ளே இல்லை என்று சொல்லிவிட முடியுமா? ரோஜா முள்ளுக்குத்தான் வலிவும் கூர்மையும் அதிகம். ரோஜாப் பூவின் அழகு பார்க்கிறவர்களுக்கு அதனடியில் இருக்கும் முள்ளை மறந்து போகச் செய்து விடுகிறது. மோகினியைப் போன்ற கலைஞர்களின் கலைத் திறமையும் அழகும் பூத்துப் பொலியும்போது அவர்களுடைய அடி மனத்தில் உள்ள வேதனைகளும் ஏமாற்றங்களும் உலகத்துக்குத் தெரியாமல் போய் விடுகின்றன. வாழ்வை வெறுத்துத் தற்கொலை செய்து கொள்ளவும் துணிந்துவிடுகிற அளவுக்கு அந்தப் பெண் அந்தரங்கமாகத் துயரப்படுகிறாள் என்பதை அறியும் போது எனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஆனாலும் துயரங்களை வெல்ல அவளால் முடியுமென்று தான் எனக்குத் தோன்றுகிறது.''

''நீயும் நானும் ஆச்சரியப்பட்டு என்ன ஆகப் போகிறது? அநுதாபப் பட்டுத்தான் என்ன ஆகப் போகிறது? தனி மனிதனுடைய அநுதாபங்கள் வெறும் எண்ணமாக எழுந்து நிற்பதைத் தவிர வேறென்ன செய்ய முடியும் குமரப்பன்? ஒரு பிரச்னைக்கு முடிவு ஏற்பட வேண்டுமானால் சமூகத்தின் சக்தி வாய்ந்ததும் ஒன்றுபட்டதுமாகிய முழு அநுதாபமும் அந்தப் பிரச்னையின் பக்கமாகத் திரும்ப வேண்டும். ஆனால் நீயும் நானும் இங்கே நம்மைச் சுற்றிப் பார்க்கிற சமூகமே பரிசுத்தமில்லாததாக இருக்கிறதே? நூறு சாதிகள், நூறாயிரம் வேற்றுமைகள், போதாத குறைக்கு நவீன சாதிகளாக வளரும் அரசியல் கட்சிகள், இவ்வளவும் நிறைந்த சமூகத்தில் அல்லவா நீயும் நானும் வாழ்கிறோம்? பேசுவதைத் தவிர வேறு என்ன செய்கிறோம் நாம்?''




''ஒன்றும் செய்யாமலே இருக்கலாம்! ஆனால் அதற்கு வேறு எத்தனையோ காரணங்கள் உண்டு சத்யம்! அறியாமையும், வறுமையும்தான் இந்த நாட்டில் மனிதர்களைப் பிரிக்கவும், தரப்படுத்தவும் காரணமாக இருக்கின்றன. பழைய காலத்தில் பெண்களின் பரிசுத்தம் சோதிக்கப்படுவதற்கு அக்கினிப் பிரவேசம் இருந்ததைப் போல் வறுமை வேதனைகளாலும் அறியாமை இருளினாலும் துன்பப்படுகிற நாடு தன் பரிசுத்தத்தை நிரூபித்துக் கொள்ள உழைப்பையும், நம்பிக்கையையும் வேள்வித் தீயாய்ப் பெருக்கி அவற்றின் ஒளிவெள்ளத்தே மூழ்கி எழ வேண்டும்! நேர்மையான இலட்சியத்தை முன் நிறுத்திச் செய்யப்படுகிற ஒவ்வோர் இயக்கமும் சமூகத்துக்கு ஓர் அக்கினிப் பிரவேசம் தான்....''

''ஒப்புக் கொள்கிறேன், குமரப்பன்! ஆனால் மோகினியைப் போன்றவர்களின்

துன்பத்துக்காக யாரும் இயக்கம் நடத்த மாட்டார்கள். அவர்கள் இப்படியே இந்தக் கவலைகளோடு வெந்து அழிய வேண்டியதுதான்! சமூகத்தில் எல்லாருமே தாளுக்காகப் புறக்கணித்து விடுகிற பகுதி அது.''

''நிச்சயமாக இல்லை! நீ சொல்லிய விவரங்களிலிருந்து அவளைப் போல் பிடிவாதக்காரப் பெண் தன்னைக் காத்துக் கொள்வதில் தனக்குத் தானே ஓர் இயக்கமாக இருப்பாள். 'சாது மிரண்டால் காடு கொள்ளாது' என்று ஒரு பழமொழி உண்டு. மோகினி எவ்வளவுக்கு எவ்வளவு மென்மையாகவும், அழகாகவும் இருக்கிறாளோ, அவ்வளவுக்கவ்வளவு உறுதியாகவும் இருப்பாள். கண்ணாயிரங்களும், மஞ்சள்பட்டி ஜமீன்தார்களும் அவளுக்கு முன்னால் முகத்தில் கரியைப் பூசிக் கொண்டு தான் போகப் போகிறார்கள். நீ கவலைப்படுவதை விட்டு விடு! நிம்மதியாக மல்லிகைப் பந்தல் கல்லூரியில் போய் வேலையை ஒப்புக் கொள். கல்லூரி நேரம் போக எஞ்சிய நேரத்தில் நிறையப் படி. நிறையச் சிந்தனை செய். டாக்டர் ஆப் லிடரேசர், மாஸ்டர் ஆப் லிடரேசர் என்று எத்தனை பெரிய பெரிய பட்டங்கள் எல்லாம் உண்டோ அத்தனையையும் வாங்கித் தீர்ப்பதற்கு இப்போதிருந்தே திட்டம் போடு. மல்லிகைப் பந்தலைப்போல் அழகிய ஊரிலிருந்து கொண்டு நாட்களை வீணாகக் கழித்து விடாதே. வாழ்க்கைத் தரம் உயர்ந்த ஊர் அது... விலைவாசிகள் அதிகமாயிருக்கும். சிக்கனமாயிருக்கப் பழகிக் கொள்!.... இன்னொரு செய்தி. வருகிற ஞாயிற்றுக்கிழமை மாலை நாலும் கல்லூரி நாளில் பழகிய நெருக்கமான நண்பர்களும் ஓட்டலில் உனக்கு ஒரு விருந்து வைத்திருக்கிறோம். அதையும் இப்போதே நினைவு வைத்துக் கொள்....'' என்று சொல்லிக் கொண்டே புறப்படுவதற்காக மணியைத் தட்டி விட்டு எழுந்தான் குமரப்பன்.

''எனக்கு வேலை கிடைத்தால் நீங்கள் எல்லாரும் விருந்து வைத்து விடை கொடுக்க வேண்டும் என்பது என்ன முறையோ?''

''முறைதானடா சத்யம்! நம் நண்பர்களில் இன்னும் வேலை கிடைக்காதவர்கள் பலர் இருக்கிறார்களே......?... அவர்களுக்கெல்லாம் உனக்கு வேலை கிடைத்து விட்டது என்பதை ஞாபகப் படுத்துவதற்கும் உனக்கு விடைகொடுப்பதற்கும் சேர்த்துத்தான் இந்த விருந்து!''

''நான் மதுரையை விட்டுப் புறப்பட்டுப் போகிறேன் என்பதை நம் நண்பர்



களை நம்ப மாட்டார்கள் குமரப்பன்! என்னைப் போல் இந்த ஊரின் மேல் மோகம் கொண்டவன் இருக்க முடியாது.''

''இருந்தும் இப்போது நீ மல்லிகைப் பந்தலின் மேல் கொண்டிருக்கிற மோகம் அதிகமாகி விட்டது....இல்லையா?''

''மோகம் என்று சொல்லாதே. அது மதுரையின் மேல் மட்டும்தான் உண்டு. மல்லிகைப் பந்தலைப் போன்ற மலை நாட்டு நகரத்தில் சரியான நிர்வாகத்தோடு நடைபெறுகிற ஒரு கல்லூரியில் வேலை பார்க்க நினைக்கிறேன் நான். அதை மோகம் என்று நீ சொன்னால் நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்.''

''சரி, சரி! எப்படிச் சொன்னால் ஒப்புக் கொள்வாயோ அப்படியே வைத்துக் கொள். இப்போது புறப்படு. மணி பதினொன்றாகப் போகிறது....''—குமரப்பன் துரிதப்படுத்தவே மணல்மேட்டிலிருந்து சத்தியமூர்த்தியும் எழுந்திருந்து புறப்பட்டான். போகும் போதும் பேசிக் கொண்டே போனார்கள் நண்பர்கள்.

''மல்லிகைப் பந்தல் முதல்வரைப் பற்றி நினைத்தால்தான் தயக்கமாக இருக்கிறதடா குமரப்பன். பார்த்த சில மணி நேரத்திலேயே என் மேல் பொறாமை ஏற்பட்டு விட்டது அந்த மனிதருக்கு. நான் மாணவர்களைக் கவர்ந்து என் வசப்படுத்திக் கொண்டு விடுவேனோ என்று அவருக்குப் பயமாயிருக்கிறது. பிறருடைய தகுதிக் குறைவைக் குறித்து வருந்துகிறவர்களோடு சேர்ந்து நாமும் வருந்தலாம். பிறருடைய தகுதியைக் கண்டே வருந்தினால் அவர்களைப் பார்த்து என்ன செய்ய முடியும்?''

''என்ன செய்ய முடியுமாவது? நன்றாக வாய் விட்டுச் சிரிக்க முடியும்? அப்படிப்பட்டவர்களைப் பார்த்து நீ ஏன் கவலைப்படுகிறாய் சத்யம்? பிறருடைய பொறாமையை இப்படி மதிப்பிடத் தெரிந்து கொள்ளேன். உன்னிடம் ஏதோ ஒரு சாமர்த்தியம் — அவர்கள் பொறாமைப்படத்தக்க சாமர்த்தியம் இருப்பதால்தானே பொறாமைப்படுகிறார்கள்? உன் சாமர்த்தியத்தைப் பாராட்டுகிறவர்கள் உன்னை ஒப்புக் கொண்டு விடுகிறார்கள். பாராட்ட முடியாதவர்கள் பொறாமைப்படுவதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்? நான் சொல்வதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்: 'பிறர் வழி உண்டாக்கியபின் நடப்பதா அல்லது நாம் நடப்பதாலேயே ஒரு புது வழியை உண்டாக்குவதா?' என்பதுதான் பிரச்னை. உன்னையும் என்னையும் போலத் துணிந்த கட்டைகள் பிறர் உண்டாக்கிய வழியில் நடப்பதைவிட நாமே நடந்து வழி உண்டாக்குவதைத்தான் விரும்புவோம்..... அப்படி வழி உண்டாக்க விரும்புகிற



வர்களுக்கு மற்றவர்கள் தொல்லையளிப்பது இயல்புதான். மோகினியின் நிலைமையும் அதுதான்! அவளைப் போன்றவர்கள் எந்த வழியில் போக வேண்டும் என்று அவளுடைய தாயும் கண்ணாயிரமும், மஞ்சள்பட்டியோ — மரகதப்பட்டியோ — அந்த ஜமீன்தாரும் எதிர்பார்க்கிறார்களோ. அந்த வழியை வெறுத்து அவள் புது வழியில் வர ஆசைப்படுவதால்தான் துன்பப்படுகிறாள். ஆனால் இத்தகைய துன்பங்கள் மனிதனைப் படம் போட்டு எடுக்கும் புனித அநுபவங்கள். இவற்றைத் தைரியமாக எதிர்கொள்ள வேண்டும். நேருக்கு நேர்நின்று சமாளிக்கத் தெரிய வேண்டும் நமக்கு.''

''எதிர் கொள்வதற்குப் பயந்தோ, தயங்கியோ, இவற்றை உன்னிடம் சொல்லவில்லை, குமரப்பன்! நீ சொல்வாயே, மனிதர்களில் சிலரும் 'எல்' போர்டாவது 'ஆன் டெஸ்ட்' போர்டாவது மாட்டிக் கொள்ள வேண்டும் என்பதாக — அந்தப் ' போர்டு ' மாட்டிக் கொள்ள வேண்டிய மனிதர் ஒருவர் நான் பணி புரியப் போகிற மல்லிகைப் பந்தல் கல்லூரியில் இருக்கிறார் என்பதற்காகச் சொல்ல வந்தேன்.''

''அப்படி மனிதர்கள் இல்லாத இடம் உலகத்தில் எங்கேதான் இருக்கிறது? விட்டுத் தள்ளு.... போய் நன்றாகத் தூங்கு'' என்று சத்தியமூர்த்தியின் வீட்டு வாசலில் அவனுக்கு விடைகொடுத்து அனுப்பி விட்டுப் புறப்பட்டான் குமரப்பன்.

'இவ்வளவு அருமையான நண்பனைப் பிரிந்து வெளியூர் செல்லப் போகிறோமே' என்று எண்ணியபோது சத்தியமூர்த்தியின் இதயம் அழுதது. கல்லூரி நாட்களின் இனிய அநுபவங்களையும், 'இலட்சியம்' என்ற பெயரில் நண்பர்களாகச் சேர்ந்து கையெழுத்துப் பத்திரிகை நடத்தியதையும் அந்தக் கையெழுத்துப் பத்திரிகையின் கடைசிப் பக்கத்தில் குமரப்பன் வழக்கமாக வரையும் கேலிச் சித்திரங்களையும் நினைத்தான் சத்திய மூர்த்தி. அந்தக் கையெழுத்துப் பத்திரிகையின் கடைசிப் பக்கத்தில் 'ஏமாற்றம்' என்ற தலைப்பில் வழக்கமாகக் கேலிச் சித்திரங்களை வரைவான் குமரப்பன். ஏமாற்றம் 1, ஏமாற்றம்—2 என்று இப்படி வரிசையாக அதே தலைப்பில் அந்தக் கேலிச் சித்திரங்கள் வரும். ஒரு நாள் சத்தியமூர்த்தியும் மற்ற நண்பர்களும் ''இந்தா குமரப்பன்! ஏமாற்றம் என்ற தலைப்பில் தான் படம் போடுவாய் என்றால் இனி மேல் நீ நம் கையெழுத்துப் பத்திரிகையில் ஒரு படமும் போட வேண்டாம் அப்பா.....'' என்று அவனைக் கண்டித்துப் பார்த்தார்கள்.

''என்னடா இது? இதற்கா இப்படிக் கோபித்துக் கொள்கிறீர்கள்? முதல் பக்கத்தில் இலட்சியம் என்று பத்திரிகையின் பெயரை எழுதியிருக்கிறீர்கள்! நான் கடைசிப் பக்கத்தில் ஏமாற்றம் என்று அது முடிகிற இடத்தை விளக்குகிறேன்....'' என்று குத்தலாகப் பதில் சொல்லிக் கூடியிருந்தவர்களிடையே சிரிப்பலைகளைக் கிளப்பினான் அவன். பிறவியிலேயே அவன் கேலிச் சித்திரக்காரன்தான். கண்ணாயிரத்தைப் பற்றி ஒரு நாள் அவன் கூறிய கருத்தை இப்போது சிந்தித்தான் சத்தியமூர்த்தி.. நினைக்க நினைக்கச் சிரிப்புமூட்டுவதாக இருந்தன குமரப்பனின் அந்த வாக்கியங்கள். மறுபடியும் அவற்றையே நினைத்தான் சத்தியமூர்த்தி. ''இந்தக் கண்ணாயிரம் இருக்கிறாரே; அவர் விலாங்கு மீனைப் போன்றவர். பிடித்தால் நழுவி விடுவார். நழுவிய பின்னும் பலர் அவரைப் பிடிக்க முயன்று பின்னால் ஓடித் துரத்திக் கொண்டிருப்பார்கள். பிடித்தால் நழுவி ஓடிவிடுவதும் நழுவி ஓடிய பின்பும் பலரைக் காக்க வைத்தும் தம்மைப் பிடித்தால் காரியம் ஆகும் என்று வீண் பிரமை கொள்ளச் செய்வதும்தான் அவருடைய சாமர்த்தியங்கள். விலாங்கு மீனையாவது வலையைப் போட்டுப் பிடித்துத் தொலைக்கலாம். கண்ணாயிரம் யாருக்கும் பிடி கொடுக்க மாட்டார். ஆனால் அவரிடம் பலர் பிடி கொடுத்தும், பிடிபட்டும் தவித்துக் கொண்டிருப்பார்கள். இதுதான் அந்த ஆளைப் பற்றின வாழ்க்கைச் சித்திரம்'' என்று அளவெடுத்துச் சொன்னாற் போல் குமரப்பன் பலமுறை சொல்லியிருக்கிறான். மனிதர்களைப் படித்து முடிப்பதில் அவனுக்கு நிகரான நிபுணன் அவன்தான். குமரப்பனும் தானும் சந்தித்து மனம் திறந்து பேசியிருக்கும் பல சந்தர்ப்பங்கள் எல்லாம் சத்தியமூர்த்திக்கு நினைவு வந்தன. அன்றிரவு அவன் கண்கள் சோர்ந்து உறங்கத் தொடங்கிய போது மூன்று மணிக்கு மேல் இருக்கும். மறு நாள் காலையில் சில வெளியூர் நண்பர்களுக்குக் கடிதம் எழுதினான். மதுரையை விட்டு அவன் மல்லிகைப் பந்தலுக்குப் புறப்படுவதற்கு இன்னும் இரண்டு மூன்று வாரங்களே இருந்தன. ஞாயிற்றுக் கிழமை மாலை நகரத்தின் பெரிய உணவு விடுதி ஒன்றில் குமரப்பனும் சத்தியமூர்த்தியின் நண்பர்களும் அவனுக்கு வழியனுப்பு உப

சாரமாக ஒரு விருந்து கொடுத்தார்கள். நண்பர்கள் சிரிப்பும், கேலியுமாகப் பேசிக் கொண்டிருந்தாலும் அவன் மனம் அவர்களை யெல்லாம் பிரிந்து புதிய ஊருக்குப் போவதை உணர்ந்து தவித்தது. தன்னுடைய இன்ப ஞாபகங்களும், துன்ப ஞாபகங்களும் வெற்றிகளும், தோல்விகளும் சகலமும் அத்தனை ஆண்டுகளாக அந்த நகரத்தோடு பிணைந்திருந்ததை நினைத்தான் அவன். இதைத்தான் தேசிய உணர்ச்சி என்று வேறு பெயரிட்டு அழைக்கிறார்களோ என்றும் அப்பொழுது அவன் எண்ணினான். நண்பர்கள் அதை ஒரு சிறு கூட்டமாகவே நடத்தி விட்டார்கள். ''சத்தியமூர்த்தியைப் போன்ற ஓர் உயிர் நண்பனை வெளியூருக்கு அனுப்பும் போது பேசுவதற்கு வார்த்தைகள் கிடைக்காத துயரத்தினால் பேசாமலே உட்காருகிறேன் நான்'' என்று நீர் குழம்பும் கண்களோடு பேச்சை முடித்து விட்டான் ஒரு நெருங்கிய நண்பன். குமரப்பன் சிரிக்கச் சிரிக்க நிறையப் பேசினான். வேறு சில நண்பர்களும் பேசினார்கள். மதுரையைப் பிரிந்து வெளியூர் போக விருப்பதை நிச்சயமாக ஞாபகப்படுத்துவதைப் போல் அந்த விருந்தும் நடந்து முடிந்து விட்டது. அது மகிழ்ச்சியா வேதனையா என்று புரிய முடியாத ஒரு நிலை. உணவு விடுதியில் விருந்து முடிந்து வீடு திரும்பும் போது அவன் தவிக்கும் மனத்தோடு தான் திரும்பினான். தந்தை வீட்டுத் திண்ணையில் அவனை எதிர்பார்த்துக் காத்திருந்தார். ''வா, சத்யம்! இதில் நீ கையெழுத்துப் போட வேண்டிய தில்லை என்று நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாச்சு. கண்ணாயிரம் கேட்கிற வழியாயில்லை. 'எதற்கும் பையனிடமும் ஒரு கையெழுத்து வாங்கி விடுங்கள்' என்கிறார். நீயும் போட்டு விடேன்'' என்று பத்திரக் காகிதத்தை நீட்டினார் தந்தை. வீட்டை அடமானமாக வைத்துக் கண்ணாயிரத்தினிடம் கடன் வாங்குவதற்காக எழுதப்பட்ட பத்திரக் காகிதம் அது.

''கொஞ்சம் பொறுத்துக் கொண்டு செய்யலாமே, அப்பா! கண்ணாயிரம் பின்னால் எப்படி யெப்படி நடந்து கொள்வாரோ?'' — என்று அவன் கூறிய சொற்களைத் தந்தை கேட்க வில்லை. விரும்பவும் இல்லை.

''கையெழுத்துப் போடு சொல்கிறேன்'' என்று வற்புறுத்தினார். தந்தையைப் பகைத்துக் கொள்ள முடியாத காரணத்தால் அவர் என்ன சொன்னாரோ அதைச் சொன்னபடியே செய்தான் சத்தியமூர்த்தி. (தொடரும்)

## வியாபாரிகளின் நடனம்!

பத்து வியாபாரிகள் பாண்டிச்சேரிக்குச் சென்று வியாபாரம் செய்துவிட்டுத் தங்கள் ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தனர். காட்டுர் வழியிலே மூன்று திருடர்கள் அவர்களை மடக்கிவிட்டனர். திருடர்கள் வியாபாரிகளிடமிருந்த பணம், கடுக்கன், மோதிரம், கைக்கடிகாரம் முதலியவற்றையும் பறித்துக் கொண்டார்கள். அவர்களிடமிருந்த ஆடைகளையும் பிடுங்கிக் கொண்டு கை கொட்டி நகைத்து ஆரவாரம் செய்தனர்.

அதோடு திருடர்களின் குறும்புத்தனம் நிற்கவில்லை. வியாபாரிகளைக் கோவணத்தோடு நிறுத்தி, "ஆரும்! நீங்கள் எல்லோரும் நாட்டியம் ஆடுங்கள். நாங்கள் ரசிக்கிறோம்!" என்றனர்.

வியாபாரிகளும் வேறு வழியில்லாமல் ஆட ஆரம்பித்தனர். அவர்களில் புருஷோத்தமன் புத்திசாலி. நடனம் ஆடுவதற்கு ஏற்றாற்போல் ஒரு பாட்டையும் பாடினான்.

"நர்மனும் புலிப்பேர், தானனும் இருப்
பேர், சாவன்று தானலே, இருவாணதா
பெண் கற்றினால், சாவன்று தானன் மீதி
தா, தை, தோ ததிங்கிண தோம்"

என்று புருஷோத்தமன் பாடியதும் மற்ற வியாபாரிகளும் அதற்கேற்றபடி பாடினார்கள். இந்தப் பாட்டின் பொருள் வியாபாரிகளுக்கு மட்டுமே தெரியும். அவர்கள் வியாபாரத்துக்காகப் பயன்படுத்தும் சூட்சும மொழி அது. பிறரால் அதைப் புரிந்துகொள்ளவும் முடியாது.

'சா' என்றால் ஒன்று. 'இரு' என்றால் மூன்று. 'புலி' என்றால் பத்து. புத்திசாலி புருஷோத்தமன் பாடிய பாட்டின் பொருள் (நர்மனும் புலிப்பேர்) அதாவது நாமோ பத்துப் பேர்கள். (தானனும் இருப்பேர்) அதாவது திருடர்கள் மூன்று பேர்கள்; (சாவன்று தானலே இருவாணதா பெண் கற்றினால்) ஒரு திருடனுக்கு மூன்று பேர்களாகப் பிடித்துக் கொண்டால், (சாவன்று தானன் மீதி) நம்மில் ஒருவன் மீதி இருக்கிறான். அவன் அவர்களைத் துணியால் கால் கைகளைக் கட்டிப் போட்டு விடலாம் என்பதே பாட்டின் பொருளாக இருந்தது.

வியாபாரிகள் அத்தனை பேரும் புருஷோத்தமன் பாடிய பாட்டின் பொருளைத் தெரிந்து கொண்டு ஆடினார்கள். ஆட்டம் உச்ச நிலையை அடைந்ததுடன் ஒரு திருடன் மீது மும்மூன்று வியாபாரிகளாகத் தாவி மூன்று திருடர்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். எஞ்சிய புருஷோத்தமன் திருடர்களைக் கோவணங்களாக்கிக் கட்டிப் போட்டான்.

வியாபாரிகள் தங்களுடைய நகைகள், பணம் முதலானவற்றை எடுத்துக் கொண்டு "எவன் ஒருவன் அதிக அகம்பாவம் கொள்ளுகிறானோ, அவன் அழிவை அதி விரைவில் அடைகிறான்" என்று கூறித் திருடர்களை உருட்டி விட்டு ஓடிச் சென்று அருகிலிருந்த போலீஸ் நிலையத்தில் விவரம் சொல்லவும் அவர்கள் விரைந்து சென்று கட்டப்பட்டுக் கிடந்த திருடர்களை எல்லாம் கைது செய்தனர்.

எல்லாரும் புருஷோத்தமனின் புத்திசாலித்தனத்தைப் பாராட்டினார்கள்.

பி. ஜி. மங்கை





**உங்கள் ஆல்பத்துக்கு :**

மேலே உள்ள படத்தைப் பார்த்ததும் நம் ஊரில் கரகம் ஆடிவரும் ஆளின் நினைவு வருகிறதல்லவா? ஆனால் இவர் நம் நாட்டைச் சேர்ந்தவரல்ல. ஆஸ்திரேலியாவுக்கு அருகில் உள்ள 'பிரின்ஸ் ஆப் வேல்ஸ்' தீவில் வாழும் பூர்வீகக் குடிகளின் போர்வீரர் இவர்.

## ஓூ கபா ஸீ (பர்மா)

பர்மாக் குழந்தைகள் விளையாடும் இந்த ஆட்டத்தில் ஆறு அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் கலந்து கொள்ளலாம். ஆட்டக்காரர்கள் நேர் கோடுபோல் வரிசையாக நிற்க வேண்டும் — கைகளைப் பின்பக்கமாகக் கோத்து இணைத்தபடி. பின் பக்கமுள்ள கையை விரித்தபடி வைத்துக்கொள்ள வேண்டும். இந்த வரிசைக்குப் பின்னால் ஒரு ஆட்டக்காரர் நிற்பார். இவர் கையில் ஏதாவது காய், (கோலி, கல் இப்படி ஏதாவது) இருக்கும். இதை ஒவ்வொருவர் கையிலும் வைத்து வைத்து அவர்கள் கையில் போட்டு விடுவதாகப் பாசாங்குசெய்ய வேண்டும். ஒவ்வொருவரும் தம் கையில் காய் விழப்போகிறது என்று தவிப்புடன் தயாராக இருப்பார்கள் ஓடுவதற்கு.



கடைசியில் யாராவது ஒருவர் கையில் காயைப்போட்டு விடுவார் அவர். கையில் காய் விழுந்த நபர் உடனே ஓடவேண்டும். ஓடும் அவரை அவரின் இரு பக்கமும் உள்ள மற்றவர்கள் (ஓரத்தில் உள்ளவரானால் அருகில் உள்ளவர்கள்) கட்டிப் பிடித்து அமுக்கிப் போட முயல வேண்டும்; ஆனால் தாங்கள் நிற்கும் இடத்தை விட்டு நகராமலே! அவர்கள் பிடிக்கு அகப்படாமல் அந்த நபர் ஓடிப் பின்புறமாக வந்து தமது இடத்தில் நின்றுவிடலாம். அகப்பட்டுக் கொண்டாலோ பின்னால் காயைக் கையில் போடும் நபராகப் பிடிபட்டவரும் அங்கிருந்தவர் இவர் இடத்துக்கும் இடம் மாறி விளையாட்டைத் தொடர வேண்டியதுதான். நீங்கள் விளையாடுகிறீர்களே 'குலை குலையாய் முந்திரிக்காய், நரியே நரியே சுற்றி வா!' என்று அதேபோல இல்லை இது?

## ஓடும் திருடனும் ஓடையும்



திருடன் பதினாறு பாத்தி நந்தவனத்தில்எப்படியெல்லாம் புகுந்து வெளியேறினான் என்பதை அருகே காண்கிறீர்கள்... எல்லாப் பாத்திக்குள்ளும் போயிருக்க வேண்டும், ஒருபாத்திக்குள் ஒரு முறை தான் நுழையவேண்டும் என்ற விதிகளின்படி இது ஒன்றே சாத்தியமான விடை. இனி திருடன் தப்பிவிடுவான் என்றுதானே நினைக்கிறீர்கள், அது தான் இல்லை. நந்தவனத்தைக் கடந்ததும் ஒரு ஆழமான நீரோடை குறுக்கே இருந்தது. குதித்து நீந்திச் செல்ல முடியாத நீரோடை அது. அதில் முதலைகள் உண்டு. சுற்று முற்றும் பார்த்தான் திருடன்—ஓடையைக் கடக்க ஏதாவது வழி புலப்படாதா என்று. சற்றுத் தூரத்தில் சில பலகைகள் அடுக்கிக் கிடந்தன. மகிழ்ச்சியோடு அதனருகே ஓடினான் திருடன். பலகைகளைச் சோதித்தபோது அவனுக்கு முதலில் ஏமாற்றமாகத்தானிருந்தது. ஏன் தெரியுமா? ஓடையின் அகலமோ பத்தடி. பலகைகளின் நீளமோ ஒன்பதடி. ஆனால் எட்டுப் பலகைகள் இருந்தன. இருந்து என்ன பயன்? ஒரு அடி குறைவான பலகைகளைக் கொண்டு எப்படி ஓடையைக் கடப்பது? ஆனால் திருடன் பலகைகளின் உதவியால் தப்பிச் சென்றான். எப்படி?





## ஸ்ரீமதிகளும் குமாரிகளும்



ஒரு விருந்துக்கு ஸ்ரீமதிகள் நீலா (நீலம்) கலா (கருப்பு) பட்டு (சிவப்பு) மரகதம் (பச்சை) நால்வரும் தங்கள் தங்கள் குமாரிகளுடன் வந்திருந்தார்கள். மொத்தம் எட்டுப் பேர்கள். பச்சை, நீலம், கருப்பு, சிவப்பு ஆகிய உடைகளை இரண்டு இரண்டு பேர்கள் அணிந்திருந்தார்கள். ஸ்ரீமதி கலா பச்சை ஆடைகளை அணிந்திருந்தாள். ஆனால் ஸ்ரீமதி மரகதம் கருப்பாடை அணியவில்லை. குமாரி பட்டு நீலத் தாவணி அணிந்து வந்திருந்தாள். ஆனால் குமாரி நீலாவோ சிவப்புத் தாவணி உடுத்தவில்லை. எந்தப் பெண்ணும் தங்கள் பெயருக்கு ஏற்ற வர்ணத்தில் ஆடை அணியவில்லை. தங்கள் குமாரிகள் உடுத்தியிருக்கும் வர்ணத்தில் தாயார்கள் புடவை உடுத்தி வரவில்லை. வந்திருந்தவர்களில் எந்த இரண்டு ஸ்ரீமதிகளோ குமாரிகளோ ஒரே மாதிரியான ஆடைகளை அணிந்திருக்கவில்லை. அப்படியானால் ஒவ்வொருவரும் அணிந்திருந்த ஆடைகளின் வர்ணமென்ன? (விடை அடுத்த இதழில்)






ரஸக்குறைவான காட்சிகளில் நடிக்க மாட்டேன்; ஆபாசமான வசனங்களைப் பேச மாட்டேன்; தரக் குறைவான பாகம் கொடுக்கப்பட்டால் அதனை ஏற்றுக் கொள்ளவே மாட்டேன் என்று ஒரு நடிகர், படாதிபதியுடன் தாம் செய்து கொள்ளும் ஒப்பந்தத்தில் கண்டிப்பாக எழுத வேண்டும் என்று வற்புறுத்தினார் என்றால் அதிசயமாக இருக்கும். ஆனால் அத்தகைய ஓர் அதிசய நடிகர் இருக்கத்தான் செய்கிறார். மேற்கூறிய ஷரத்துக்கள் இல்லாத ஒப்பந்தம் எதிலும் கையெழுத்துப் போடுவதில்லை என்று விடாப்பிடியாகக் கூறிய ஒரே நடிகர் திரு கே. சாரங்கபாணி.

இந்தப் பழம்பெரும் ஹாஸ்ய நடிகர், பேசும் படம் வருவதற்கு முன்பே தமிழ் நாடக மேடையில் சுடர் விட்டுப் பிரகாசித்தவர். தமிழ் மக்களிடையே சுதந்திர ஆர்வத்தைக் கிளர்ந்தெழச் செய்கின்ற விதத்தில் அமைந்த புரட்சிகரமான நாடகங்களை நடத்தியவர். நினைவு தெரிந்த நாள் முதல் காந்திஜியைத் தெய்வமாகப் போற்றி வருபவர். வேதாரண்யம் உப்புச் சத்தியாக்கிரகத்தில் பங்கெடுத்துக் கொண்ட தியாகி. காந்திக் குல்லாய் போட்டால் தடியடி பட நேரிடும் என்கிற காலத்தில் தமது கல்யாண ஊர்வலத்தின் போதே துணிந்து காந்திக் குல்லாயுடன் கம்பீரமாய் வீற்றிருந்தவர்! கல்யாணப் பந்தலில் கதர்க் கடை வைக்க ஏற்பாடுசெய்தவர்!

அவர் நாடக உலகத்தில் சிறந்து விளங்கிய காலத்தில் நிகழ்ந்த சுவாரசியமான சம்பவம் ஒன்றை அவரே சொல்லக் கேட்டேன்.

சாரங்கபாணியே ஒரு நாடகக் குழுவை நடத்திக் கொண்டிருந்த சமயம். அவருடைய நாடகக் குழு கோயமுத்தூரில் முகாமிட்டிருந்தது. காந்தியடிகள் ஹரிஜன நிதி வசூலுக்காகத் தமிழகம் வந்திருந்தார். சாரங்கபாணி ஒரு நாடகம் நடத்தி அதில் கிடைக்கும் வசூலை ஹரிஜன நிதிக்குக் கொடுக்கத் தீர்மானித்து அடிகளை நாடகத்துக்கு அழைக்க விரும்பினார். அதில் ஒரு சிறு சங்கடம். கொட்டகைச் சொந்தக்காரர் திரு வின்சென்டின் அனுமதி பெறவேண்டுமே என்பது தான் அது. திரு வின்சென்ட் ஒரு ஜஸ்டிஸ் கட்சிக்காரர். அத்துடன் பதினெட்டு டூரிங் சினிமாத் தியேட்டர்களின் உரிமையாளர். ஆகவே வசதி உள்ளவர். அவரிடம் காந்திஜியைக் கோயமுத்தூருக்கு அழைப்பது பற்றிய பேச்சை எடுத்ததுமே அவருக்குக் கோபம் வந்துவிட்டது. "என் கொட்டகையில் அவரை வரவேற்க நான் தயாராக இல்லை" என்று கண்டிப்பாகக் கூறியது மல்லாமல் காந்தி மகானையும் இழித்துப் பேசினார். சாரங்கபாணியினால் அதைப் பொறுக்கவே முடியவில்லை. "நீங்கள் உத்தரவு கொடுக்காவிட்டாலும் கூட அடிகளை உங்கள் தியேட்டருக்கு வரவழைத்து ஹரிஜன நிதிக்கு ஒரு நாள் நாடக வசூலைக் கொடுக்கத்தான் போகிறேன். நீங்களும் பார்க்கத்தான் போகிறீர்கள்!" என்று அழுத்தமாய்க் கூறிவிட்டு விடுவிடுவென்று வெளியே வந்து விட்டார்.

குறிப்பிட்ட நாளில் திரு வின்சென்டின் அனுமதி இல்லாமல் காந்திஜிக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. நந்தனார் நாடகம்

# மறக்க முடியாத திரைப்படங்கள்

நடந்தது. நாடகத்தில் நடிக்க வேண்டிய சாரங்கபாணி காந்தியடிகளின் பாதத்துக் கருகில் மெய் மறந்து அமர்ந்து விட்டார். மேடையில் தோன்றிய நடிகர்களும் முன் வரிசையில் அமர்ந்திருந்த மகாத்மாவின் தேஜோமயமான திருமுகத்தைப் பார்த்த வாறு செயலற்று நின்றார்கள்! கோவை நகரமே கண்டும் கேட்டும் இராத அளவுக்கு மாபெரும் கூட்டம் கூடி விட்டது. கூட்டத்தைப் பெரு மிதத்தோடும், உள்ள நெகிழ்ச்சியோடும் நோக்கிய சாரங்கபாணி நாடக மேடையை ஒட்டிச் சற்றுத் தூரத்தில் திரு வின்சென்ட் பய பக்தியோடு கைகட்டிய வண்ணம் காந்திஜி யைப் பார்த்துக் கொண்டு நிற்பதைக் கண் டார். அந்தக் காட்சியைச் சாரங்கபாணி யினால் நம்பவே முடியவில்லை.

ஒரு வழியாக நாடகம் எப்படியோ முடிந் தது. காந்தி மகானிடம் நிதியை வழங்கிய பிறகுதான் சாரங்கபாணி அமைதி பெற்றார். அப்பொழுது வின்சென்ட் சாரங்கபாணியிடம் ஓடிவந்தார். "நீங்கள் என் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் காந்திஜியை நாடகத் துக்கு வரவழைத்ததற்காக உங்களுக்கு எப்படி நன்றி செலுத்துவது என்றே தெரியவில்லை. அம் மகானிடம் நான் ஏழை பங்காளனாகிய ஏக நாதரையே கண்டேன்" என்று கூறும் போது அவர் குரல் நெகிழ்ந்து விட்டது. சாரங்கபாணிக்கு மெய் சிலிர்த்தது.

"நல்ல பாத்திரங்களை ஏற்றுக் குற்றமற்ற ஹாஸ்யங்களைக் குறைவில்லாமல் அள்ளி வழங்க வேண்டும் என்பதுதான் என் கொள்கை. என் நடிப்பின் மூலம் பலருக்கும் மகிழ்ச்சி உண்டாகுமானால் அதுவே எனக்குத் திருப்தி அளிப்பதாகும்" என்று சாரங்கபாணி கூறியது என் மனத்தில் பதிந்துவிட்டது.

மெதுவாகப் பேச்சை, "என் மனைவி"யின் பக்கம் திருப்பி விட்டேன். 1942-ல் "என் மனைவி" வெளி வந்து ஏக காலத்தில் தமிழ் நாடெங்கும் சக்கைப் போடு போட் டது. 'என் சார், என் மனைவியைப் பார்த் தீர்களா?' 'என் மனைவி எப்படி இருக்கிறாள்?' 'என் மனைவியை நீங்கள் எந்த ஊரில் பார்த் தீர்கள்?' என்று ஊர் முழுதும் பேச்சாக இருந்தது. அதில் ஆயுர்வேத வைத்திய...



வேம்பு ஐயராக வருகிறார் சாரங்கபாணி. அவர் நடையில் ஒரு பாணி, சிரிப்பில் ஒரு பாணி, பேச்சில் ஒரு பாணி, முக பாவங்களில் எத்தனையோ பாணி — சாரங்கபாணியின் நடிப்பே தனிப் பாணி என்று சொல்லும்படி, தமக்கெனத் தனி வழி! "மாதரை நீனையாதே" என்ற பாட்டைச் சொந்தக் குரலில் அருமையாகப் பாடி யிருக்கிறார் திரு கே. சாரங்கபாணி.

"என் மனைவி"யைப் பார்த்தவர்கள் "சங் கடமான சமையலை விட்டு, சங்கீதம் பாடப் போறேன்" என்ற பாட்டை இன்னும் மறக் காமல் பாடிக் கொண்டிருக்கிறார்கள் என் பது என் சொந்த அநுபவம் கலந்த உண்மை. அதைப் பாடியவர் சமையல்காரச் சுப்புவாக வந்த ஆர். நடேசய்யர்.

திரைக் கதை ஒரே சந்தேகமாகவும் விபரீத மாகவும் இருந்தாலும் கடைசியில் எல்லாம் சுபமாகவே முடிகிறது. சென்னையில் தனபால் குப்தா என்ற தனவந்தர் மூன்றுந்தாரமாக ரேவதியை மணந்து கொள்கிறார். ரேவதியும் ஆயுர்வேத வைத்தியர் வேம்பு ஐயரும் பேசிக் கொண்டிருப்பதை அவர் மனைவி செல்லம் பார்த்து விடுகிறாள்; சந்தேகிக்கிறாள். ரேவ தியை அவள் புருஷன் தனபால் குப்தா சந்தே கிக்கிறான். சந்தேகம் ஏற்படக் காரண காரி யங்களைச் சிரமப்பட்டுத் திணித்திருந்தனர்.

"என் மனைவி" கதையில் ஒன்றும் இல்லை. நடிகர்களின் நல்ல நடிப்பினால் படம் வெற்றி யடைந்தது. மீனலோசனி, கே. ஆர். செல் லம், பங்கஜம், பத்மா ஆகியவர்கள் தோன் றிப் படத்தின் தரத்தை உயர்த்தினர்.

"என்மனைவி"யை டைரக்ட் செய்தவர் சுந்தர ராவ் நட்கர்னி. சினிமாக் கலை நுணுக் கங்களை நன்குணர்ந்தவர். அவர் டைரக்ட் செய்த முதல் தமிழ்ப் படம் "என் மனைவி." அதற்குப் பிறகு பல தமிழ்ப் படங்களை டைரக்ட் செய்து அவர் டைரக்ட் செய்த படங்களுக்கு மட்டுமல்லாமல் தமக்கும் நல்ல பெயரைத் தேடிக் கொண்டார். சுந்தர ராவ் நட்கர்னியைப் பற்றிச் சொல்லும் போது சாரங்கபாணியின் குரல் நெகிழ்ந்து விட் டது. "நட்கர்னியைப் போல் உண்மையாக உழைக்கும் ஒரு டைரக்டரை இந்த நாளில் காண முடியாது. படம் முடிகிற வரையில் கண்ணும் கருத்துமாக இருந்து நடிகர்களை உற்சாகப்படுத்தி வருவார். ஒத்திகைகள் நிறைய நடத்தி அப்பொழுதே நடிக நடிகை யர்களிடமுள்ள குறைபாடுகளைப் போக்கி விடு வார். இப்பொழுதுதான் இந்த வழக்கமே போய் விட்டதே!" என்று கூறிச் சிரித்தார்.

'என் மனைவி'யில் பன்னிரண்டு பாடல்கள். அந்தக் காலத்தில் இவ்வளவு குறைந்த பாடல்களோடு ஒரு படம் வெளி வந்தது என்றால் அது ஒரு பெரிய அதி சயம். டி. கே. சுந்தர வாத்தி யார் இயற்றிய பாடல்கள் மிகவும் நன்றாக அமைந்திருந் தன. சாமியும் பூதமும், நார தரும், ஸ்ரீமந் நாராயணனும், சிவபெருமானும் தமிழ்ப் படங்களின் நிரந்தரப் பாத்திரங் களாக விளங்கி வந்த காலத் தில் ஒரு சமூகப் படம் பல வாரங்கள் ஓடி வெற்றிக் கொடி நாட்டியது என்றால் அது அதிசயம் இல்லையா? —விஜயம்

# சந்தேகம்



'ஸ்ரீராமஜயம், ஸ்ரீராமஜயம், ஸ்ரீராமஜயம்.....'

லட்சம் எழுத வேண்டும் என்பது அவரது சங்கல்பம். முப்பத்தை யாயிரம் முடிந்திருக்கிறது. பாக்கி அறுபத்தையாயிரத்தையும் முடித்துவிட வேணும்.

"என்ன சங்கல்பமோ?" மாணிக்கம் செட்டியாருக்குச் சிரிப்புத் தான் வந்தது.

ஐந்து வருஷங்களுக்கு முன்னுல் அவருக்கு இப்படி ஒரு சங்கல்பம் தோன்றியிருக்குமா? அவர் நினைவு, செயல் எல்லாமே வியாபாரம், வியாபாரம்!

அந்தக் காலத்தில் இந்த நேரத்தில் நிம்மதியாக உட்கார்ந்து ராம ஜயம் எழுதத்தான் நேரம் ஏது? இந்த நேரத்தில் வியாபாரம் விறுவிறுப்பாக இருக்கும். எட்டுப் பேர்கள் கை ஓயாமல் சாமான் களைக் கட்டினாலும் வாசலில் கூட்டம் நெரிசல்பட்டுக் கொண் டிருக்கும்.

"அப்போ அப்படி! இப்போ?" ஆழ்ந்த பெருமூச்சில் ஒருகணம் லயித்துக் கலங்கினுர். பார்வையைக் கடைக்குள் செலுத்தினுர்.

எட்டுப் பேர் கை ஓயாமல் சாமான் கட்டிக் கொண்டிருக்க வில்லை. அந்தக் காலத்தில் கால் வைக்க இடம் இல்லாமல் சாமான்கள் குவிந்திருக்கும். இடம் எல்லாம் காலியாக இருந்தது. ஆனுல் சோம்பு, மிளகு, கடுகு என்று எழுதப்பட்ட சில துருப்பிடித்த தகரங்கள் கொஞ்சம் இடத்தை அடைத்துக் கொண்டிருந்தன. ஒரு ஸ்டாண்டில் விரிசல் கண்ட மிட்டாய் ஜாடிகள். ஒன்றிரண்டில் மட்டும் கொஞ்சம் ஆரஞ்சு மிட்டாய்கள். ஒரு துத்தநாக வலையில் சைவ வீட்டுத் தலைமை ஆச்சி இரக்கத்துடன் அடுக்கித் தொங்க விட்டுப் போன கைமுறுக்குகள். வேலங்குடி ராவுத்தர் ஒரு மங்குத் தட்டில் சுமாரான வகைவாக வைத்து விட்டுப் போன நாலைந்து கவுளி வெற்றிலை.... வெற்றிலை வாங்குபவர்கள் பாக்குக் கேட்டால் கையை விரிக்க வேண்டும். அல்லது வெற்றிலையை மட்டும் தலையில் கட்டும் [illegible]

[illegible]

அந்தக் காலத்திலே ஒரு பயல் நாக்கு மேலே பல் போட்டு இப்படிக் கேட்பானு? பீடி, சிகரெட் மட்டுமல்ல, லாகிரி சம்பந்தப் பட்ட எந்தப் பொருளையுமே அவர் விற்பதில்லை. லவங்கம், கிராம்பு, ஜாதிக்காய் போன்றவற்றைக் கூட அவர் லாகிரிப் பொருள்களாகக் கருதி விலக்கி வைத்திருந்தார். காலம் கெட்டு, மனிதனும் கெட்டுப் போய் விட்டால், அதற்காக மரியாதை இல் லாமல் பீடி கேட்பதா?

"பீடி எல்லாம் இங்கே விற்கிறது இல்லே!" என்று ஆத்திரத்தை அரைகுறையாக மென்று கொண்டே முகத்தைத் திருப்பிக் கொண் டார் செட்டியார்.

"பீடி இல்லாம என்னய்யா கடை வச்சிருக்கே? கடையை இழுத்துச் சாத்திட்டுப் போகிறது தானே?" என்று அவரிடம் உறுமிவிட்டுப் போனுன் அவன்.

கடையை இழுத்துச் சாத்தி விட்டுப் போகலாம்; பேஷாய்ப் போக லாம். சாமான் இல்லாத கடையில் உட்கார்ந்து ஈ ஓட்டிக்கொண் டிருப்பதைவிட எங்கேயாவது போய்த் தொலையலாம்.

"என்ன, செட்டியாரே! சௌக்கியமா?" என்று வீதியில் ஒரு குரல் விசாரிக்கிறது.

செட்டியார் திரும்பினுர். கடையை நெருங்காமல் வீதியிலேயே நின்று கொண்டு, அரைப்புன்னகையைச் சிந்தினுர் மச்ச வீட்டு முத்தையாபிள்ளை.

அந்தக் காலத்தில் முத்தையாபிள்ளை இப்படி எட்டி நின்று பேசுவ ரா? மணிக்கணக்காகக் கடையில் வந்து உட்கார்ந்து கொண்டு, வியாபாரத்துக்கு இடைஞ்சலாய் நாலைந்து கவுளி வெற் றிலையை மென்று, வாசல் எல்லாம் 'புளிச் புளிச்' சென்று துப்பிச் செங்காவி அடித்து விட்டு, கடை மூடும் வரை கந்த புராண விரிவுரை ஆற்றி விட்டுப் போகிறவர். இப்பொழுது வீதியிலேயே நின்று சம் பிரதாய முறையில் குசலம் விசாரிக்கிருர். இவ்வளவு பெரிய இடைவெளி இல்லாமல், செட்டியாரை நெருங்கினுல், எங்கே கைக் காசுக்கு 'நட்டி' வருமோ என்று அவர் பயப்படுவது நியாயம் தானே?

'முத்தையா பிள்ளே! உம்ம பயம் தெரியு தும்காணும். நான் கெட்டுப் போனுலும் மானத்தை இன்னும் விட்டு விடவில்லை. உம்ம கிட்டே கால் காசு கடன் வாங்கி னதை விடத் தூக்குப் போட்டுக்கிட்டு நிப் பேன் காணும்' என்று சொல்ல வேண்டும் என்ற ஆத்திரத்துடன் தலை நிமிர்ந்தார்.

முத்தையா பிள்ளை எட்டத்தில் போய்க் கொண்டிருந்தார்.

## வாசவன்

“செட்டியாருக்கு வேண்டிய பழக்கார நண்பர்கள் எல்லாம் அவரைப் போலத்தான் விலகி ஓடுகிறார்கள். இருக்கிற வரை செட்டியார்வாள்! இல்லாதபோது யாரும் லட்சியம் செய்யவில்லை. செட்டியார் இந்த உலகத்தையும், இந்த நண்பர்களையும் புரிந்து கொள்ளாமல் எவ்வளவு ரூபாய்களை வாரி இறைத்திருக்கிறார்?

“வணக்கம் செட்டியார்வாள்!”

கெட்டுச் சீரழிந்த இந்த நிலையிலும் ‘செட்டியார்வாள்’ என்றும் ஒரு மரியாதையா? மரியாதை கொடுப்பதற்கும் ஒரு நபரா?

தலை நிமிர்ந்தார் செட்டியார்.

கடைச் சட்டத்தைப் பிடித்தபடி நின்று கொண்டிருந்தார் மெட்ராஸ் ஆரோக்கியம். அவர் இந்த ஊர்க்காரர்தான். பத்துப் பதினைந்து வருஷங்களுக்கு முன்னால் சென்னைக்குப் பிழைக்கப் போனவர். நல்ல நிலையில் அங்கேயே குடியும் குடித்தனமுமாக ‘செட்டில்’ ஆகி விட்டார். இங்கே வீடு வாசல் நிலபுலன் என்று ஒன்றும் இல்லை; பிறந்த மண் என்ற பாசம். எப்பொழுதாவது ஊருக்கு வந்துவிட்டுப் போவார். நாலைந்து வருஷங்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் அவர் வந்திருக்கிறார்.

“வரவேணும்” என்று கைகூப்பினார் செட்டியார்.

“உங்களை அடையாளமே புரியவில்லையே!” என்று உண்மையிலேயே உருகிப் போனார் ஆரோக்கியம்.

“அடையாளம் புரியவில்லையானாலும் என்னைச் ‘செட்டியார்வாள்’னு கூப்பிட்டிருப்பீங்களா?” என்று மழுப்பலாய்ச் சிரித்தார் செட்டியார்.

ஆரோக்கியத்தின் கண்கள் கடைக்குள் நீந்தின. செட்டியாரின் உடம்பைப் போலவே அதுவும் இளைத்துவிட்டிருந்தது. ஆல் போல் தழைத்து வாழ்ந்த ஒரு நல்ல மனிதரின் மாபெரும் வீழ்ச்சியை வாய்ப் பேச்சு இல்லாமலே அந்தச் சூழ்நிலை தெரிவிக்கத் தவறவில்லை. ‘நீறு பூத்துக் கிடக்கும் குமுறலைக் கிளறிக் கனிய வைக்கும் பேச்சு எதையும் பேசக் கூடாது.’

“காமாட்டி சௌக்கியமா இருக்குதுங்களா?” ஆரோக்கியம் பேச்சை வேறு பக்கம் மாற்றினார்.

“சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்?”

“அப்போ நான் கொஞ்சம் ஊருக்குள்ளே போய் விட்டு வாரேன்!”

“நல்லாப் போயிட்டு வாங்க. இன்னொரு சமாசாரம்....” சொல்லும் போதே செட்டியாரின் குரல் கரகரத்தது.



''என்ன, செட்டியார்வாள்!''

''என் வீட்டுக்காரி போன வருஷம் காலமாயிட்டா, மெட்ராஸ் தம்பி....'' செட்டியாரின் கண் கலங்கிக் குரல் தழுதழுத்தது.

''என்ன!'' அவர் கண்கள் கரகர வென்று கொட்டின. ''அம்மாவுக்கு என்ன சீக்கு?''

''அவ சாகிற வரையிலே என்ன சீக்கு என்கிறதைக் கண்டுபிடிக்கத் திருச்சி பெரிய ஆஸ்பத்திரி வரையிலே போனேன். இருந்ததைச் செலவழிச்சுப் பார்த்தேன். வியாதியைக் கண்டுபிடிக்க முடியவில்லே. என்னே ஏழையாக்கி விட்டு, அனாதையாக்கிவிட்டுப் போய்ச் சேர்ந்துவிட்டா தம்பி...'' முகத்தை மூடி விம்மி விம்மி அழுதார் செட்டியார்.

''காமாட்சி இருக்கிற போதே உங்களே நீங்க அனாதையின்னு சொல்லலாமா?''

''சொல்லப்படாது. அதுவும் இப்போ உங்களிடத்திலே சொல்லி இருக்கப்படாது. நீங்க ஊரைப் பார்க்க வந்த இடத்திலே என் வயித்து எரிச்சலேச் சொல்லி அழுதிருக்கப் படாது!'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டார் செட்டியார். ''என் கதையையே பேசிக்கிட்டு இருந்து விட்டேனே! உங்க குழந்தை குட்டிகள் சௌக்கியம்தானே?''

''நல்ல சௌக்கியம். எங்கே கப்பையாவைக் காணோம்?''

'கப்பையா' என்றதுமே செட்டியாரின் முகம் சிவந்தது. ''அயோக்கியன்! அவன் பேச்சை என்னிடத்திலே பேசாதீங்க'' என்று நெற்றி நரம்புகள் புடைக்கக் கத்தினார்.

ஆரோக்கியம் வாயடைத்துப் போனார். ''கப்பையா உங்க குடும்பத்திலே ஒருவனாக இருந்தானே செட்டியார்வாள்? பணம் போனால் மனிதர்களுமா போயிடுவாங்க?''

''அவனாகப் போகவில்லே. நான்தான் விரட்டி அடிச்சேன். உண்ட வீட்டுக்கே ரெண்டகம் நினைச்ச அந்தச் சண்டாளனைப் பத்திப் பேசாதீங்க தம்பி! நீங்க ஊருக்குள்ள போக வேணும்னு சொன்னீங்களே?''

''ஆமாமாம். நான் போயிட்டு நாளைக்கு வந்து உங்களைச் சந்திக்கிறேன்'' என்று விடை பெற்றுக் கொண்டார் ஆரோக்கியம்.

அவர் போய் விட்டார். ஸ்ரீராமஜயத்தை யாவது எழுதலாமே!

நோட்டைக் கல்லாவின் மேல் எடுத்து வைத்துக் கொண்டு எழுத உட்கார்ந்தார். கை ஓட வில்லே. மனம் கப்பையாவைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது.

அது பொன்னம்மா போய்ச் சேர்ந்த வேளை. வியாபாரத்தில் புரண்டு கொண்டிருந்த பணமும், பூர்வீக நிலமும் அவள் வியாதியைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் கரைந்து விட்டன. கடையில் சாமான் இல்லே. செட்டியார் மட்டும் பழக்க தோஷத்தால் கடைக்குப் போய் வேளா வேளைக்குத் திறந்து வைப்பதும் வேளை கெட்ட வேளையில் சாப்பாட்டுக்கு வருவதுமாக இருந்தார். ஓடியாடித் திரிந்த கப்பையா ஒரு வேலையும் இல்லாமல் திண்ணையில் படுப்பதும், துணையற்ற காமாட்சிக்குக் கூட மாட ஒத்தாசை புரிவதுமாக இருந்தான். அன்று பிற்பகல் செட்டியார் மத்தியானச் சாப்பாட்டுக்காக மாலை நாலு மணிக்கு வந்த போது, வீட்டுக்குள்ளே 'களீர்' என்ற சிரிப்பொலியையும், 'உண்மையைச் சொல், காமாட்சி' என்ற கப்பையாவின் குழைந்த குரலேயும் கேட்டுத் திடுக்கிட்டு நின்றார்.

''கல்யாணம் பண்ணிக் கொள்ள உனக்குச் சம்மதம்தானே?'' என்று தொடர்ந்து கேட்கிறான் கப்பையா.

'' சம்மதம் இல்லே'ன்னு பொய்யா சொல்லச் சொல்கிறீங்க?'' என்கிறாள் காமாட்சி.

''டேலே, கப்பையா!'' என்று வீடே அதிரும்படி உள்ளே நுழைகிறார் செட்டியார்.

கப்பையா ஒடுங்கி நிற்கிறான் மூலையில். காமாட்சி பதறிப் பதுங்கினாள் கதவுமறைவில்.

''உண்ட வீட்டிலே ரெண்டகம் நெனச்ச அயோக்கியப் பயலே! உன்னேப் பிள்ளே மாதிரி வளர்த்தேனடா! வளர்த்த கடா மாதிரி மார்பிலேயே பாய்ஞ்சிட்டியேடா!... நாங்க நிலேகெட்டுப் போயிட்டா வேலேக்காரப் பயலுக்குப் பொண்ணு கேட்கிற திமிர் வந்து விடுமாடா! போடா, வெளியிலே....''

''இதைக் கேளுங்க முதலாளி....''

''நான் இனிமேல் எதையும் கேட்க வேண்டியதில்லே. கேட்க வேண்டியதை வாசலிலேயே நின்னு கேட்டு விட்டேன். போறியா, கழுத்தைப் பிடிச்சுத் தள்ளட்டுமா?'' செட்டியார் கப்பையாவை நோக்கிப் பாய்ந்தார்.

''உங்களுக்கு அவ்வளவு சிரமம் வேண்டாம் முதலாளி. நானே போய் விடுகிறேன்!'' என்று கண்ணீரும் கம்பலேயுமாக வெளியேறினான் கப்பையா.

அதற்கப்புறம் காமாட்சியோடு அவருக்கு முகம் கொடுத்துப் பேசவே பிடிக்கவில்லே. அவர் சாது சாது என்று நினைத்துக் கொண்டிருந்த காமாட்சி காதலித்திருக்கிறாள் வேலேக்காரனே! என்ன அக்கிரமம்!

''வணக்கம் முதலாளி!'' - குரல் கேட்டு வாசல் பக்கம் பார்த்தார் செட்டியார்.

கப்பையா நின்று கொண்டிருந்தான்! கப்பையாதானா இவன்?

எத்தனை பருமனாக இருக்கிறான்? உடம்பிலே சில்க் சட்டை, கையிலே கடிகாரம், விரல்களிலே மோதிரங்கள். கொஞ்ச தூரத்தில் நின்று கொண்டிருந்தது ஒரு கார். பார்த்துக் கொண்டே இருந்த செட்டியார், வெறுப்புடன் பார்வையைத் திருப்பிக் கொண்டார்.

''வந்து நிற்கிற உங்க பிள்ளையை 'வா'ன்னு கூப்பிடாமல் முகத்தைத் திருப்பிக் கொள்கிறது நல்லா இருக்கா?'' என்று கேட்டுக் கொண்டேவந்தார் மெட்ராஸ் ஆரோக்கியம்.

''நீங்க ஊருக்குள்ளே போகலியா?'' என்று பார்வையைச் சற்றுத்திருப்பினார் செட்டியார்.

''எனக்கு ஊருக்குள்ளே என்ன வேலே? உங்களிடத்தில்தானே வந்திருக்கிறோம்?'' என்று சிரித்த ஆரோக்கியம், ஒரு கலியாணப் பத்திரிகையை செட்டியாரிடம் நீட்டினார்.

''யாருக்குங்க கல்யாணம்?''

''பத்திரிகையைப் பிரிச்சுப் பாருங்க, விஷயம் தன்னாலே புரியும்!''

செட்டியார் பத்திரிகையைப் பிரித்துப் படித்துப் பார்த்தார்.

காமாட்சிக்கும் ராமலிங்கம் செட்டியார் மகன் கிருஷ்ணனுக்கும் கலியாணமாம்!...

'தங்கள் நல்வரவைப் பெரிதும் விரும்பும்-மாணிக்கம் செட்டியாராம்!

அவருக்குத் தெரியாமலே அவர் பெயரில் திருமணப் பத்திரிகையா? அதுவும் ராமலிங்கம் செட்டியார் வீட்டில் சம்பந்தமா? இருவருக்கும் ஏழாம் பொருத்தம் அல்லவா? மேலும் பத்து லட்சம் பணக்காரராயிற்றே ராமலிங்கம்? அவர் வீட்டில் பெண் கொடுக்கக் கூடிய நிலையிலா இருக்கிறார் இவர்?

''என்னங்க இதெல்லாம்?'' என்று திணறினார் செட்டியார்.

''எல்லாம் காதல்தான் செட்டியார்வாள்!'' என்று புன்னகை செய்தார் ஆரோக்கியம்.

''யாருக்கும் யாருக்கும் காதல்?''

''உங்க காமாட்சிக்கும் ராமலிங்கம் செட்டியார் மகன் கிருஷ்ணனுக்கும்!''

செட்டியார் ஆச்சரியத்துக்காளாகி இருந்தார். முகத்தில் கொஞ்சம் கடுகடுப்பும் குறைவாக இருந்தது. சாதக நிலையை உத்தேசித்துச் சுப்பையாவே தொடர்ந்தான்: ''ஆமாம், முதலாளி! அவங்க ரெண்டு பேருக்கும் காதல்தான். அதைத் தெரிஞ்சுக்கிட்டிருந்த நான், காமாட்சிகிட்டே போய், 'உனக்கும் கிருஷ்ணனுக்கும் காதலா?' என்று பச்சையாகக் கேட்க முடியுமா? அதனாலேதான் அன்னிக்கு, 'கல்யாணம் பண்ணிக்கொள்ளச் சம்மதம்தானே?' என்று காமாட்சியிடம் கேட்டுக் கொண்டிருந்தேன். அப்போ நீங்க திடீர்னு வந்தீங்க. அதுக்கு முன்னாலே நாங்க பேசிக்கிட்டிருந்ததை முழுக்கக் கேட்டிருந்தாலும் நீங்க என்னைச் சந்தேகித்திருக்கமாட்டீங்க. பிற்பாடு என்னைப் பேச விட்டிருந்தாலும் உங்க சந்தேகம் நிவர்த்தியாகி இருக்கும். எதுவும் பேச விடாமல் நீங்க என்னை விரட்டி அடிச்சிட்டீங்க. நீங்க என்னை விரட்டி அடிக்காமல் இருந்தா, நான் உங்களோடேயேதான் இருந்திருப்பேன். அப்படி இருந்திருந்தால் நான் ஒரு பணக்காரனாகி இருக்க முடியுமா? நான் பணக்காரனாகியிரா விட்டால்தான் லட்சாதிபதி ராமலிங்கம் செட்டியார் வீட்டிலே நம் காமாட்சியைச் சம்பந்தம் போட முடியுமா?''

ஒரு மர்ம நாவலில் பரபரப்பான கட்டம் ஒன்றைப் படிப்பதைப் போன்ற பிரமிப்பில் ஆழ்ந்தார் செட்டியார்.

ஆரோக்கியம் ஒரு துப்பறியும் நிபுணர். கடைசிக் கட்டத்தில் சிக்கல்களை விடுவிப்பது போன்ற முறையிலே பேசினார்: ''சுப்பையா இப்போ உண்மையிலேயே பெரிய பணக்காரன்தான், செட்டியார்வாள்! போன வருஷம் நீங்க அவனை விரட்டி விட்டதும் நேரே என்னிடத்திலே வந்து சேர்ந்தான். கொஞ்சம் பணத்தைக் கொடுத்து ஒரு ஜல்லிக் 'காண்ட்ராக்ட்' எடுத்துக் கொடுத்தேன்! அவன் கல்லைத் தொட்ட வேளை பொன்னைச் சொரிகிற வேளையா இருந்திருக்கு. இப்போ இரண்டு மலைகளையே குத்தகையா எடுத்து வியாபாரம் நடத்துகிறான். ராமலிங்கம் செட்டியாருக்கும் உங்களுக்கும் அவ்வளவு ஒத்து வராது என்பது அவனுக்குத் தெரியும். அதனாலே அவரைப் பட்டணத்துக்கு வரவழைக்க இருபதாயிரம் ரூபாயை எண்ணிக் கொடுத்தான். அவ்வளவுதான்! கல்யாணத்துக்குச் சம்மதிச்சு, நாளும் வைச்சுக் கொடுத்திட்டு வந்து விட்டார். பத்திரிகை அடிச்சாச்சு. கலியாணக் காரியங்களைச் செய்யாமல் நீங்க வியாபாரம் இல்லாத கடையிலே குந்திக்கிட்டிருக்கீங்களே! எழுந்திருங்க. வீட்டுக்குப் போகலாம்!''

செட்டியார் எழுந்திருக்க வில்லை. எழுந்திருக்க முடிய வில்லை. மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தார். ''பெற்ற பிள்ளைக்கு மேலே உற்ற பிள்ளையாக இருந்த சுப்பையாவைப் போய் நான் தப்பா நினைச்சேனே!''

''நீங்க தப்பா நினைச்சதுதான் சுப்பையாவின் வளர்ச்சி; காமாட்சியின் கலியாணம்!'' என்றார் ஆரோக்கியம்.

செட்டியாரின் எதிரே இருந்த நோட்டுப் புத்தகத்தில் துலங்கிய முப்பத்தையாயிரம் ஸ்ரீராம ஜயங்களும் இதைத்தான் கூறின: 'வெற்றியை நோக்கமாகக் கொண்டு எதிர்த்த ராவணன் அழிந்தான். 'பிரதிபலன்' என்ற நோக்கம் எதுவும் இன்றி எதிர்த்த ஸ்ரீராமன் வென்றான். இச்சைகளுக்காக, கோபதாபங்களுக்காக, வீர விருதுகளுக்காகப் போரிடாத எந்த ஒரு மனிதனுமே ஸ்ரீராமன்தான்!'

''நான் தோற்று விட்டேன்'' என்று முணுமுணுத்தார் செட்டியார்.

---

# பத்தினிக் கோட்டம்

அத்தியாயம் மூன்று

## நெருப்புக் கணை

ஜெகசிற்பியன்

ஆலம்பாக்கம் அநந்தமதியின் இல்லத்து முன் வாயில் வெளியோரம் மெள்ள உலாவியவாறு சுற்றிலும் தன் பார்வையை வெகு உன்னிப்பாகச் செலுத்திக் கவனித்துக் கொண்டிருந்தான் ஆபத்துதவி இளங்காரிக் குடையான். அவனைப் போலவே அவனுடைய அன்னை அநந்தமதியும் அந்த இல்லத்தின் சித்திரத் திண்ணையருகில் நின்று அங்கு மிங்குமாகத் தன் பார்வையை ஓட்டிக் கொண்டிருந்தாள். மிகப் பெரிய பொக்கிஷம் ஒன்றை மறைத்து வைத்துக்கொண்டு அதைக் கண்ணும் கருத்துமாகக் காபந்து செய்வது போல் தோன்றியது அவர்களுடைய அந்த விழிப்பான கண்ணோட்டம்.

காலைச் சூரியன் கரகரவென மேலேறித் தென்னை மரங்களுக்குப் பின்னால் ஒளிக் கோலம் போடுவதைக் கண்டு தனக்குள் எதையோ ரசித்துக் கொண்டவனாய்த் தயங்கி நின்ற இளங்காரி தன் தாயை நோக்கிச் சாடை மூலம் ஏதோ விசாரித்தான். அவள் அங்கிருந்தவாறே மெல்லத் தலையசைத்து விட்டுத் திரும்பி ஒருக்களித்துச் சாத்தியிருந்த கதவை ஓசையின்றித் திறந்து கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தாள். அங்கே—

எளிமையும் தூய்மையுமாக விளங்கிய சிறிய அறையொன்றில் அப்போதுதான் காலை வழிபாட்டை முடித்துக் கொண்டு வந்த கோலத்தில் அமர்ந்திருந்தான் பரமேசுவரவர்மன். அவனுக்கு வலப் பக்க வாட்டில் ஆழ்ந்த சிந்தனையுடன் கவலையே வடிவாகத் தலைகுனிந்து வீற்றிருந்தார் பெரும்பிடுகுமுத்தரையர்.

நெடு நேரமாக அங்கு உறைந்து கிடந்த அமைதியை மெல்ல நீவிக் கலைப்பது போன்று தன் தொண்டையைக் கமகப்படுத்திக் கொண்ட பரமேசுவர வர்மன், ''ஏனய்யா! சோழ இளவரசி இளங்கோப்பிச்சியைப் பற்றி ஏதேனும் தகவல் கிடைத்ததா?'' என்று கவலையுடன் கேட்டான்.

"அவள் எங்கே சென்றாள் என்ற விவரம் இன்றுவரை தெரியவில்லை, அரசே!" என்று கரகரத்த குரலில் சொன்ன முத்தரையர், "எங்கே சென்றிருக்கப் போகிறாள்? தன் தந்தையிடம் தான் போய்ச் சேர்ந்திருப்பாள்! சளுக்கிய விக்கிரமாதித்தனின் மருமகளாகப் போகிறவள் அல்லவா? இனிமேல் இங்கிருக்க அவளுக்கு என்ன, தலைவிதியா?" என்றார் அலட்சியமாக.

சிறுபொழுது ஏதோ யோசனையில் இருந்த பரமேசுவரவர்மன், "அது சரி, முத்தரையரே! அன்றைய தினம் அவ்வளவு பெரிய சளுக்கியப் படைகள் எங்கே, எதற்காகப் பெயர்ந்து சென்றன, தெரியுமா?" என்று அடைத்த குரலில் விளித்தான்.

"அதுதான் எனக்கும் புரியாத புதிராக இருக்கிறது அரசே!...."

"சரி; நாம் புறப்படுவோம்" என்றவாறு எழுந்தான் பரமேசுவரவர்மன்.

அம்பு விடுபட்டபின் நிமிரும் வில்லைப் போலச் சட்டென்று தலை தூக்கிய முத்தரையர், "புறப்படுவோம்!.... ஆனால், எங்கே போவது என்ற முடிவை மன்னரவர்கள் இன்னமும் தெரிவிக்கவில்லையே!" என்றார் தயக்கத்துடன்.

"முடிவா?.... அந்த முடிவை நான் முன்னரே தெரிவித்து விட்டேன்" என்று இளநகை புரிந்து இதமாகக் கூறினான் பரமேசுவரவர்மன்.

"அதாவது?...."

"என் மதிப்புக்குரிய முத்தரையர் தமது சந்திரலேகை அரண்மனைக்குப் போய்ச் சேர வேண்டியது; நான் நாகைத் துறைமுகத்துக்குப் பயணமாக வேண்டியது."

"மன்னரவர்கள் நாகைத் துறைமுகத்துக்குப் போய்?...."

"அமைதியின் நிழலை நாடி ஈழத்துக்குப் பயணமாவேன்."

"சந்திரலேகை அரண்மனைக்கு நான் சென்று?...."

"இன்றுவரை உங்கள் எண்ணத்தில் பின்னியிருந்த கானல் திட்டங்களைக் கலைத்துவிட்டு யதார்த்த வழியை நோக்கிச் சிந்தனையைத் திருப்பிக் கொள்ள வேண்டியது."

"அதாவது, பழையாறைச் சோழரின் வழியைப் பின்பற்றிக் கொள்ள வேண்டும் எனச் சொல்கிறார் மன்னர்; அப்படித்தானே?" — மலை போன்ற தம் உடலை முறுக்கி நெளித்தவாறு கசப்புக் கமறலெடுக்கும் குரலில் மேலும் சொன்னார் முத்தரையர்: "மாமன்னரவர்கள் என்னைத் துரோகியாகிவிடு என்று சொல்வதைக்கூடப் பொறுத்துக் கொள்ள முடிகிறது; ஆனால் கோழையாகிவிடு என உபதேசிக்கிறாரே, அதைத்தான் என்னால் பொறுக்கவே இயலவில்லை!"

பரமேசுவரவர்மன் இதைக் கேட்டுப் புன்முறுவல் பூத்தான். "போர்க்களத்திலே எதிரியின் பளபளப்பான நீண்ட கத்தி நெஞ்சிலே பாய, வான் நோக்கிப் பூமியில் வீழ்ந்து அழகாகச் சாவதுதான் வீரம் என்று என் அருமை நண்பர் சந்திரலேகைச் சிற்றரசர் நினைத்துக் கொண்டிருக்கிறார்; அது தவறு. சமய சந்தர்ப்பங்களின் கெடுபிடிகளால் கோழையாகவும் துரோகியாகவும் மாறுவதுகூட வீரத்தின்பாற்பட்டதே என்பதை இனிமேலாவது அவர் தெரிந்து கொள்ள வேண்டும்."

பழையாறைச் சோழரின் துரோக நடத்தையை மனத்தில் கொண்டே பல்லவ மன்னன் இவ்வாறு குத்தலாகப் பேசுகிறான் என்றெண்ணி உள்ளூறக் குமைந்து கனன்ற முத்தரையர் தம்மை ஒருவாறு தேற்றிக்கொண்டு நமட்டுச் சிரிப்புடன் சொன்னார்: "வீரத்துக்கு மன்னரவர்கள் தரும் புதிய விளக்கத்தை இனிப் புரிந்துகொள்ள முயற்சி செய்வேன். அப்படிப் புரிந்து கொண்டு நான் நடக்கப் போவதைக் கண்டு மகிழ்வாவது மன்னர் தம் ஈழத்துப் பயணத்தைக் கைவிட்டுவிட வேண்டும் என்று விரும்புகிறேன்."

பரமேசுவரவர்மன் அவரைக் கனிவுடன் பார்த்து அமைதியாகச் சொன்னான்: "மன்னியுங்கள் ஐயா! என் எதிர்கால வாழ்க்கையைப் பற்றி ஒரு தெளிவான முடிவுக்கு நான் வந்துவிட்டேன். தயவுசெய்து அந்த முடிவை மாற்ற முயற்சி செய்யாதீர்கள். என்னுடைய விருப்பப்படி ஈழ நாட்டுக்குப் போய்ச் சேர என்னை விட்டுவிடுங்கள்."

முத்தரையர் சோர்ந்து தளர்ந்தார். பெருவளநல்லூர்ச் சாலையோரமுள்ள ஜீனாலயத்துக்குப் பின்னால் அவனை எதிர்பாராமல் சந்தித்தது முதல் அங்கிருந்து வலுக்கட்டாயமாக இளங்காரியின் இந்த இல்லத்துக்கு அழைத்து வந்து இருக்கப் பண்ணின கடந்த நான்கு நாட்களாக அவனிடம் அவர் எவ்வளவோ விஷயங்களைப் பேசி, எத்தனையோ விவரங்களைக் கூறி, அவனது ஈழ நாட்டுப் பயண உத்தேசத்தைக் கைவிடும்படி வற்புறுத்தி வேண்டிக் கொண்டும் அவன் அவற்றையெல்லாம் ஏற்காமல் — பொருட்படுத்தாமல் — தனது அந்த முடிவையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதைக் கேட்டு உள்ளூற ஆத்திரமும் சலிப்பும் அடைந்தார். 'பொறுப்புணர்ச்சியற்ற இளைஞன் என்றும், இடுக்

## நீங்கள் பொலிவுடனிருக்க சார்மிஸ் உபயோகியுங்கள்!

# புதுமை பெறுக...
# இதம் பெறுக...
# நளினமாய் இருங்கள்
# நாள் முழுதும்!

குளுமையையும், புத்துணர்ச்சியையும்
அளிக்கும் சார்மிஸ் டால்கம் பவுடர் நீங்கள்
நாள் முழுதும் நளினமாயிருக்க உதவுகிறது.
உன்னத மனோரம்மிய மணம்கொண்ட
சார்மிஸ் உங்களுக்கு சுகத்தையும் புத்துணர்ச்
சியையும் அளித்து, உங்கள் அழகை நன்கு
சோபிக்கச் செய்கிறது!

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய மணத்துடன் கூடிய டால்கம் பவுடர்

CHTP.G.II

கலங்களைக் கண்டு அஞ்சி ஓடி ஒளியும் கோழை என்றும் பழையாறைச் சோழர் இவன்மீது சாட்டிய குற்றச்சாட்டுகள் சரியானவைதாமோ' என்ற சந்தேகம் கூட இப்போது அவருக்குத் தோன்றி விட்டது. முகத்தைச் சுளித்து உடம்பை நெளித்தவாறு சற்று நேரம் மௌனமாயிருந்த அவர் ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவராய்த் திடுமெனத் தலைதூக்கித் தம்மிடமிருந்த ஓலைச் சுருள் ஒன்றை எடுத்துப் பரமேசுவர வர்மனிடம் விறைப்பாக நீட்டி, ''அரசே! நான் இவ்வளவு சொல்லியும் தாங்கள் அதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் ஈழ நாட்டுக்குப் பயணமாகியே தீருவதென்று முடிவு செய்து விட்டீர்கள். இனி தங்களைத் தடுத்து நிறுத்த என்னால் இயலாது. ஆனால் அப்படிப் போகுமுன் இவ்வோலையில் தாங்கள் கைச்சாத்து இட்டு விட்டே செல்ல வேண்டும். இதுவே நான் தங்களிடம் கோரும் இறுதியான வேண்டுகோள்'' என்றார் அடைத்த குரலில்.

பரமேசுவர வர்மன் அந்த ஓலையை வாங்கி அதில் தன் பார்வையை மேலோட்டமாகச் செலுத்தினான். பல்லவ நாட்டுக் குடிமக்கள் சளுக்கியப் பகைவரை விரட்டியடிப்பதற்காகப் பெரும்பிடுகு முத்தரையர் திரட்டும் இரகசியப் படையில் சேர வேண்டும் என்று அவர் கட்டளையிடுவதுபோல் வரையப்பெற்ற ஓலை அது.

அதைப் பார்த்த பரமேசுவரவர்மன் மெல்லச் சிரித்துக்கொண்டே அவரைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கினான். பிறகு அலட்சியமும் மிடுக்குமாக நிமிர்ந்து, ''இந்த ஓலையில் நான் அவசியம் கைச்சாத்து இடத்தான் வேண்டுமா, ஐயா?'' என்று கேட்டான்.

''அந்நிய ஆதிக்கத்தில் அடிமைப் பட்டுக் கிடக்கும் பல்லவ நாடு வீடு சுதந்திரம் பெற்றுத் தலைநிமிர வேண்டுமாயின் மாமன்னரவர்கள் தம் விலை மதிப்பற்ற கைச்சாத்தை இதில் இட்டே ஆக வேண்டும்!''

''அது தேவையில்லை என்று கருதுகிறேன். ஏனென்றால், சந்திரலேகைச் சித்தரசரே இவ்வோலையில் தம் கைச்சாத்தை இட்டுக் கொள்ளலாம். இந்நேரம் அவர் என்னிடம்



வந்து இவ்வளவு சிரமப்பட்டுக் கேட்க வேண்டியதில்லை."

"அரசே!..."

"இன்னும் தெளிவாகச் சொல்ல வேண்டுமா, ஐயா? [illegible] ரிடம் நான் படையுதவி கோரியதாக என்னுடைய கைச்சாத்தைத் [illegible] வேலை செய்து வரைந்த [illegible] என் தம்பியின் மூலம் அனுப்பியிருக்கிறதே. அவ்வாறே இதிலும் செய்துகொள்ளலாம் என்கிறேன்."

இடியால் தாக்குண்டவர் போல் நடுநடுங்கிவிட்டார் முத்தரையர். அன்றைய தினம் அந்த ஜன்னலயத்தருகில் இருந்து தாமும் கோவிந்தவர்மனும் பழையாறைச் சோழரைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த விவரங்கள் மட்டுமல்லாது, தாம் பாண்டிய மன்னருக்கு எழுதியனுப்பிய தகட்டோலை பற்றியும் இவர் தெரிந்து கொண்டிருக்கிறார் என்பதைப் புரிந்துகொண்ட அவர் திக்குமுக்காடித் திணறிவிட்டார். என்ன பேசுவதென்றே அவருக்குத் தோன்றவில்லை. குற்ற உணர்ச்சியால் குப்பென்று வியர்த்துக் கொட்டத் தாளமுடியாத அவமானத்துடன் தலை குனிந்தார் அவர்.

பரமேசுவர வர்மனே அவரைக் கண்ணிமைக்காமல் உறுத்து நோக்கியவாறு மேலும் கூறினன்: "ஆமாம், ஐயா! இன்னும் ஒரு விஷயத்தையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். சில நாட்கள் முன் வரையில் சளுக்கிய விக்கிரமாதித்தனை என்பொன்னாட்டி லிருந்து விரட்டியடிக்க வேண்டுமென்ற [illegible] தன்மான உணர்ச்சியோ [illegible] முடங்கிக் கிடந்தது என்னவோ உண்மைதான். [illegible] ஆகப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளிக் [illegible] உருவ ஓவியத்தைச் சளுக்கியத் தளபதியிடம் வரைந்து கொடுத்துவிட்டு வரும்போது தெய்வத்தின் குரல் ஒன்றைச் செவியில் ஏற்றேன். 'குகையிலிருந்து வெளிப்படும் புலியைப்போல், கட்டவிழ்த்துக் கொண்டு பாயும் காளையைப் போல, மதர்ப்புற்றுத் திமிறியோடும் யானையைப் போல நீயும் உன் உண்மை வடி



# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ்வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.

எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.






மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

ECHO.G.A.TAM.

வெடுத்து வெளியே வா' என்று அந்தத் தெய்வக் குரல் எனக்குக் கட்டளையிட்டது. அக்கணமே அதன் கட்டளையை ஏற்றுக் கொண்டேன். ஆதிக்க வெறி கொண்ட சளுக்கியனைத் தூக்கியெறிந்து பந்தாடும் ஆவேச வீறு பெற்றேன். கோழை போல் ஈழத்துக்கு ஓடி ஒளிய வேண்டுமென்ற என் திட்டத்தைக் கைவிட்டேன். பகைவரைச் சாய்ப்பதற்காகப் பல திட்டங்களுடன் உங்களைப் பார்க்க ஓடோடியும் வந்தேன். அப்படி வந்த என்னை அந்த ஒரே கணத்தில் பழைய கோழையாகவும், தன்னம்பிக்கை யற்றவனாகவும் நீங்கள் ஆக்கி விட்டீர்கள். ஆம், ஐயா! என்னுடைய அநுமதியின்றி என்னுடைய கைச்சாத்தைத் தகடோலை செய்ய நீங்கள் துணிந்தீர்களே, அதைத்தான் குறிப்பிடுகிறேன். உங்களுடைய உண்மைச் சொரூபத்தை என்னால் இப்போதுதான் புரிந்து கொள்ள முடிந்தது. என்னை நீங்கள் எள்ளளவும் மதிக்கவில்லை. எனக்குரிய கௌரவத்தை அளிக்கவும் நீங்கள் தயாராக இல்லை. என்னை ஒரு கோழையாகவும் உபயோக மற்றவனாகவும் கருதி, உங்கள் இஷ்டம் போல் ஆட்டிப் படைக்கத் திட்டமிட்டிருக்கிறீர்கள். எனவேதான் என் அநுமதியின்றியே அப்படி ஒரு காரியத்தைச் செய்யத் துணிந்திருக்கிறீர்கள். அதை நான் அங்கீகரித்தால் நீங்கள் ஆட்டுவிப்பதைப் போலெல்லாம் ஆடி உங்கள் இஷ்டத்துக்கெல்லாம் வளைந்து கொடுத்து, உங்களுக்கு என்றென்றும் அடிமையாகவே இருக்கும்படி யாகி விடும். அத்தகைய முதுகெலும்பற்ற ஒரு மன்னனாக இருந்து புவியாள்வதை விட இன்றைய நாடோடி நிலையிலேயே நான் இருக்க விரும்புகிறேன். என்னுடைய கனவுகள் அடியோடு சிதைந்து விட்டன. என் செவியில் ஒலித்த அந்தத் 'தெய்வக் கட்டளை'யை இப்போது முற்றிலும் மறந்து விட்டேன். அதற்கு நான் தகுதியற்றவன் என்றும் தீர்மானித்து விட்டேன். அதன் ஜீவ களை பொருந்திய நிழலையும் என் இதயத்திலிருந்து துடைத்தெறிந்து விட்டேன். நான் இப்போது ஓர் அசக்தன். எவ்விதப் பந்த பாசமோ தொந்தத் தொடர்புகளோ உரிமைகளோ இல்லாத பரதேசி. இதே நிலையிலேயே என் பழைய தீர்மானத்துடன் ஈழத்துக்குப் பயணமாகி விடப் போகிறேன். மண்ணுக்காகவும் மகுடத்துக்காகவும் என் மானத்தை அடகு வைக்க வேண்டிய கட்டாய கெடுபிடிகளில் சிக்கிக் கொள்ளாமுன்பே இந் நாட்டை விட்டுப் போய்விட விரும்புகிறேன். இனி உங்கள் இஷ்டம்

மாம்பலத்தில் ஒரு வீட்டினுள்ளிருந்து 'ஈ'க் கூட்டம் வெளியேறியது. அதே நேரத்தில் வீட்டினுள் சென்ற கொசுக்களைப் பார்த்து ஓர் ஈ ''என்ன கும்பகோணம் கொசுவாரே! சௌக்கியமா? நாங்கள் எல்லோரும் 'டே' டியூட்டி முடிந்து போகிறோம்! நீங்கள் 'நைட்' டியூட்டிக்கு உள்ளே போகிறாப்போலே இருக்கு!'' என்றது.



போல் படைகளைத் திரட்டுங்கள்; பாண்டியரிடம் படை உதவி பெறுங்கள். சளுக்கியரிடம் போரிட்டு வெற்றியடையுங்கள். என் அன்புத் தம்பி கோவிந்தவர்மனைக் கைக்குள் போட்டுக்கொண்டு பல்லவ சாம்ராஜ்யத்தின் மணி முடியை அவனுக்குச் சூட்டி, உங்கள் இஷ்டம்போல் அவனை ஆட்டிப் படையுங்கள். அல்லது நீங்களே பல்லவ அரியணையில் ஏறி....''

''அரசே!''—வெறி பிடித்தவர் போல் அலறிக் கூவினார் முத்தரையர். ''மன்னியுங்கள் அரசே, என்னை மன்னியுங்கள்! இவ்வளவு பெரிய பழியை என்மீது சுமத்தாதீர்கள்! இவற்றை என்னால் தாளவே முடியாது! இந்த விஷயத்தில் நான் கோழை! சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட மாபெரும் கோழை நான்!'' — பாரிய தூண் ஒன்றில் முகத்தைப் புதைத்துக்கொண்டு விம்மிப் பொருமினார் முத்தரையர். ''நான் செய்தது தவறுதான் அரசே! தங்கள் கைச்சாத்தைத் தகடோலை செய்தது மிகப் பெரிய தவறுதான்! ஆனால் திட்டமிட்டுத் தவறான நோக்கத்துடன் செய்த தவறல்ல அது! என் மார்பிலும் தோளிலுமாகப் போட்டு வளர்த்த எனதருமைப் பல்லவச் செல்வருக்கா நான் துரோகம் நினைப்பேன்? இந்த இழிபெயரை ஏற்பதற்காகவா இத்தனை காலம் ஊண் உறக்கத்தைத் துறந்து, உற்றார் உறவினரை மறந்து, அரண்மனைச் சுக போகங்களை உதறித் தள்ளிக் காட்டிலும் மேட்டிலுமாகச் சுற்றித் திரிந்தேன்? ஐயையோ! என்னையறியாமலே எவ்வளவு பெரிய பழி பாவத்துக்கு உள்ளாகி விட்டேன்!''— அனலிடைப் பட்ட புழுப்போல் நெளிந்து புலம்பினார் அவர்.

பனிச் சிலையாக உறைந்து உட்கார்ந்திருந்தான் பரமேசுவரவர்மன்.

தூணில் முகம் புதைத்துப் பொருமிக் கொண்டிருந்த முத்தரையர் சடாரென்று திரும்பினார். ''அரசே! தங்கள் மீதும் தங்களது நாட்டின்மீதும் நான்

கொண்ட பேரன்பினால் அவசரப்பட்டு அந்தக் காரியத்தைச் செய்துவிட்டேன். அந்தக் குற்றத்துக்குரிய தண்டனையை ஏற்கவும் நான் சித்தமாகி விட்டேன். இதோ, என் வீர வாளாலேயே அதை நிறைவேற்றிவிடுங்கள்'' என்று ஆவேச விம்மலுடன் அரற்றிக்கொண்டே, தம் இடையில் தொங்கிய வாளைப் பளீரென உருவியெடுத்துக் கீழே எறிந்து விட்டு, அதே வேகத்துடன் தமது மார்புக் கவசத்தைப் படீரெனக் கிழித்து விண்ணென்று புடைத்த நெஞ்சைத் திறந்து காட்டியவாறு பரமேசுவர வர்மனை நோக்கி விறைப்பாக நடந்து சென்றார்.

## அத்தியாயம் நான்கு

# பல்லவ மன்னனின் கேள்வி!

சிவந்து கிடந்த பரமேசுவரவர்மனின் முகம் சுந்தரக் களை பெற்று மலர்ந்தது. ''வருந்தாதீர்கள், ஐயா! இந்த மாபெரும் மார்புக்குள்ளே மறைந்திருக்கும் பூப்போன்ற இதயத்தை நான் நன்றாக அறிவேன்! அந்த அன்பு உள்ளத்தை நோக வைத்துவிட்டதற்காகப் பெரிதும் துயரப்படுகிறேன்!'' என்று வாஞ்சைப் பெருக்குடன் கூறிக்கொண்டே போய் அவரை அணைத்துத் தழுவினான் அவன்.

முத்தரையரின் கண்கள் மகிழ்ச்சிப் பெருக்கால் நீரைச் சொரிந்தன. பல்லவ மன்னனின் கடல் போன்ற இரக்க உள்ளத்தையும், தாய் போல் மன்னித்துப் பொறுக்கும் சுபாவத்தையும், பூமியையொத்த சகிப்புத் தன்மையையும் அறிந்து மனம் நெகிழ்ந்த அவர் மெல்லப் பெருமூச்சுவிட்டுப் பின்னால் நகர்ந்தவாறு, ''அப்படியானால் மன்னரவர்கள் தமது ஈழத்துப் பயணத்தைக் கைவிட்டு விட்டாரல்லவா?'' என்று ஆவலுடன் வினவினார்.

தலை குனிந்த பல்லவ மன்னன் 'இல்லை' என்பதுபோல் மெல்லத் தலையசைத்தான்.

திடுக்குற்ற முத்தரையர், ''ஏன், அரசே? இன்னமும் அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ள என்ன தயக்கம்?'' என்று துடிப்போடு கேட்டார்.

''என் மனத்தில் நீண்ட காலமாகவே ஒரு கேள்வி இருந்து வருகிறது. அதுதான் அந்த எண்ணத்தை முதலில் தோற்றுவித்தது. அதுவே அவ்வெண்ணத்தை இப்போது மாற்றிக் கொள்ள விடாமலும் தடுத்துக்கொண்டிருக்கிறது'' என்று எங்கோ பார்த்தவாறு தணிந்த குரலில் கூறினான் பரமேசுவர வர்மன்.

''மன்னரவர்களின் மனத்தில் உள்ள அந்தக் கேள்வியை நான் அறியலாமா?''

''அவசியம் நீங்கள் அதை அறியத்தான் வேண்டும். இமயம் முதல் குமரி வரை ஒரே பூமியாக விரிந்து பரந்துள்ள நாடு இந்தப் பாரத நாடு. இதில் வாழும் பல கோடி மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு, நாகரிகம், குணம், குறிக்கோள் எல்லாமே ஆயிரங் காலத்துப் பயிர்களாக வளர்ந்து அடிப்படையில் ஒருமை கொண்டு திகழ்கின்றன. மக்கள் பேசும் மொழிகளிலும் அவர்கள் மேற்கொள்ளும் மதங்களிலும்தான் சிறிதளவு வேற்றுமை தெரிகிறதே தவிர, வேறெந்தப் பிரிவினைப் பாங்கும் அவர்களிடம் இருப்பதாகத் தெரியவில்லை. உண்மையில் பார்க்கப்போனால் மொழிகளும், சமயங்களும் வேற்றுமைக்குரிய அம்சங்களே அல்ல; அவை ஒரு மாபெரும் சமுதாயத்தின் வளர்ச்சியைக் காட்டும் தேசிய நாகரிகச் சின்னங்கள். அந்தச் சின்னங்களே அச் சமுதாயத்தை இணைக்கும் பொற் சங்கிலிகளாகவும் விளங்குகின்றன. எனவே, இயற்கையில் ஒருயிரும் ஒருடலுமாக அமைந்த இந்தப் பழம் பெரும் பாரத நாட்டைப் பல்வேறு துண்டுகளாகப் பிரித்துப் பலப் பல ராஜ்யங்களாகப் பகுத்து அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு மன்னன் என்றும், ஓர் அரசாங்கம் என்றும் ஏற்படுத்திக்கொண்டு தனித்து வாழ்வதிலே என்ன பொருள் இருக்கிறது? இமயம் முதல் குமரி வரை ஒரே நாடாகவும் ஒரே இராஜாங்கமாகவும் ஒருமித்து இருக்கத் தக்க அடிப்படை அம்சங்கள் ஆழ்ந்த அஸ்திவாரத்துடன் அமைந்திருக்கும்போது அதைச் செயற்கையாக வெட்டிப் பிரித்துக்கொண்டு வாழ வேண்டிய அவசியம் என்ன? இப்படித் துண்டுபட்டுத் தனித்தனி நாடுகளாக நிற்பதால்தானே அவற்றிடையில் அடிக்கடி போரும், பூசலும், பகையும், இரத்தக் களரியும் ஏற்படுகின்றன? இவை அனைத்தும் ஒன்றுபட்டு ஒரே நாடாகவும் ஒரே அரசாங்கமாகவும் விளங்கினால் அந்த அநாச்சாரத் தீமைகள் அழிந்து மறைந்து விடும் அல்லவா? ஆகவே, அந்த மகத்தான ஒருமைப்பாட்டைக் காணும் பொருட்டு நானே அதற்குரிய முதல் வழியைத் திறந்து விட்டால் என்ன என்று எனக்குத் தோன்றுகிறது!

எழிலின் எல்லையை எட்ட...

# "'ஹேஸலின்' ஸ்னோ"

மேனிக்கு மென்மையாக மெருகிடுவதிலே தன்னிகரற்றது
"'ஹேஸலின்' ஸ்னோ." மென்மையான,
எண்ணெய்ப் பசையற்ற இவ்வழகுப் பொருள்
சருமத்துக்கு மழமழப்பையும் வனப்பையும் ஊட்டுகிறது.
பவுடர் படிவதற்கெனவோ அல்லது தனிப்பட்ட
முறையிலோ உபயோகித்து உங்கள் சருமத்துக்குப்
பொலிவுடன் கூடிய பாதுகாப்பை அளியுங்கள்.
"'ஹேஸலின்' ஸ்னோ" அரம்பையர் குலத்தின்
பாரம்பரை அழகுசாதனம்.




பர்ரோஸ் வெல்கம்
தயாரிப்பு



BWY-II-TAM

அதாவது, வடக்கே நருமதை ஆறு முதல் தெற்கே நம் புதுக்கோட்டை வரையில் உள்ள ஒரு பெரும் நிலப் பரப்புக்கு அதிபதியாக விளங்கும் சளுக்கிய விக்கிரமாதித்தனை நான் எதிர்க்காமல் விட்டு விட்டால், அவன் இன்னும் கொஞ்ச காலத்துக்குள் வடக்கிலும் தெற்கிலும் மேற்கிலுமாகத் தனித்து நிற்கும் சில நாடுகளையும் எளிதில் கைப்பற்றி இந்த நாவலந் தீவு முழுமையிலும் ஒரே ஆட்சியை நிலைநாட்டி விடுவான்! இதனால் தனி மனிதனை எனக்கும் என்போன்ற இன்னும் சிலருக்கும் பாதகம் ஏற்படுமே தவிர, பழம் பெருமை வாய்ந்த இந்தப் பாரத நாடும் அதில் உள்ள பல கோடி மக்களும் போரோ, பூசலே, பகையோ இன்றி அமைதியாக ஆனந்த வாழ்க்கை வாழலாம் அல்லவா? இதுதான் என் மனத்தில் எழுந்துள்ள கேள்வியாகும்!''

''ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற சைவ சித்தாந்த அறநெறிக் கொள்கையிலும், யாதும் ஊரே யாவரும் கேளிர் என்னும் தமிழ் நெறித் தத்துவத்திலும் ஊறித் திளைத்த பல்லவ மாமன்னரின் பரந்த உள்ளத்திலே இத்தகையதொரு கேள்வி எழுந்தது பற்றி நான் சிறிதும் ஆச்சரியப்படவில்லை. ஆனால் அரசியல் கலையில் வல்லுநரான அவர் இந்தக் கேள்விக்குரிய பதிலையும் அறிந்தே இருப்பார் என்றே எண்ணுகிறேன். ஆயினும் அதை என் வாயிலாக அறிய விரும்புகிறீர் என்றால் அதற்கு நான் மறுமொழி சொல்லியே ஆகவேண்டும். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் எழவேண்டிய இந்தக் கேள்வி மன்னரவர்களின் மனத்தில் மிகவும் முந்திக்கொண்டு எழுந்து விட்டது. இப்படிச் சொல்வதன் காரணத்தைச் சொல்ல வேண்டாமா? அதையும் சொல்கிறேன்.''

முத்தரையர் உற்சாகமாக நிமிர்ந்து பேசினார்: ''நாடு என்பது ஒரு குறிப்பிட்ட எல்லைகளைக் கொண்ட நிலப் பரப்பின் நீள அகலத்தை அளந்து காட்டும் ஓர் அளவைச் சொல் அல்ல. மாண்பு மிக்க மக்கள் தொகுதியொன்றின் ஜீவத் துடிப்புள்ள நிழலே நாடு எனப் பெயர் பெறுகிறது. அந்த நாட்டில் அரசாங்கம் என்ற ஒன்று தோன்றுவது மக்களுக்காகத்தானே தவிர, நாட்டுக்காக அல்ல. அரசாங்கம் என்பது மக்களின் நல்வாழ்வுக்காகப் பல சட்ட திட்டங்களை வகுத்து அவற்றைச் செயல்பட வைக்கும் ஒரு தர்ம ஸ்தாபனம் போன்றது. எந்த அரசாங்கமும் ஒரு குறிப்பிட்ட சக்தி அளவே இயங்கும் தன்மை வாய்ந்ததாக இருக்க முடியும். இப்படி 'மக்களுக்காக இயங்கும் அரசாங்கம்' என்னும்போது அதன் ஆட்சிக்கு ஓர் எல்லையும் இருந்தாக வேண்டுமென்பது அவசியமாகிறது. அப்போதுதான் அரசாங்கத்தின் நிழல் மக்களின் மேல் முழுமையாகப் படர்ந்து நிற்க இயலும். இந்தப் பாரத நாடோ பல்லாயிரம் காதப் பரப்பளவில் பல கோடி மக்களைத் தன்னகத்தே கொண்ட மிகப் பெரிய நாடு. அதில் ஒரே மன்னன், ஒரே அரசாங்கம் என்று ஏற்பட்டால் மக்களுக்குச் சம நீதி கிடைப்பது அரிதாகிவிடலாம். ஏனென்றால், மன்னனின் ஆணைகள் அரசாங்கத்தின் மூலமே மக்களிடம் செல்கின்றன. அரசாங்கம் அவற்றைக் காற்றிலே ஏற்றி அனுப்ப முடியாது; மக்கள் சமுதாயம் இன்று வளர்ந்துள்ள அளவுக்கு வளர்ந்திருக்கும் போக்கு வரத்துச் சாதனங்களின் துணை கொண்டே அவை செல்ல முடியும். அதில் தடங்கலோ, தாமதமோ ஏற்பட்டால் எந்த ஒரு விநாடியும் ஏதேனும் ஒரு பகுதி மக்களுக்கு அநீதி நிகழ்ந்துவிடலாம். அநீதி நிகழப் பார்த்துக்கொண்டிருக்கும் ஓர் அரசாங்கத்தை நல்ல அரசாங்கம் என்று சொல்ல முடியாதென்பது ஒருபுறமிருக்கட்டும்; அநீதியால் துன்பத்துக்குள்ளான அந்தப் பகுதி மக்கள் அரசாங்கத்தை வெறுப்பார். அவர்களில் ஒரு சுயநலக்காரன் —அல்லது மனிதாபிமானத்தை மிகுதியாகக் கொண்ட ஒருவன் — அந்த வெறுப்புணர்ச்சியைப் பயன்படுத்திக் கலகக் கொடியை உயர்த்துவான்; தன் பகுதி மக்களை அவ்வரசாங்கத்திலிருந்து பிரிந்து போகவும் தூண்டுவான். உலகில் அவ்வப்போது பல புதிய புதிய நாடுகள் தோன்றுவதற்கு இதுதான் அடிப்படைக் காரணம். பல்லவ மாமன்னரைப் போலவே அவருக்கு முன் இந்தப் பாரத நாட்டில் ஒரே அரசாங்கத்தை நிலைநாட்ட முயன்ற பல பேரரசர்கள் இத்தகைய கோளாற்றினால்தான் படுதோல்வி அடைந்தனர். இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தையே எடுத்துக் கொண்டாலும் அதன் விரிந்த பகுதிகளெங்கும் மன்னரது ஆணைகள் சரிவரச் செயல்பட வேண்டும் என்பதற்காகவே என்போன்ற சில சிற்றரசர்களின் குறுநில ஆட்சி முறைக்கு அதில் இடமளிக்கப் பட்டிருக்கிறது. அதாவது,

''ஏன் ஸார், போன மாசம் உங்களுக்கு நான் ஒரு கார் வித்தேனே, அது எப்படி ஓடுகிறது?''

''அதுதான் எனக்கும் புரியவில்லை!''



ஒரு முழுக் கழஞ்சுப் பொன் நாணயம் சரியாகச் செலாவணியாக, கழஞ்சுக் காசு, மாடைக் காசு போன்ற சில்லறை நாணயங்கள் தேவைப்படுவது போலான விஷயம் இதுவும். இம்மாதிரியானதோர் அடிப்படையிலேயே இந்த மாபெரும் பாரத நாட்டில் பல நூறு அரசாங்கங்கள் இப்போது இயங்கி வருகின்றன. மற்றப்படி இவை துண்டு பட்டு நிற்பதற்கு வேறு வேற்றுமை என்று எதுவும் இல்லை. ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் இந்தப் பிரிவினை நிலை அடியோடு தகர்ந்து போகலாம். மனித அறிவு வளர்ந்து, போக்குவரத்துச் சாதனங்களும் பிறவும் விரிவடையும்போது தேச தேசங்களின் எல்லைகள் தாமாகவே நெருங்கி வந்து சுருங்கி விடலாம். இமயத்தில் நின்று பிறப்பிக்கப்படும் கட்டளை குமரியில் கேட்கக்கூடிய காலம் வரும்போது இந்த அழகிய பாரத நாடும் ஒரே ஆட்சியின் கீழ் ஒருமித்து நின்று விடலாம். ஆனால் இன்றுள்ள நிலைமையில் பல்லவ நாடு என்றும், பாண்டிய நாடு என்றும், சேர நாடு என்றும், சளுக்கிய நாடு என்றும், கங்க நாடு என்றும் பிரிந்து நிற்பதே இப்போதைய அரசியல் தர்மமாக நாம் கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தத் தர்மத்தை மீறி, ஒரு நாடு இன்னொரு நாட்டை விழுங்க முற்படுமேயானால் அதை அடக்கியொடுக்குவதையும் ஒரு தர்ம நெறிச் செயலாக ஏற்க வேண்டியிருக்கிறது. ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் வரப் போகும் ஒன்றுபட்ட பாரத சமுதாயத்தினர் இன்றைய நமது இந்தப் பிரிவினைத் தர்மத்தை அறிந்து ஆச்சரியப்படலாம்; சிலர் முகம் சுளிக்கலாம்; கூடி வாழத் தெரியாத குறுகிய புத்தியுடையவர்கள் என்றும், கையகல நிலப் பரப்பில் வேற்றுமை வெறிகொண்டு வாழ்ந்த பேதையர் என்றும் எள்ளி நகையாடலாம்; இது பேதைமை ஆகும். ஏனென்றால், அவ்வந்தக் கால மக்களின் மன வளர்ச்சியையும், தேவைகளையும், சௌகரியங்களையும் ஒட்டியே ஒவ்வோர் வகையான அரசியல் தர்மம், சமூக நியதி, மொழியுணர்வு, சமய நெறி, கலை ஞான அமைப்பு முதலானவை உருவாகின்றன. இவ்வுண்மையை உணராமல் அவற்றை எல்லாக் காலங்களின் மேலும் இழுத்துப் போட்டுக் கொள்ள முயல்வது வடிகட்டின அறியாமையே ஆகும். எனவேதான், பல்லவ மன்னரின் அந்த மதிப்புக்குரிய கேள்வி ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் எழ வேண்டிய ஒன்று என்கிறேன். அத்துடன் இன்றைய பாரதத்தின் அரசியல் தர்மப்படி உருவாகிச் சீரும் சிறப்புமாக இயங்கி வந்த பல்லவ நாட்டைப் பழி வாங்க வேண்டும் என்ற பகைமை உணர்ச்சியாலும், மண்ணாசையாலும், பொன்னாசையாலும், ஆதிக்க அதிகார வேட்கையாலும் உந்தப்பட்டு வந்து கைப்பற்றிக் கொண்டிருக்கும் சளுக்கியரை அடக்க வேண்டியது அவசியத்திலும் அவசியம் என்றேன். இதனை ஓர் அறப் போராகவும் கொள்ள வேண்டுமெனக் கூறுகிறேன்.''

கோடை மழை பொழிந்து ஓய்ந்தாற் போல் முத்தரையர் தம் பேச்சை நிறுத்தினார். சிந்தனையில் ஆழ்ந்து சிலையாக அமர்ந்திருந்தான் பரமேசுவரவர்மன்.

அவனையே சற்று நேரம் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த முத்தரையர் இளநகையுடன் அருகில் வந்து, ''மன்னரவர்களின் ஈழப் பயணத்திட்டம் இப்போது எந்நிலையில் இருக்கிறது?'' என்று தணிந்த குரலில் கேட்டார்.

பரமேசுவரவர்மன் வாய் திறவா மௌனியாகவே உட்கார்ந்திருந்தான்.

''அரசரவர்களின் மௌனத்தைப் பார்த்தால் அவரது கேள்விக்கு நான் அளித்த மறுமொழிகள் திருப்தியளிக்கவில்லை என்றே தோன்றுகிறது?''

இப்போதும் பரமேசுவர வர்மன் மௌனமே சாதித்தான்.

''அப்படியானால், மன்னரவர்களின் அந்த வினாவுக்கு இனி வாய் மொழியால் விடை பகர்ந்து பயனில்லை; அவரது நாட்டில் இன்று நடைபெறும் சில நடப்புக்களைத்தான் அவருக்குக் காட்டியாக வேண்டும் என்று நினைக்கிறேன்!''

மெல்லத் தலை நிமிர்ந்த பரமேசுவரவர்மன் அவரை அமைதியாக நோக்கினான்.

''ஆம், அரசே! தங்களின் ஈழத்துப் பயணத் திட்டத்தைக் கைவிடும்படி, இனி நான் கேட்கப் போவதில்லை; ஆனால் அந்தப் பயணத்தை மேற்கொள்ளுமுன் தங்களுக்குச் சில காட்சிகளைக் காட்ட விரும்புகிறேன். இந்த வேண்டுகோளுக்காவது மன்னரவர்கள் தயைகூர்ந்து செவிசாய்க்க வேணுமாய்ப் பணிவுடன் கோருகிறேன்.''

ஓங்கிப் பெருமூச்சு விட்ட பரமேசுவரவர்மன் தன் இருக்கையை விட்டு எழுந்தான். உற்சாகமடைந்த முத்தரையர் அவசரமாக வெளியே சென்று, அநந்தமதியையும் இளங்காரியையும் அழைத்து அவர்களிடம் ஏதோ இரகசியமாகச் சொல்லி விட்டு, தம்முடையதும் இளங்காரிக்குடையானதுமான இரு புரவிகளைக் கொண்டு வந்து வாசலில் நிறுத்தினார்.

பல மாதங்களுக்குப் பின் முதன் முதலாகப் புரவிமீது ஏறி அமர்ந்தான் பரமேசுவரவர்மன்; இன்னொரு புரவியில் முத்தரையரும் தாவி ஏறினார். அடுத்த கணம் அவ்விரு குதிரைகளும் பல்லவபுரத்தை நோக்கி விரைந்தன. (தொடரும்)



# ரெக்ஸ்

அருந்தி...

இலவசம்! ரெக்ஸ் ஸ்குவாஷ் சிவப்பு மற்றும் பொன்னிற மூடிகள் ஆறு தருவோருக்கு அழகியதொரு ரெக்ஸ் பிளா டிஸ்பென்ஸர் தரப்படும்.




# குளுமையுடன் இருங்கள்



கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரைவேட் லிட.

CPT-17 TAM


geigy















# பாலக் காவல்

"நம்ம ஊருக்குக்கூடக் கதிமோட்சம் பிறந்துவிட்டதே. ஆச்சரியம்தான்!" என்று ஆச்சரியப்பட்டார் ஒருவர்.

"அப்படி என்ன நடந்துவிட்டது எனக்குத் தெரியாமல்?" என்று கேட்டு வியப்புற்றார் இன்னொருவர்.

"இந்த ஊரில்தானே இருக்கிறீர் நீர்? உமக்கு விஷயம் தெரியாதா? நம்ம ஊர் ஆற்றுக்குப் பாலம் கட்டப் போகிறார்கள்!"

"எதற்காகக் கதை விடுகிறீர்?"

"நான் கதை கிதை விடவில்லை ஐயா! இன்றைய தினத்தாளிலே இந்தச் செய்தி வெளியாகி யுள்ளது. அடுத்த வாரம் மந்திரி கூட அடிக்கல் நாட்ட வரப்போகிறாராம்!"

"அப்படியானால் நம்ம ஊர் பஞ்சாயத்துத் தலைவர் பரமசிவத்தைப் பாராட்டத்தான் வேண்டும். ஆள் சமர்த்தர்தான். யார் காலையோ கையையோ பிடித்துக் காரியத்தைச் சாதித்துவிட்டாரே!"

இப்படி இரு நண்பர்களிடையே பேச்சு நடந்து இரண்டாண்டுகளுக்குமேல் இருக்கும்.

அவர்கள் பேசிய பேச்சு வெறும் பேச்சாக இல்லை; காரியமாகக் கைகூடிவிட்டது. பஞ்சாயத்துத் தலைவர் பரமசிவமே நேரில் நின்று பாலத்தை மேற்பார்வையிட்டுக் கட்டி முடித்தார். அவரைப் போல், சொந்த வீடு கட்டும் மனிதன் கூடக் கல்லையும் மண்ணையும் சிமெண்டையும் பார்த்துப் பார்த்துக் கட்டியிருக்க மாட்டான். பொதுப் பணம் விரயம் ஆகக் கூடாதே என்ற நல்லெண்ணமோ அல்லது பொது மக்களிடம் தாம் நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்ற கவலையோ, தெரியாது! அவர் மேற்பார்வையில் பாலம் கட்டி முடிந்து ஆறு மாதமாகிவிட்டது.

பாலத்தைப் பொதுமக்களின் போக்கு வரத்துக்குத் திறந்துவிட வேண்டாமா? ஆற்றுப் பதினாறுப் பாலத்துக்கு அக்கரையில் ஓர் ஆளையும் இக்கரையில் ஓர் ஆளையும் காவலுக்குப் போட்டுப் பாலத்தின் வழியே யாரும் போகக்கூடாது, எந்த வாகனமும் வரக்கூடாது என்று கட்டுப்பாடு செய்து விட்டார் பரமசிவம். 'அத்துமீறிப் பிரவேசிப்பவர்கள் தண்டனைக் குள்ளாவார்கள்' என்று தமது தனிப்பட்ட அதிகாரத்தைக் கொண்டு சட்டமே பிறப்பித்து விட்டார்! மக்கள் அவர் ஆணைக்குப் பயந்து நடந்து வந்தனர். கோடைக்காலமானதாலும், ஆற்றில் நீர் இல்லாததாலும், ஆற்று மணலில் இறங்கி நடந்து கரையேறி வந்தனர்.

எப்பொழுதும் கோடைக் காலமாகவே இருக்குமா? எப்பொழுதும் ஆறு நீரில்லாமல் வறண்டு கிடக்குமா? மழைக் காலம் வந்தது. ஆற்றிலும் நீர் பெருகி இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு ஓடியது.

போக்குவரத்துக்குச் சிரமம் ஏற்படவே மக்கள் பாலத்தை நோக்கி வந்தனர். பாலத் திலே பாரா மிகவும் உஷாராக இருந்தது. கை கலப்புப்பாகப் பாராக்காரர்கள் வழிவிட முடியாது என்று கூறிவிட்டனர். கேட்டால் 'பஞ்சாயத்துத் தலைவரின் உத்தரவு' என்று சொல்லி விரட்டியடித்தனர்.

கதிமோட்சம் பிறந்து விட்டதாக இரண்டாண்டுகளுக்கு முன் குதூகலப்பட்ட மக்களுக்கு இப்பொழுது ஆத்திரம் ஆத்திரமாகத்தான் வந்தது.

"இந்தப் பாலம் இவனுக்கென்ன தனிச் சொத்தா? பொதுப் பணத்தைப் போட்டுக் கட்டிய பாலம்தானே? நாம் போனால் பாலம் என்ன தேய்ந்தா போய்விடும்?" என்றெல்லாம் பேசிக் கொண்டார்கள். ஒரு நாள் பலாத்காரமாக ஆற்றுப் பாலத்தைக் கடந்து விடுவது என்றே முடிவுக்கு வந்துவிட்டனர். தேதியும் நேரமும்கூடக் குறித்துவிட்டார்கள்.

பஞ்சாயத்துத் தலைவர் பரமசிவத்துக்கு இந்தச் செய்தி தெரிந்ததும் அவருக்கு வந்த ஆத்திரத்தைச் சொல்லி முடியாது. குறிப்பிட்ட நேரத்துக்கு அதே ஆத்திரத்துடன் பாலக் கரையை அடைந்தார். நின்று கொண் டிருந்த மக்கட் கூட்டத்தைப் பார்த்து வெகுண்டார்.

"நம் நாட்டில் எந்த வேலையையும் நாள் நேரம் பார்த்துச் செய்வதுதான் வழக்கம். பூசாரியைக் கொண்டு விசேஷ வழிபாடுகள் செய்த பிறகே எந்தக் காரியத்தையும் தொடங்கியிருக்கிறோம். புது மனை புகு விழாவையோ கால்கோள்விழாவையோ எடுத் துக் கொள்ளுங்கள்! நல்ல நேரம் பார்த்துப் பெரியவர்களைக்கொண்டே தொடங்குகிறோம். எத்தனை நாள் 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்று சொன்னாலும் ஒரேயடி யாக நாம் மாறிவிடவில்லை. முன்பு செய்து வந்த காரியங்களையே நாம் கால தர்மத்துக் கேற்ப மாற்றிச் செய்து வருகிறோம். இந்த நாட்களில் யாராவது தலைவர்களோ, மந்திரி களோ வந்து திறப்பது என்பது மரபாகிருக் கிறது. அதைப்பொட்டி மந்திரியைக் கேட்டுக் கொண்டோம். அவர் வருவதாக ஒப்புக் கொண்ட நேரத்தில் நம் நாட்டின் மீது இந்தப் பாகிஸ் சீனர்கள் ஆக்கிரமிப்புச் செய்ய வேண்டுமா? நெருக்கடி நிலைமை காரணமாக எந்த விழாவிலும் இப்போதைக் குப் பங்கு கொள்வதில்லை என்று மந்திரி ஒத்திப் போட்டுவிட்டார். ஆக்கப் பொறுத்த வர்கள் ஆறப் பொறுக்க வில்லை என்ற அப வாதம் நம் ஊர் மக்களுக்கு எதற்கு? இந்த நெருக்கடி நிலைமை ஒழியட்டும். நாம் மந்திரி யைக் கொண்டே இந்தப் பாலத்தைத் திறந்து வைத்து விடுவோம்!" ஒரு நீண்ட பிரசங் கமே — நெருக்கடி நிலைமை நிரூப்பைப்போல் — செய்து முடித்தார் பரமசிவம்.

"இந்த நெருக்கடி நிலைமை தீர்ந்து மந்திரி வரும் வரை இந்தப் பாலம் பழுதாகி இடிந்து சரியாமல் இருக்க வேண்டுமே?" என்று கவலை அந்தக் கிராம மக்களைப் பிடித்துக் கொண்டு விட்டது.

— குறும்பன்

வாட்டர்பரீஸ்

# வைடமின் காம்பவுண்ட்

## சாப்பிடவேண்டியது எப்பொழுது?




■ எந்த சீதவெப்ப நிலையிலும், எப்பருவத்திலும் வயதுவந்தோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு உகந்த பொது டானிக் வாட்டர்பரீஸ் வைட்டடமின் காம்பவுண்ட்.

■ வைட்டமின் பி காம்ப்ளெக்ஸ், மால்ட் எக்ஸ்ட்ராக்ட் மற்றும் உடல் நலம், தென்பு ஆகியவற்றுக்கு அவசியமான பொருள்கள் செறிந்தது வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட். பசியைத்தூண்டுவதுடன், ஆரோக்கிய உணர்வை ஊட்டுகிறது அது.

வாட்டர்பரீஸ்

# வைடமின்

காம்பவுண்ட்

வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி. (வரையறுக்கப்பட்டபொறுப்புடன் யு. எஸ். ஏவில் இணைக்கப்பெற்றது)

WLY-9 TAM




## 7. "ஜானகீகாந்த ஸ்மரணம்"

"இட்டுண்டங்க ஸ்ரீராமசந்திரமூர்த்தி" என்று ராமாயண பாகவதர் சொல்லும் போது —

"உண்டல்லியோ, பாகவதருகாரு! ரெட்டிகாரு ஒச்சினாரு. மொதட்லானுண்டி காணி..." என்றாராம் பொதுஜனம் ஒருவர்.

உடனே ஒரு பெருமூச்சு விட்டார் பாகவதர். தொடர்ந்து, "ஜானகி காந்த ஸ்மரணம்...." என்று ஆரம்பித்தார்.

இப்படி ஒரு பழைய ஹாஸ்யம். இது யாரோ ஒருவருடைய கற்பனைதான். ஆயினும் அதில் ஓர் உண்மை உண்டு. ஒரு விஷயத்தைத் தொடர்ந்து சொல்ல முடியாமல், இடையில் ஒரு குறுக்குக் கதை வந்து புகும் போக்கை, இந்தக் கதையைச் சொல்லி விளங்க வைப்பது வழக்கத்தில் உண்டு.

தலை சுற்றல் மயக்கம் விஷயமாக எழுதிக் கொண்டு வந்த நேரத்தில், அதிர்ச்சி (ஷாக்), அதனால் ஏற்படும் ரத்த அழுக்கம்; விளைவு; என்னும் விஷயத்தில் இந்தக் கதை புகுந்து விட்டது. மறுபடியும் விட்ட இடத்தில் தொடங்குகிறார் பாரதப் பூசாரி.

தலை சுற்றல் மயக்கம் இவை உண்டாவதற்குக் காரணமாகப் பத்து உதாரணங்களைச் சொன்னது நினைவிருக்கும். அவற்றை ஒவ்வொன்றாக எடுத்துப் பரிசீலனை செய்ய வேணுமல்லவா?

1. **பித்தாதிக்கத்தினால்** :— பித்தாதிக்கத்தினால் ஏற்படும் தலை சுற்றல் என்றாலே அதில் ஓரளவு ஜீரணக் கோளாறுங்கூடத் தொக்கி நிற்கும் என்று ஊகிக்கலாம் அல்லவா?

இந்நிலையில் தனித்த தலைசுற்றல் மட்டுமா இருக்கும்? புளித்த ஏப்பமும் வாயில் புளிப்பு அல்லது கசப்புச் சுவையும் இருக்கலாம். பசி இல்லை, உண்டு என்று சொல்ல முடியாத இரண்டும் கெட்ட நிலை. ஆயினும் வயிறு நிறைந்தது போன்ற ஓர் அநுபவம். சாப்பிட ஆவா இராது. ஆயினும் உபவாஸம் இருப்பவன் போல் ஒரு பலவீனம். கண்கள் சிவந்திருக்கலாம். உள்ளங் கால் உள்ளங் கைகளில் ஓர் எரிச்சல். என்றுமில்லாத முறையில் வியர்வை. சிறுநீர் மிகக் குறைந்தும், சிவந்துமிருக்கும்; போகும்போது சிறிது எரிச்சலும் இருக்கும்.

எண்ணெய்க் குளி செய்து நெடுநாட்களாகியிருந்தாலும் இதே குறிகள் இருக்கலாம். ஆனால் இதில் மண்டை உச்சியில் ஓர் எரிச்சல் இருக்கும். தூக்கம் சரிவர இராது. தூக்கமில்லாததால் புசித்த ஆகாரம் சரிவர ஜரிக்காது. பித்தமும் உஷ்ணமும் அதிகரித்துக் கொண்டே போகும். இதைத் தொடர்ந்து தலை சுற்றல் என்றிப்படி ஒன்றைத் தொட்டு ஒன்றாக உபாதைகள் ஏற்படும்.

இவ்விதத் தலை சுற்றலில் எண்ணெய்க் குளி நல்லது. ஆனால் சுட்ட சட்டியில் நீர் ஊற்றினால் போல் இந்த எண்ணெய்க் குளியினால் விளைவு உண்டாகக் கூடாது. ஆகவே, ஏறத்தாழ எண்ணெய்க் குளியின் பலனைக் கொடுக்கக் கூடியதும், ஆயினும் மேற் சொன்ன விபரீதம் விளையாமல் இருக்கும்வண்ணம் ஓர் உபாயத்தைக் கையாள வேண்டியது அவசியம். இதற்கு,

(அ) மினாரு அல்லது வெள்ளை மினாரு, அல்லது வெந்தயம் இவற்றில் ஒன்றைப் பாலில் அரைத்துச் சிறிது பாலிலேயே கலக்கிக் கொஞ்சம் சூடாக்கித் தலைக்குத் தேய்த்துக் கொண்டு — முக்கியமாக உச்சியில் — அதிக நேரம் ஊறாமல் குளிப்பது நல்லது.

(ஆ) மறுநாள் திராக்ஷை, ரோஜாமொக்கு, ஆரக்தாவரை இவற்றினால் செய்த கஷாயத்தைக் குடித்து, ஒன்றிரண்டு முறை மலத்தைப் போக்குவது நல்லது.

(இ) சீந்தில் கொடி, தனியா, ஜீரகம் இவற்றில் ஒவ்வொன்று அரைப் பலம் வீதம் எடுத்துப் பெரும் நூலாக இடித்து, ஓர் ஆழாக்கு ஜலம் சேர்த்து எல்லாவற்றையும் ஒரு மண் பாத்திரத்திலிட்டு, பாத்திரத்தின் வாயை ஒரு மெல்லிய துணியினால் மூடிக் கட்டி இரவு முழுவதும் திறந்த முற்றத்தில் வைத்திருந்து — மறுநாள் காலையில் மருந்துகளைக் கசக்கிப் பிழிந்துவிட்டு ஊறல் கஷாயத்தை வடிகட்டிச் சிறிது சீனி கற்கண்டு சேர்த்து (பூரா சர்க்கரையானாலும் நல்லதுதான்) அதை இரண்டு வேளையாகப் பகிர்ந்து கொடுக்க, பித்தாதிக்கம் குறையும், அசட்டுப்பசி நீங்கும், வாயில் உள்ள அரோசகம் மாறும், தலை சுற்றல் குணமாகும்; நித்திரையும் வரும்.

மேற்படி மருந்துகளில் ஏதாவது ஒன்றை மேலே சொன்ன விகத்தில் ஊறல் கஷாயம் செய்து கொடுத்தாலும் போதும்.

(ஈ) இஞ்சியின் மேல் தோலைச் சீவிக் களைந்த பிறகு அதை மெல்லிய வில்லைகளாக நறுக்கிக் கொள்ளவும். இதில் அரைப் பலத்தை எடுத்துச் சட்டியிலிட்டு வதக்கவும்.



இஞ்சியானது வதங்கித் துவண்டு வரும் போது, கொஞ்சம் தேனும் சேர்த்து ஒரு தரம் புரட்டிய பிறகு அதில் ஓர் ஆழாக்கு ஜலத்தை விட்டுக் காய்ச்சி அரை ஆழாக்காகக் கண்டிய பிறகு இறக்கி வைத்துக் கொண்டு வடி கட்டி வேளைக்கு அரை அல்லது ஓர்

வெளியே மழை பெய்து கொண்டிருந்தது. உள்ளே சங்கீதக் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. பாகவதர் தம் முன்னே வீற்றிருந்த பெரிய மனிதரையே பார்த்துப் பாடிக் கொண்டிருந்தார். ஆனால் பிரமுகர் என்னவோ அங்குமிங்கும் திரும்பியபடியும் எட்டிப் பார்த்தபடியும் இருந்ததைக் கவனித்த சபா காரியதரிசி, அந்தப் பிரமுகரிடம் போய், தமக்குப் பிடித்த பாட்டைப் பாகவதருக்குச் சொல்லி அனுப்பத்தான் பாடுபடுகிறார் என்று நினைத்து, "உங்களுக்கு என்ன வேணும், ஏன் தவிக்கிறீர்கள்?" என்றார்.



உடனே பிரமுகர், "வெளியே போக ஒரு குடை வேணும். அவ்வளவுதான்!" என்று பதிலளித்தார்!

அவுன்ஸாகத் தினம் இரண்டு மூன்று வேளை குடிக்கவும். இதனாலும் பித்தம் உடனடியாகக் குறைந்து அரோசகம் நீங்கும். பசி உண்டாகும். வயிறு இலேசாகும். தலை சுற்றல் மயக்கம் மாறும்.

(உ) வேப்பன் சத்தை முறுக்கிவிட்டுத் தேய்த்து மேல் தோலை நீக்கி வெள்ளைக் கம்பி போல் எடுத்துக் கொள்ளவும். இதைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். சீந்தில் கொடியை முறுக்கி, அதன் மேலேயுள்ள பித்தோலை விடுவித்துப் போக்கி, சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். செம்மரம் என்னும் மரச் சக்கையைச் சிறு தூளாக வெட்டித் தறித்து இடித்துக்கொள்ளவும். சிவப்புச் சந்தனக் கட்டை (இது எது எப்படி இருக்கும் என்றெல்லாம் சந்தேகம் ஏற்படின் வெறும் சந்தனக் கட்டையின்) சிதாளைச் சிறு துண்டுகளாக நறுக்கி இடித்துப் பொடி செய்து கொள்ளவும். அடுத்தபடியாகத் தனியா. இவற்றில் ஒவ்வொன்றும் ஒரு தோலா வீதம் எடுத்தது—மொத்தம் இரண்டரைத் தோலா. இத்துடன் ஓர் ஆழாக்கு தண்ணீரும் சேர்த்து, நாலில் ஒன்றாகக் காய்ச்சி (எட்டு அவுன்ஸ் ஜலத்தை இரண்டு அவுன்ஸ் கஷாயமாக) மருந்துகளைக் கசக்கிப் பிழிந்து களைந்து விட்டு வடிகட்டிக் காலையில் சாப்பிடவும். வேணுமானால் சிறிது கற்கண்டோ அல்லது பூரா சர்க்கரையோ சேர்த்துக் கொள்ளலாம். பித்தாதிக்கத்தினால் ஏற்படும் தலைசுற்றல், மயக்கம், குமட்டல், வாந்தி, ஜூரம், உள்ளெரிச்சல் இவை யாவும் நீங்கும். தாகமிருந்தால் தணியும். ஜூரம் இருந்தாலும் குறைந்துவிடும். பசி உண்டாகும். (கள்ளப் பசியல்ல நிஜப் பசியேதான்!)

2. அடுத்தபடியாகச் சொன்னது சொத்தைப் பல்: பல்லின் மேல்புறமுள்ள எனாமல் என்னும் கவசம் சேதமுறுகிறது. ஆகவே டென்டைன் என்னும் பொருளால் செய்யப்பட்ட பல் — தனது காப்புக் கவசமில்லாமல் ஆகிவிடுகிறது. இது எளிதில் கரைந்து விடும் இயல்பு பெற்றது. குளிர்ச்சி, உஷ்ணம் எதுவுமே தாளாதது. ஆகவே இதுவும் தேய்ந்து மாய்ந்து விடுகிறது. அப்போது பல்லின் மத்தியில் உள்ள இடைவெளியில் வந்து முற்றுப் பெறும் நரம்பின் நாளங்களும், ரத்தக் குழாய்களின் நாளங்களும் ஒருவிதமான காப்புமின்றி நிற்கின்றன. அந்த நிலையில் சிறிது காற்றுப் பட்டாலும் 'ஜில்' லென்று ஒருவித அதிர்ச்சி அழற்சிகளை இந்த நரம்பு நாளங்கள் அடைகின்றன. அதிசூடான அதிக தண்மையுள்ள பொருள்கள் தட்டினாலும், அதிகடினமான பொருள்கள் தட்டினாலும் இந்த நரம்பு நாளங்கள் எவ்விதமான அழற்சி அதிர்ச்சிகளை அடையும் என்பதைச் சொல்ல முடியாது. இவ்வுணர்ச்சிகள் இந்த நரம்புகள் மூலம் மூளையைச் சென்று முட்டுகின்றன. அவ்விடத்திலும் ஓர் அதிர்ச்சியும் அழற்சியும் ஏற்படுகின்றன. இந்த அதிர்ச்சியும் அழற்சியும் மூளையில் உள்ள வேறு கேந்திர ஸ்தானங்களுக்கும் பரவ நேரிடுகிறது. அதனால் ஓர் அழற்சிக் குழப்பம் மூளை முழுவதிலும் ஏற்படுகிறது. அவ்வப்போது தலை சுற்றல் ஏற்படுவதில் ஆச்சரியமென்ன?

ஆனால் இது தாற்காலிகமானதாயிருக்கும். மறுபடி மறுபடியும் இதே விதமாக ஏற்பட நேரிட்டுப் பிறகு அது நீடித்திருக்கவும், நிரந்தரமாக நிலைபெறவும் காரணமாகும். இதற்குச் சிகிச்சை என்ன? எனாமல் போய் விட்டதென்றால் பல்லின் நிலை எப்படி இருக்கும் என்பதைப் புரிந்து கொள்வது சிரமமில்லை.

ஓர் எனாமல் பாத்திரத்தையே உதாரணத்துக்கு எடுத்துக் கொள்ளலாமே! அதில் ஓரிடத்தில் எனாமல் சிறிது பெயர்ந்து போய் விட்டால், அவ்விடத்தின் தோற்றம் எப்படிப் பட்டதாயிருக்கும்? எனாமல் போய் விட்ட (கவசம் போன) பல்லும், எனாமல் பாத்திரத்தின் பாகத்தைப் போலவேதான் தோன்றும். பல்லின் நடுவில் ஒரு கருமையான குழி. இக்குழி சிறிது சிறிதாக ஆழத்திலும் அகலத்திலும் நாளொரு மில்லி மீட்டரும் பொழுதொரு செண்டிமீட்டருமாக விஸ்தரித்துக் கொண்டும் அடுத்த பற்களிலும் வியாபித்தும் 'முன்னேற்றம்' பெறும்.

இதன் விளைவைத்தான் முன்னரே சொல்லியாயிற்றே! சிகிச்சை என்ன? என்பதுதானே சொல்ல வேண்டும்? எனாமல் போன பாத்திரத்தைத் தூக்கியெறிவது போல் சொத்தை பிடித்த (எனாமல் போன) பல்லையும் வேரோடு பறித்து எறிய வேண்டும். இல்லாவிட்டால் இந்தச் சொத்தைப் பற்கள் புதைக்கப்பட்டிருக்கும் தாடையின் எலும்புகளையே சொத்தையாக்கி விடும். அப்போது, பல் புதைந்துள்ள எலும்பில் விரணமேற்படும். இது தாடையின் உட்புறத்திலிருந்து வெளிப்புறத்துக்குப் புரைபோடி ஒரு துவாரம் பருப்பளவில் புண்ணாகி, வெளிப்புறத்தில் சீழ் ஒழுகத் தொடங்கும். இப்புண் ஆறாது. நிரந்தரமான தொல்லைதான் விளைவு. தாடை எலும்பு முழுவதையுமே அரித்துவிடும்—எல்லைப்புறத்துச் சீனர்களைப்போல. ஆகவே, தக்க சமயத்தில் தொல்லைதரும் சீனர்களைக் களைவதுபோல் சொத்தைப் பல்லைப் பறித்தெறிந்து — தலைச்சுற்றலுக்கும் முடிவு காண்பதுதான் சிறந்தது.




ஸ்ட்ராப்புகள் • பிராஸ்லெட்டுகள் • கெடிகாரங்கள்

எல்லா கடிகார டீலர்களிடமும் கிடைக்கும்

CU-BEN-6

# தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்...

கல்ஸாஞ-டியின் நற்பயனே. கருவுற்றிருக்கையில் தாயிடம் கால்சியம் மிகையாகச் செலவாகி விடுகிறது. தாயிடமிருந்துதான் குழந்தையின் எலும்புகள், நகங்கள் இவற்றின் வளர்ச்சிக்கான கால்சியம் போய்ச் சேருகிறது...அதனால் அவளிடத்தில் கால்சியம் பற்றாக்குறை ஏற்படுகிறது. அவளுக்கும் அவள் குழந்தைக்கும் வேண்டிய கால்சியத்தைச் சரிக்கட்டி வைக்க, இந்தப் புத்திசாலியான அன்னை வைட்டமின் செறிவுடன் சேர்ந்த கால்சியம் கொண்ட கல்ஸாஞ-டியை உட்கொண்டு வந்தாள். கால்சியம் பற்றாக்குறையை நிவர்த்திக்க கல்ஸாஞ-டி முற்றிலும் சரியான மருந்தென வருடக்கணக்கான சோதனைகளினால் நிருபணமாகி ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. கல்ஸாஞ-டியினால் தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்.



# கல்ஸாஞ-டி

வைட்டமின் தீவிரச் சேர்க்கையுடைய கால்சியம்

கர்ப்பிணிகள், குழந்தைகளை ஆராட்டும் அன்னைகள் மற்றும் வளரும் குழந்தைகள் இவர்களுக்கு ஏற்றது


நெருக்கடி நிலைமையை உத்தேசித்து ஒருநூறு ரூபாய உடனே கொடுங்க!


நான் தேசபக்தன் இல்லை என்று சொல்வதற்கு இந்த நூறு ரூபாய்!


நெருக்கடி நிலைமை சாக்குத்தான்.
துணிமணிகள் போதுமான அளவுக்கு இல்லை!
வாங்கப் போகிறேன்!
? ?


'டை' யுத்தகால நாகரீக மாடலாம்!
சாமா


நீங்கள் சிங்கப்பூர் கள்ளக் கடத்தல் வகையில், கை கடிகாரம் ஏதேனும் வாங்கியதுண்டா?


ஐயையோ! யார் சொன்னாங்க? இல்லவே இல்லீங்க!


வேணுமா!


அடி அசடே! நான் ஊருக்குப் போறேன்னு நீ அழுதா முடியுமோ? நான் தினமும் தான் போயின்டிருப்பேன்!

# இதோ ஒரு தயான் சந்த்!

துண்டுமணி

அந்த ஹாக்கிப் பந்தயம்தான் தயான் சந்துக்கு 'மந்திரவாதி' என்ற புகழைத் தேடித் தந்தது. ஜீலத்தில் பஞ்சாப் ராணுவத்தின் இறுதிப் பந்தய விளையாட்டு நடந்து கொண்டிருந்தது. ஹாக்கி மன்னர் தயான் சந்த் குழுவினர் தோல்வி அடையும் தறுவாயிலிருந்தனர். அவர்கள் கோஷ்டி மீது இரண்டு 'கோல்' விழுந்து விட்டது. ஆட்டமும் இன்னும் நான்கு நிமிஷங்களே இருந்தது.

இத் தருணத்தில் தயான்சந்தின் ராணுவ அதிகாரி அவரை அழைத்து, ''தயான்சந்த்! நம் குழுவினர் மீது இரண்டு கோல் விழுந்து விட்டது. நீங்கள் ஏதாவதுசெய்ய வேண்டும்!'' என்று வேண்டிக் கொண்டார்.

தயான்சந்த் ஒருவிதத் திர்மானத்தோடு மைதானத்துக்குள் நுழைந்தார். அடுத்த சில நிமிஷங்களுக்குள் தயான்சந்தின் ஹாக்கி மட்டை என்ன இந்திர ஜாலம், மகேந்திர ஜாலம் புரிந்ததோ, எதிர்த்த கோஷ்டி மீது மூன்று கோல்கள் விழுந்து விட்டன. நான்கு நிமிடங்களுக்குள் இந்த அற்புத சாதனையை நிறை வேற்றிய தயான்சந்தை 'மந்திரவாதி' என்று அழைத்ததில் வியப்பென்ன?

தயான் சந்தைப் போல் பல ஹாக்கி வீரர்கள் உருவாகி யிருந்தால் 1928லிருந்து 1960 வரை இந்திய ஹாக்கி வீரர்கள் பாது காத்து வந்த உலக சாம்பியன் பதவியை ரோம் நகரில் ஒலிம்பிக்கில் இழக்க நேரிட்டிருக்குமா? ஜாகர்த்தாவில் ஆசிய விளையாட்டுப் போட்டியிலும் பாகிஸ்தானிடம் இறுதி ஆட்டத்தைத் தோற்கும்படியாகி யிருக்குமா?

'மறுபடியும் நமக்கு உலக வெற்றி வீரர் பெருமைகிடைக்க வழியுண்டா?' என ஏங்கிக் கொண்டிருக்கையில் சென்னை கார்ப்பரேஷன் ஸ்டேடியத்தில் நிகழ்ந்த தேசிய ஹாக்கிப் போட்டியில் 'இதோ ஒரு தயான்சந்த்!' என்று வியப்புறும்படி ரசிகர்களைக் கவர்ந்தார் குருபக்ஷ் சிங். ரயில்வே கோஷ்டிக்கு ரங்கசாமி கோப்பையைப் பெற்றுத் தந்தார். ரயில்வே கோஷ்டியுடன் இறுதி ஆட்டத்தில் போட்டியிட்டவர்கள் சர்வீஸஸ் குழுவினர்.

முதலிலிருந்து கடைசி வரை ரயில்வே ஆட்டக்காரர்களின் கை



ரயில்வே 'கோச்'

ஒங்கி யிருந்தது. ரயில்வே ஆட்டக்காரர்களின் முன்னணி வீரர்களான குருபக்ஷ் சிங், ஹர்பீந்தர் சிங், ஹமீத், பியாராசிங் இவர்களது இணைந்த ஆட்டமே வெற்றியைத் தேடிக் கொடுத்தது.

சர்வீஸஸ் கோஷ்டியில் ஒலிம்பிக்கிலும் ஜாகர்த்தாவிலும் ஆடி, புகழ் பெற்ற கோல்கீப்பர் லக்ஷ்மண், பியாரா சிங், தேஷ்முக், பீட்டர், பாண்டு பட்டீல் ஆகியோர் இருந்தனர். குவார்ட்டர் பைனலில் பம்பாயை வென்று செமி பைனலில் இவர்கள் பஞ்சாபோடு ஆடினர். இந்த செமி பைனல் ஆட்டம் அன்று சுவையான விருந்தாகத் திகழ்ந்தது. கடைசி வரையில் யார் ஜெயிப்பார்கள் என்று சொல்ல முடியவில்லை. சர்வீஸஸ் கோஷ்டியின் கோல்கீப்பர் லக்ஷ்மண் அன்றைய கதாநாயகனாகத் திகழ்ந்தார். இவருக்கு நாலைந்து கைகளும், கால்களும் முளைத்துப் பந்தைத் தடுக்கிறரோ என்று எண்ணும்படி 'நிச்சயமாகக் கோல் விழும்' என்று எண்ணிய பந்துகளை யெல்லாம் அவர் தடுத்து நற்பெயர் தேடிக் கொண்டார். பந்தைத் தேக்குவதிலும் அடிப்பதிலும் மூர்த்தி அன்று அசகாய சூரராக விளங்கினார்.



பஞ்சாப் மானேஜர்

"பழம்பெரும் ஒலிம்பிக் ஆட்டக்காரர் பல்பீர் சிங் கூட கோல் போடவில்லையே!" என்றார் அருகில் இருந்த ஒருவர்.

"அவர் கோல் போடுவதை விடப் போடாமலிருப்பது நலம்!" என்றார் 'கிரிடிக்'.

"ஏன் ஸார் அப்படிச் சொல்கிறீர்கள்?" என்றார் அருகில் இருந்தவர் ஆத்திரத்துடன்.

"ஒரு கோல் போட்டுவிட்டால் போதும், அந்த ஆசாமி மற்ற ஆட்டக்காரர்களின் நெருக்குதலுக்காளாகி, படாத பாடு படும்படியாகும். இந்தக் குதூகலத் தாக்குதலை அவரால் தாங்க முடியுமா? அதனால்தான்!"

---

மேல்படம் ரயில்வே கோஷ்டியினர்: 1. குருபக்ஷ் சிங், 2. காப்டன் மொஹிந்தர்லால், 3. ஹர்பீந்தர் சிங், 4. பியாராசிங், 5. எச். திம்மல், 6. ராஜேந்திர சிங், 7. முருகேஷ், 8. நரேஷ், 9. பலேமன், 10. தர்லோசன்சிங், 11. பிரேம் பக்ஷி, 12. ஹமீத், 13. அலெக்சாண்டர், 14. ஜுபார், 15. ராம்சரண், 16. ஏ. எல். நக்வீ.

கீழேயுள்ள படங்கள்: 1. ஹர்பாஜன்சிங், 2. பியாராசிங், (சர்வீஸஸ்) 3. பம்பாய் காப்டன் பிண்டோ, 4. அம்பாசி முதலியார், 5. அம்பாசி நாயுடு, 6. உத்தம்சிங், 7. சென்னை காப்டன் கர், 8. கோல்கீப்பர் லக்ஷ்மண், 9. டேஸ்மோ, 10. ஆனைநாதன், 11. மூர்த்தி, 12. கதிரேசன், 13. பல்பீர்சிங், 14. பீட்டர், 15. உஸ்மான்கான்.

— சாமா

ஒலிம்பிக் ஆட்டக்காரர்கள் பல்பீர் சிங்கும், உத்தம் சிங்கும், எவ்வளவோ முயன்றும் கோல் இட்டவில்லை என்றால் அந்தப் பெருமை லக்ஷ்மணைச் சாரும். பல்பீர் சிங் தம்மிடம் இன்னும் பழைய ஆட்டம் இருக்கிறது என்பதைப் பல தடவை நிரூபித்தார். பஞ்சாப்காரர்கள் அதிர்ஷ்டமற்றவர்கள். கடைசியாகக் கோல் அடிக்கும் நேரத்தில் ஆட்டம் முடிந்துவிட்டதாக அம்பயர் விசில் ஊதிவிட்டார்! இரண்டு தடவை ஆட்டம் முன்பு 'டிரா'வாகி அலுத்துப் போயிருந்ததனால் மறுபடியும் 'டிரா'வாகிவிட்டால் பொதுமக்களின் பொறுமை என்ன ஆவது? கடவுள் காப்பாற்றினார்! பஞ்சாப் ஆட்டக்காரர்கள் ஹாக்கி ரசிகர்களின் அனுதாபத்தைப் பெற்றனர். 'பெனல்டி கார்னரை'க் கோலாக்கிய பியாரா சிங் சர்வீஸஸுக்கு அன்று வெற்றி தேடிக் கொடுத்தார்.

அன்று இறுதியாட்டம் நடந்துகொண்டிருந்தபோது திடீரென்று விசிலைப் பலமாக ஊதி ஓர் ஆட்டக்காரரை அம்பயர் நாயுடு வெளியில் அழைத்துச் சென்றார். 'எதற்காக இப்படி ஆட்டத்தின் இடையில் ஒருவரை வெளியேற்றினார்' என்று கேட்கிறீர்களா?

ஆட்டம் செவ்வனே நடைபெறுவது அம்பயர்களின் கண்டிப்பைப் பொறுத்தது. அம்பயர்கள் நாயுடுவும் முதலியாரும் மைதானத்துக்கு வந்தால் ரசிகர்களுக்குக் கொண்டாட்டம்தான்! ஆட்டக்காரர் யாராவது சிறிது தப்பாட்டம் ஆடினாலும் இவர்களது கூரிய கண்களுக்குத் தப்ப முடியாது! விசில் ஊதி அந்த ஆட்டக்காரரைச் சிறிது நேரம் ஆட்ட மைதானத்தை விட்டு வெளியேற்றித் தப்பை உணரச் செய்து, ஆட்டத்தைச் செவ்வனே நிர்வகித்தனர்.

'நம் சென்னை ஆட்டக்காரர்கள் என்ன ஆனார்கள்?' என்று நீங்கள் கேட்பது காதில் விழுகிறது. போபாலோடு சென்னை கோஷ்டியினர் குவார்ட்டர் பைனலில் ஆடி வெற்றி பெற்றது ரசிகர்களுக்கு மகிழ்ச்சியை அளித்தது. இந்த ஆட்டத்தில் இளைஞர் உஸ்மான்கானின் திறமையைக் காண முடிந்தது. வருங்காலத்தில் சிறந்த ஆட்டக்காரராகத் திகழ்வார் என்பதற்கான அறிகுறி அன்றைய ஆட்டத்தில் தெரிந்தது. 'செமி பைனல்'லில் ரயில்வே கோஷ்டியினரிடம் சென்னை ஆட்டக்காரர்கள் தோல்வி அடைந்தனர். சென்னை காப்டன் காரும், ஆசைநாதனும் நன்றாக ஆடியும், கதிரேசன் நன்றாகப் பந்தைத் தேக்கியடித்தும் வெற்றி ரயில்வே பக்கம் திரும்பி விட்டது. சென்னைக் குழுவினருக்கு உப்ராய் கோப்பை கிடைத்தது. அவர்கள் வருங்காலத்தில் ஆட்டத்தில் ஆர்வத்துடன் ஈடுபட உற்சாகம் அளித்திருக்கும்.

சென்னை ஸ்டேடியம் மைதானத்தில் மார்ச் 2-ந் தேதியிலிருந்து மார்ச் 23ந் தேதி வரை நிகழ்ந்த தேசிய ஹாக்கிப் போட்டியில் அநேகமாக இந்தியாவில் உள்ள எல்லா ராஜ்யங்களும் கலந்து கொண்டன. இந்தப் போட்டியில் பல நல்ல ஆட்டக்காரர்களின் கைவண்ணத்தைக் காண முடிந்தது. சென்னை ஹாக்கி ரசிகர்களுக்கு இதைக் காண வாய்ப்பளித்த சென்னை ஹாக்கி சங்கத்துக்கு நன்றி தெரிவித்துவிட வேண்டியதுதான்.







"என்ன ராஜு மறுபடியும் பள்ளிக்கூடத்துக்கு 'லேட்'டா?"

"என்னமோ, சீதா! ராஜு விஷமமா என்ன செய்யறதுன்னே தெரியல்லே. எப்பவும் களைப்பா இருக்கான். எதிலும் அலட்சியம். பால்கூட குடிக்கிறதில்லே".

"அவனுக்கு உடம்பிலே சக்தி குறைச்சலா யிருக்கலாம், கமலா. தினந்தோறும் ரெண்டு 'கப்' போர்ன் - வீடா கொடுத்துப் பார். எங்க டாக்டர் எப்பவும் அதைத்தான் சிபார்சு செய்கிறார்"





## அவன் இவ்வளவு சுறுசுறுப்பாக என்றுமே இருந்ததில்லை!

சீதா சொன்னபடி செய்தேன். என் செல்வன் ராஜு நாளுக்கு நாள் அதிக சுறுசுறுப்பு அடைந்து வருகிறான் — எல்லாம் போர்ன்-வீடா தந்த சக்தி.

"பள்ளிக்கூட பஸ் வர ரொம்ப நேரமிருக்கு, ராஜு. இப்பெல்லாம் நீ ரொம்பச் சீக்கிரமா எழுந்து, உற்சாகமா யிருக்கிறயே!"




# BOURN-VITA

சக்திக்கும்
வலிமைக்கும்

தயாரிப்பாளர்கள்:
Cadbury's





# என்றோ ஒரு நாள்

சஞ்சாத்தனம் நிறைந்த மனிதன் ஒருவனுக்கு இனிய மனக்கடைய பிள்ளை ஒன்று பிறந்தாற் போல் அந்தப் பொட்டல் காட்டில் தனியாக அந்த மரம் கிளைகள் விரிப் படர்ந்து நிழல் தந்து கொண்டிருந்தது. மரத்தை ஒட்டினாற் போல் சாலை ஒன்று. அந்தச் சாலை முழுவதும் வெயிலின் கொடுமையால் அவதிப் பட்டாலும் அந்த மரத்தினருகில் மட்டும் அந்தச் சாலையில் நிழல் படர்ந்து குளிர்ச்சியாக இருக்கும். அந்தச் சாலைக்கு அந்த இடம் இதயம் போல. அங்கேதான் வெளியூர் பஸ் ஒன்று வந்து நிற்கும். அதனால் வறுமைத் தீயில் வெந்த ஒருவனுக்கு இதயம் மட்டும் குளிர்ச்சியாக இருப்பதுபோல், அந்தச் சாலை அந்த மரத்தினருகில் மட்டும் சற்றுக் குளிர்ச்சியாக இருந்தது. அந்த மரத்தினடியில் அரை அடிக்குத் தழைகள் நிறைந்திருக்கும். அதில் கால் வைத்து நடந்தாலே பஞ்சு மெத்தையில் நடப்பது போலிருக்கும். கட்டெரிக்கும் வெய்யில் கண்ணில் படாதவாறு மூடிக்கொண்டு அந்தத் தழைக் குவியலில் துண்டைப் போட்டு உடலைச் சாய்த்தால் சில நிமிஷங்களில் இந்த உலகமே மறந்து போகும். அப்படிச் சில பேர்வழிகள் இந்த இன்பத்தை அனுபவித்து லயித்து அந்த வழியே இரண்டு மணி நேரத்துக்கு ஒரு முறை வந்து போகிற பஸ்ஸைக் கோட்டைவிட்டிருக்கிறார்கள்.

ஆனால் அப்படி அங்கே மரத்தடியில் படுத்துக்கொள்ளாமல் 'பஸ் வருகிறதா?' என்று பார்த்துக் கொண்டே இருந்தால் மட்டும் அது வந்து விடுகிறதா? அல்லது அப்படியே வந்தாலும் நிற்குமா? சந்தேகம்தான். ஏதோ 'பலிஞ்சடுகுடு' விளையாடுவது போல் 'வந்தேன்' என்று உறுமிக்கொண்டே வரும். வந்த வேகத்திலே நெளிவு காட்டிவிட்டு ஓடி விடும். தூரத்தில் பஸ்ஸைக் கண்டவுடன் அங்கே உட்கார்ந்திருப்பவர்களெல்லாம் எழுந்துகொள்வார்கள். படுத்திருந்தவர்கள் அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்து அவர்களுடன் பிரயாணம் செய்ய விரும்பும் தழைகளைத் தட்டுவார்கள். மூட்டையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொள்வார்கள். பஸ் அருகே வர வர எல்லோரும் ஆர்வமே வடிவமாய் நின்று அது வந்த வேகத்திலேயே தங்களைத் தாண்டிப் போகும்போது அங்கங்களெல்லாம் தளர்ந்து, ஏமாற்றத்தால் முகம் சோர மறுபடியும் அலுத்துக்கொண்டு உட்காருவார்கள். தட்டிவிட்ட தழைகள்மீதே மறுபடியும் வெறுப்பாய்ப் படுப்பவர்களும் உண்டு. பஸ் கிளப்பிவிட்ட புழுதி மறுபடியும் படிவதற்குள் அவர்கள் சாதாரண நிலைமை அடைந்து விடுவார்கள்.

ஆனால் இன்றோ அந்த மரத்தினடியில் ஒருவரையும் காணோம். வெய்யிலோ கண்கள் பூத்துப் போவது போலக் காய்ந்துகொண்டிருந்தது. மரத்திலே கூடு கட்டி வாழ்ந்த பறவைகளும் குஞ்சுகளும் அமைதியாய் முடங்கிக் கிடந்தன. துள்ளித் துள்ளிக் கிளைக்குக் கிளை தாவும் அணிற்பிள்ளைகள் சோர்ந்து கிடந்தன. உலகமே இயக்கம் அற்றுப் போனது போல ஓர் அமைதி.

ஒரே ஒரு இளைஞன் மட்டும் தலையில் துண்டைப் போட்டுக் கொண்டு வியர்த்து விறுவிறுக்க இந்த மரத்தை அடையும் ஒற்றையடிப் பாதை வழியே வந்துகொண்டிருந்தான். ஒன்றரை மைல் தொலைவிலுள்ள கிராமத்திலிருந்து வருகிற ஒற்றையடிப் பாதை. இந்தப் பாழும் வெய்யிலில் தீய்ந்துபோன நிலத்தில் ஒற்றையடிப் பாதை கூடச் சரியாகக் கண்ணுக்குத் தெரியாது. தலை நரைத்த கிழவியின் வகிட்டைப் போல் அந்த ஒற்றையடிப் பாதை வழியே மெல்ல வந்து கொண்டிருந்தான் அந்த இளைஞன்.



# ஐ. சாமிநாதன்

நல்ல சிவப்பான அவன் நிறத்துக்கும் வெய்யிலுக்கும் தீப்பிழம்பு ஒன்று நடந்து வருவது போல் இருந்தது. அவன் மரத்தின் நிழலை அடைந்ததும், 'உஸ்' என்று பெருமூச்சு விட்டான். துண்டால் முகத்தைத் துடைத்துக்கொண்டான். அவன் முகம் பளிச்சென்று இருந்தது. வெறும் வேஷ்டி மட்டும் கட்டிக் கொண்டிருந்தான். நல்ல வளர்ச்சி, திண்மையான தோள்கள். கொஞ்சம்கூடப் பரபரப்பில்லாமல் தன்னை இந்தப் புதிய இடத்துக்கும், நிழல் இன்பத்துக்கும் தயார் செய்து கொண்டு கொஞ்சமும் நம்பிக்கையில்லாமல் பஸ் வருகிறதா என்று பார்த்தான். கல்யாணக் கும்பலை அடைத்துக் கொண்டு ஒரு மாட்டு வண்டி தான் ஊர்ந்து வந்தது. பஸ் வருவதற்கான அறிகுறியே இல்லை.

இளைஞன் துண்டைத் தரையில் விரித்துக் கொண்டான்; மல்லாந்து படுத்தான்.

அவன் பெயர் சுந்தரம். ஆளுக்கு ஏற்றாற் போல் பெயர் இருந்தால் அது தானாக அமைந்த ஓர் அமைவே அல்லாமல் ஆளை நினைத்து வைத்ததாகச் சொல்ல முடியாது. அப்படி அவனுக்குப் பெயர் பொருத்தமாக அமைந்திருந்தது. சுந்தரம் மெல்லச் சிரித்துக் கொண்டான், இந்தப் பெயர்ப் பொருத்தத்தை நினைத்து. ஆனால் இந்த அழகான உடலில் இடது தோளில் மட்டும் கருப்பாகத் திட்டாய் ஒரு வடு இருந்தது. அதைச் சிரித்துக் கொண்டே தடவிக் கொண்டான். அந்த வடு போக்க முடியாத ஒரு வடு. பாரத்தைத் தாங்கி ஏற்பட்ட வடு. பதினைந்து வயதிலேயிருந்து சுமந்து சுமந்து ஏற்பட்ட வடு.

அவன் தான் இந்தத் தொழிலுக்கு வந்ததை நினைத்துப் பார்த்தான்.

அவனுக்குத் தாயும் தந்தையும் செய்த காரியம் பெயர் வைத்தது ஒன்றுதான். அவனுக்கு வயது இரண்டாவதற்குள் குடும்பமே யுத்தத்தில் மாய்ந்து போக பர்மாவிலிருந்து இவனை மட்டும் யாரோ அழைத்து வந்தனர்.

அவனது இரண்டாவது வயதில் அவனுக்கு மிஞ்சியது அவனும் அவன் பெயரும், அவன் அழகும். ஆனால் இவற்றை வைத்துக் கொண்டு மட்டும் அவனால் உயிர் வாழ முடிந்ததா? யாரோ ஒருவர் இரக்கப்பட்டு பத்து வயது வரை வளர்த்தார். பிறகு அவரும் கைவிடவே, அன்று முதல் மூட்டை தூக்கியும், பல சிறிய வேலைகளைச் செய்தும், வாழ்க்கையை ஓட்டுகிறான்; இல்லை, வாழ்க்கை அவனை ஓட்டுகிறது. பதினைந்து வயது வரை பல்லைக் கடித்துப் பார்த்தான். அப்புறம்தான் பக்கத்துக் கிராமத்தில் இருப்பவர் இந்தத் தொழிலுக்கு அழைத்தார்.

உயிர் வாழ்பவர்களை நம்பி நம்பிச் சோறில்லாமல் கஷ்டப்படுவதை விடச் செத்தவர்களை நம்பினாலாவது அரை வயிற்றுக் கஞ்சி கிடைக்குமே என்று இந்தத் தொழிலை மேற்கொண்டு விட்டான். இந்தத் தொழில் நசிக்காத தொழில். பிறந்தவன் சாக வேண்டும் என்ற நியதி இருக்கும் வரை, செத்தவனைச் சென்று சேர்க்க வேண்டும் என்ற அவசரம் இருக்கும் வரை இந்தத் தொழிலுக்கு ஏது ஆபத்து? அந்தக் கடைசி யாத்திரைக்குத் தலை சுந்தரம். அவனிடத்தில் பேரமே கிடையாது. யாரும் அவனிடத்தில் பேரம் பாராட்ட முடியாது. சின்ன மனிதனானாலும் பெரிய மனிதனானாலும் அவன் கடைசியில் சுமந்தாக வேண்டும்.

சுந்தரம் சுமந்து சுமந்து ஏற்பட்ட வடுவை மறுபடியும் தடவிக் கொண்டான். அவன் வாழ்க்கையில் மற்றவர்கள் அழுவதைக் கேட்டுக் கேட்டு அவனுக்கு அலுத்துப்போய் விட்டது. எந்த வீட்டுக்கு அவன் போனாலும் அழுகைதான் அவனை வரவேற்றது. துன்பங்களிலேயே கொடிய துன்பமான இந்தச் சாவு அவனைப் பொறுத்தமட்டில் வாழ வைத்துக் கொண்டிருந்தது.

எப்படியோ உப்புச் சப்பு இல்லாமல் பத்து வருஷங்களை ஓட்டியாகி விட்டது. எல்லோராலும் விரும்பப்படாதவனாயும் ஆனாலும் அவசியமானவனாகவும் காலத்தை ஓட்டிவிட்டான். இடையே ஒரு நிகழ்ச்சி மட்டும் காரிருளில் மின்னல்போல் நிகழ்ந்தது. அது ஒன்றே அவன் நினைவில் எப்போதும் நிற்கக்கூடியது.

மூன்று வருஷங்களுக்கு முன் அவனுடைய கிராமத்துக்கு யாரோ ரிடையர்ட் ஸ்டேஷன் மாஸ்டர் குடிவந்தார். அவரைப் பற்றி எல்லாம் சுந்தரத்துக்குத் தெரியாது. ஆனால் ஒரு நாள் குளத்தில் இவன் குளித்துக் கொண்டிருந்தபோது தாமரை மலர் போல் ஒரு பெண் அதன் வழியே ஆற்றுக்குத் தண்ணீர் கொண்டுவரச் சென்றுகொண்டிருந்தாள். குளத்தில் ஒருமுறை முழுகி எழுந்தவுடன் தேவதைகள் நிறைந்த புதிய உலகத்துக்கு வந்தது போல் அவன் முன்னே அவள் நடந்து கொண்டிருந்தாள். அவளுடைய சிவந்த அழகிய மேனியில் தண்ணீர் முத்து முத்தாய் நின்று சூரியனுடைய வெய்யிலில் பளிச்சென்று மின்னியது. அவனும் ஒரு கணம் நின்று அவளைப் பார்த்தான். அவன் கண்களிலே அவளையும் அவள் கண்களிலே அவனையும் இருவரும் பார்த்தனர். அவன் குளித்துவிட்டு உடம்பைத் துடைத்துக்கொண்டு குளக்கரை விட்டு வந்தபோது அவள் ஆற்றிலிருந்து நிறைகுடத்துடன் அழகு நிறைநடையாள் வந்து கொண்டிருந்தாள். மெல்ல மெல்ல இந்தப் பார்வை வளர்ந்து நட்பாக மாறியது.

"சுந்தரி! டைப்பிஸ்ட் வேலை கிடைத்து விட்டதா?"

"ஓ! நேற்றிலிருந்து வேலைக்குப்போகிறேன்."

"மானேஜர் எப்படிப் பட்டவரோ?"

"ரொம்ப ரொம்ப நல்ல மாதிரி. நான் டைப் அடித்துக் கொடுத்த காகிதத்தைப் பார்த்ததும் உடனே எனக்குப் புதுசா ஒரு அகராதியைப் பரிசாக வாங்கிக்கொடுத்தார்!"

"தம்பி! யாருக்கு இத்தனை நேரமாய்க் காத்துக் கொண்டிருக்கிறாய்?" என்ற குரலைக் கேட்டுக் கண்களைத் திறந்தான் சுந்தரம்.

"நான் வந்து அரை மணி ஆயிற்று!"

கேள்வியைக் கேட்டவர் அமர்ந்துக் கொண்டு, "அப்படியென்றால் இன்னமும் காத்துக் கொண்டிருக்க வேண்டும்" என்று கூறி உட்கார்ந்து கொண்டார். அவர் உட்கார்ந்தவுடன் இன்னொரு கிழவரும் வந்து இவர்களுடன் பேசாமல் உட்கார்ந்தார்.

"தம்பிக்கு என்ன வேலையோ?"

சுந்தரம் கேள்வி தனக்கில்லாதது போலச் சும்மா இருந்தான்.

"தம்பி, உன்னைத்தான்!" என்று கிழவர் மறுபடியும் கேட்டார். உடனே அவன் தன் தோளை, அந்தத் தோளில் இருந்த கறுப்புத் திட்டைக் காட்டினான்.

"சரியாகப் போயிற்று! நான் மனிதர்களை உயிரோடு தூக்குகிறேன். நீ மனிதர்களை உயிரில்லாமல்... —நான் திருக்கழுக்குன்றத்தில் 'டோலி' தூக்குபவன். மேலே ஏற முடியாதவர்களை யெல்லாம் டோலியில் அழைத்துச் செல்வேன்" என்று அந்தக் கிழவர் பொக்கை வாயைத் திறந்து சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டுச் சுந்தரத்தின் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவரை "உனக்கு என்ன வேலை?" என்ற கேள்வியைக் கண்ணாலேயே கேட்டார். அவருக்கு நாற்பது வயது இருக்கும். அவர் சொன்னார்: "நான் பக்கத்துக் கிராமத்தில் கோயிலில் வேலை செய்பவன். உற்சவ காலத்திலும் சாமி ஊர்வலத்தின்போதும், தூக்குபவன்" என்று சற்றுப் பெருமையுடன் கூறிக் கொண்டார். அந்த மரத்தை அடையும் மூன்று ஒற்றையடிப் பாதைகள் வழியேயும் ஒன்றில் சாமி தூக்குபவனும், இன்னொன்றில் ஆசாமி தூக்குபவனும் மற்றொன்றில் ஆசாமிக்கு உயிரில்லாமல் தூக்குபவனுமாக வந்து அந்த மரத்தடியில் அமர்ந்து கொண்டு பேசிக் கொண்டிருந்தனர். சுந்தரம் சாமி தூக்குபவனை ஏதோ ஒரு பெரிய மனிதனைப் பார்ப்பது போலப் பார்த்தான். சற்று நகர்ந்து உட்கார்ந்து கொண்டான். "நான் நாற்பது வருஷமாய் டோலி தூக்குகிறேன்" என்று கிழவர் சொல்லிவிட்டுத் தோளில் இருந்த துண்டை நீக்கினார். நடுத்தர வயதுக்காரரும் "நான் பதினைந்து வருஷமாய்க் கோயிலில் சாமி தூக்குகிறேன்" என்று தம் தோளில் இருந்த வடுவைக் காண்பித்தார். சுந்தரம் கைவிரல்களை விரித்துப் பத்து என்று தன் அனுபவத்தைச் சொன்னான்.

மற்ற இருவரும் நல்ல சிவப்பான உடம்பில் தோளில் மட்டும் வடு இருப்பதைக் கண்டனர். கிழவர் சொன்னார்: "யார் எதைச் சுமந்தால் என்ன? சாமி தூக்கினால் என்ன, ஆசாமி தூக்கினால் என்ன, ஏற்படுகின்ற வடு ஒன்றே. காரணம் நாம் எல்லாரும் சுமக்கிறது இந்த வாழ்க்கைச் சுமையைத்தான். இந்தப் பெரும் பாரத்தைச் சுமந்து நமக்குத் தோளில் வடு உண்டாகியிருக்கிறது."

இதைக் கேட்டுச் சுந்தரத்துக்கு ஆறுதலாக இருந்தது. சாமி தூக்கும் சாமியப்பன் சொன்னான்: "எனக்குச் சாமியின் சுமைகூட அவ்வளவு சுமையாகத் தோன்றவில்லை. ஆனால் சாமியோட போன வருஷம் வரை உட்கார்ந்த அந்தக் குருக்கள் ஐயா பாரம் தான் தோளை அழுத்தியது. இப்ப வந்திருக்கிற குருக்கள் ஐயா நல்லவர். ஒடுங்கிய சிறு உடம்பு. அந்தக் குருக்களையாவைச் செத்தப் புறம் சுமந்தவன் பாடு திண்டாட்டம்."

"யார் கண்டது? நாளைக்குத்தான் இருக்கும். நீங்கள் குருக்களையா என்று பெயரில் சுமந்தீர்கள். நான் அந்தப் பெயரில்லாமல் சுமந்திருப்பேன்" என்றான் சுந்தரம் சிரித்துக் கொண்டே. பிறகு தொடர்ந்து "உங்களுக்கெல்லாம் தேவலை. உற்சவம் என்று உங்களுக்கு முன்னமேயே தேதி தெரியும். டோலி தூக்கும் கிழவருக்கும், உங்களுக்கும் நிச்சயம் வருமானம் உண்டு. ஆனால் என் வருமானத்துக்கு நாள் கணிக்க முடியாது. நாளைப் பதிப்பவன் சொல்லிவிட்டா வருகிறான்? குண்டுக்கல்லாய் இருப்பவன் 'பொக்'கென்று போய் விடுகிறான்."

"ஆமாம். அந்தச் சௌகரியம் எங்களுக்கு உண்டு" என்று கிழவரும் சாமியப்பனும் ஆமோதித்தனர். சாமியப்பன் "நீவிர் செய்வதும் சேவைதான். கிழவர் டோலியில் வயசானவர்களை அழைத்துப் போகிறார். அவர்களுக்குப் புண்ணியம் வருகிறது. இவருக்குப் பசி போகிறது. நான் கோயிலுக்கு வராத சோம்பேறிகளுக்கு அவர்கள் இருக்கிற இடத்திலேயே சாமியைத் தூக்கிக் கொண்டு போகிறேன். இந்தப் பையனோ நமக்குச் சொந்தம், சொந்தம் என்று நினைக்கிற இந்த உடல் நமக்குச் சொந்தமில்லை என்று எல்லோருக்கும் செய்கிறான்" என்று பெருமையுடன் சொன்னார். அவர்கள் மூவருக்கும் தாங்கள்தாம் உலகத்திலேயே மிகப் பெரிய மனிதர்கள் போலக் கர்வம் வந்தது.

அப்போது ஒரு குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஓர் இளம் பெண் அங்கே வந்தாள். மூவரும் பேச்சை நிறுத்தினர். தங்கள் மூவரோடு ஒட்டாத ஒருத்தி வந்து நின்றவுடன் கிழவர் தாங்கள் என்னவோ ஒரு வகை போலவும் அவள் அந்நியப் பெண் போலவும் அவளைப் பாராமல் இருந்தார். ஆனால் அந்தப் பெண்ணின் கையிலிருந்த அழகான குழந்தையை அவரால் பார்க்காமல் இருக்க முடியவில்லை. சாமியப்பன் அந்த இளம் பெண்ணைப் பார்த்தபோது அவருக்குத் தம் பெண்ணின் ஞாபகம் வந்தது. சுந்தரம் அவளை நன்றாகப் பார்த்தான். அவள்... அவள்!

குளத்தங் கரையில் கண்டு, பார்வை வளர்ந்து நட்பாக மாறியது. இளம் சுந்தரமும் அந்தப் பெண்ணும் கண்ணால் பேசிக்

> நாம் தேவராவோம். பிறகு மற்றவர்களையும் தேவராக்குவோம். 'தேவர் ஆவோம்; தேவர் ஆக்குவோம்'—இதுவே நம்முடைய இலட்சிய வாசகமாகட்டும்.
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

கொள்வார்கள். பழைய சிவன் கோவிலுக்கு யாரும் வருவதில்லை என்பது தெரிந்தவுடன் அந்தப் பெண்ணுக்கும் சுந்தரத்துக்கும் அந்தப் பழைய சிவன் கோவில் மீது புதிய பக்தி தோன்றியது. முன்பு கண் செய்த காரியத்தை இப்போது வாய் செய்தது. "உங்கள் வேலை என்ன?" என்று ஒரு நாள் அவள் கேட்டாள். அவன் அதற்குப் பதில் சொல்லாமல் மழுப்பிவிட்டான். அவள் அப்புறம் அதைக் கேட்பதையே விட்டுவிட்டாள். அவர்கள் பழகி ஒரு மாசமே ஆகியிருந்தது. பல வருஷம் பழகியதுபோல நெருக்கம் உண்டாயிற்று.

ஒரு நாள் அந்த ஊர் மிராசுதார் தம் பட்டங்களெல்லாவற்றையும் துறந்துவிட்டுத் தன் சொத்தைத் துறந்துவிட்டு, தான் போற்றி வளர்த்த உடலைக்கூடத் துறந்து விட்டுக் கட்டையாய்க் கிடந்தபோது சுந்தரம் அவருடைய கடைசி யாத்திரைக்குத் துணையாகப் போனான். அப்படி அவன் நடந்து கொண்டிருந்தபோது எதிரே வந்துகொண்டிருந்தாள் அந்தப் பெண். கையில் பூஜைத் தட்டுடன். தட்டு நிறையப் பூ, பழம், இவற்றுடன் சிவன் கோவிலுக்குச் சிவனையும் தரிசிக்கப் போய்க் கொண்டிருந்தாள். சுந்தரம் தன் எதிரே வரும் அவளைக் கண்டு திடுக்கிட்டான். தன் முகத்தைக்கூட மறைத்துக்கொள்ள முடியவில்லை. வேறு திசையை நோக்கி முகத்தைத் திருப்பிக் கொண்டான். திடீரென்று 'தடால்' என்று தெரு ஓரத்தில் வெண்கல ஒலியுடன் தட்டு விழும் சத்தம் கேட்டது. அவன் பார்த்தான். அவள் இவனைக் கண்டு அப்படியே அதிர்ச்சியில் கண்கள் நிலைத்து நிற்க, கையிலிருந்த தட்டை நழுவ விட்டு, தட்டிலிருந்த பூவும், பழமும் கீழே தெறி அலங்கோலமாக..... அவள் கண்களும், அதிர்ச்சி நிறைந்த அவள் முகமும்... ஏதோ செய்யத் தகாத காரியத்தை இதுவரை செய்தது போலப் பயந்து ஓடியே விட்டான்.

அந்தப் பார்வையோடு அந்த நட்பும் முடிந்துவிட்டது. அவன் சிவன் கோவிலுக்குப் போய்ப் பார்த்தான். குளத்தங் கரையில் எதிர்பார்த்தான். அவள் வருவாளா என்ன!

அவன்தான் இப்போது இங்கே வந்திருக்கிறான்.

"உன்னை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறதே" என்று பெரியவர் அவனைப் பார்த்துக் கேட்டார். அவன் யோசித்துப் பார்த்தான். "ஆ! இப்போது நினைவிருக்கிறது. நான் எட்டு வருஷங்களுக்கு முன் திருக்கழுக்குன்றம் வந்தபோது மலை ஏறுகையில் வழுக்கி விழுந்து மண்டையில் காயம் பட்டுவிட்டது. அப்போது டோலி தூக்கிக் கொண்டு வந்த நீங்கள் சட்டென்று அதில் இருந்த வயசான அம்மாளை இறக்கிவிட்டு என் மண்டையில் உங்கள் துண்டைக் கிழித்துக் கட்டி என்னை உங்கள் டோலியில் அழைத்துச் சென்றீர்கள்" என்றான். "ஆமாம், ஆமாம்" என்று பெரியவர் அவனைப் புரிந்து கொண்ட சந்தோஷத்தினால் பொக்கை வாயைத் திறந்து சிரித்தார். சாமியப்பன், "நான்கூட உன்னைப் பார்த்திருக்கிறேன். நீ தினமும் உன் சின்ன வயசில் சாமி பக்கத்தில் உட்கார வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பாய். நான் உன்னை நாலைந்து நாட்கள் சாமி அருகில் உட்கார வைத்திருக்கிறேன்" என்றான். அவன் தன்னை ஒரு காலத்தில் சுமந்த இருவரையும் பார்த்தான். சுந்தரமோ திரும்பி உட்கார்ந்திருந்தான். அவன் மீது பார்வையை ஓட்டினாள் அவள். முகம் தெரியாவிட்டாலும் தோள் தெரிந்தது. தோளில் இருந்த கறுப்புத் திட்டுத் தெரிந்தது. மறுபடியும் அதிர்ச்சியால் முகம் வெளிறிப் போயிற்று. "அவனா....அவனா....?" அப்படியே பேச முடியாமல் இருந்தாள் அந்தப் பெண். தோளில் இருந்த வடுவை அவன் குளத்தில் குளிக்கும்போது பார்த்திருக்கிறாள். அவனேதான். ஐயோ அவனேதான்!

'உர்'ரென்று உறுமிக்கொண்டு பஸ் வந்தது. அப்போதுதான் அவள் நினைவிலிருந்து மீண்டாள். உடனே அவனுடைய கண்களும், அவளுடைய கண்களும் சந்தித்தன.

நல்ல காலமாகப் பஸ் நின்றது. கண்டக்டர் தலையை எட்டிப் பார்த்தான். "இரண்டு பேருக்குத்தான் இடம் இருக்கிறது. அந்தப் பெண் ஏறிக்கொள்ளலாம். பிறகு உங்களில் ஒருவர் ஏறிக்கொள்ளலாம்" என்றான். பெரியவரும் சாமியப்பனும் திகைத்து நின்றனர்.

கண்டக்டர் சொன்னான்: "உங்களில் யாரை ஏற்றிக்கொள்வது என்று அந்தப் பெண்ணே சொல்லட்டும்."

பெரியவர் அந்தப் பெண்ணைப் பரிதாபமாகப் பார்த்தார், 'நான் ஒரு காலத்தில் உன்னைச் சுமந்து உனக்கு உதவி செய்தேன்' என்று கெஞ்சுகின்ற விழிகளுடன்.

சாமியப்பனும் 'நானும் உன்னைச் சுமந்து உனக்கு உதவி செய்தேனே' என்பதுபடி பார்த்தான். சுந்தரம் எந்த விதமாக அவளைப் பார்க்க முடியும்? 'நான் உனக்கு ஒரு காலத்தில் உதவி செய்வேனே' என்று பார்க்க முடியுமா என்ன?

அவள் மூவரையும் மாறி மாறிப் பார்த்தாள். கண்டக்டர் "சீக்கிரம்" என்றான்.

அவள் முகத்தைத் திருப்பிக்கொண்டு ஆள் காட்டி விரலினால் மட்டும் சுந்தரத்தைச் சுட்டிக் காட்டினாள். ஆச்சரியத்துடன் சுந்தரம் பஸ்ஸில் ஏறிக்கொண்டான். அவளும் ஏறிக்கொண்டாள். பஸ் புறப்பட்டுவிட்டது.

பெரியவரும் சாமியப்பனும் ஒன்றும் புரியாமல் பெருமூச்சு விட்டனர்.

டோலியில் இடம் கொடுத்துச் சுமந்தவனை விட, சாமி பக்கத்தில் இடம் கொடுத்துச் சுமந்தவனை விட, என்றோ ஒரு நாள் இதயத்தில் இடம் கொடுத்துச் சுமந்தவனே ஒரு பெண்ணுக்கு மேலானவன் என்று அவர்கள் அறிவார்களா என்ன?

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

